தமிழ் மரபு அறக்கட்டளை

பன்னாட்டு அமைப்பின்

# *தமிழ் மரபுத் திணை காலாண்டிதழ் — 36*

## *Tamil Marabu Thinai — 36*

*ஏப்ரல் — 2024 இதழ்*




ஆசிரியர் : முனைவர் க. சுபாஷிணி

பொறுப்பாசிரியர் : முனைவர் தேமொழி

இணை பொறுப்பாசிரியர் : குமரன் சுப்ரமணியன்

# Tamil Marabu Thinai
# தமிழ் மரபுத் திணை

சென்னை மியூசிக் அகாதெமி 2024 ஆம் ஆண்டின் சங்கீதக் கலாநிதி விருதை இசைக் கலைஞர் டி. எம். கிருஷ்ணா அவர்களுக்கு வழங்கிச் சிறப்பிக்கிறது. இதையொட்டி எழுந்த விவாதங்களுக்கு விளக்கம் அளிக்கும் வகையில் "தமிழும் இசையும்: இசை என்ற சொல்லின் ஆழமும் அகலமும்" என்ற தலைப்பில் ஆர். பாலகிருஷ்ணன், இ.ஆ.ப. அவர்கள் இந்த இதழுக்கு ஒரு சிறப்புக் கட்டுரை வழங்கியுள்ளார்.

தமிழிசைப் பாடகர்களைச் சிறப்பிக்கும் வகையில் முன்னட்டைப் படத்திற்கான ‘தமிழிசைப் பாடகர்‘ எண்ணிம ஓவியம் செயற்கை நுண்ணறிவு உதவியுடன் முனைவர் தேமொழியால் உருவாக்கப்பட்டது.




E-Journal Web Link:
https://tamilmarabuthinai.blogspot.com/
The E-Journal of Tamil heritage Foundation International:
https://tamilheritage.org/





~*~*~*~*~*~*

குறிப்பு:
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவின் வெளியீடு இது. இந்த நூல் தமிழ் ஆய்வுப்புலத்தின் தேவை கருதி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படுகிறது. இந்நூலை மறுபதிப்பு செய்ய விரும்புவோர் அல்லது ஏதாவது ஒரு வகையில் தங்கள் படைப்புகளில் பயன்படுத்த விரும்புவோர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினைத் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று உசாத்துணைகளை வழங்கி மீள்பதிப்பு செய்யலாம்.
- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவு

https://tamilheritage.org/

# உள்ளடக்கம்


இனிய
சித்திரைத் திருநாள்
நல்வாழ்த்துகள்

# தலையங்கம்

— முனைவர் க. சுபாஷிணி

வணக்கம்.



இக்காலாண்டிதழ் வழி உங்கள் அனைவரையும் சந்திப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றேன்.

தமிழ்ச் சூழலில் இன்று நூல்கள் வாசிப்பு வளர்ச்சிகண்டு வருகின்றது. இது மிக ஆரோக்கியமான ஒரு வளர்ச்சி. புதிய தமிழ் நூல்கள் பதிப்பு ஒவ்வொரு ஆண்டும் அதன் எண்ணிக்கையில் அதிகரித்துக் கொண்டே வருகின்றது. இதற்குச் சான்றாக தமிழ்நாட்டில் நடைபெறுகின்ற புத்தகக் கண்காட்சிகள் பெரு நகரங்களில் மட்டுமல்லாது சிறுநகரங்களிலும் இன்று பரவி வருவதைப் பற்றிய செய்திகள் செய்தி ஊடகங்களில் வருவதைக் காண்கின்றோம். தமிழ்நாட்டின் எல்லாப்

பகுதிகளிலும் வாழ்கின்ற தமிழ் மக்கள் தமிழ் நூல்களைப் பெறுவதற்கு இவ்வகையான கண்காட்சிகள் பேரளவில் உதவுகின்றன.

தமிழ் சிந்தனையில் உருவாக்கம் பெறுகின்ற நூல்கள் வேற்று மொழிகளிலும் மொழிபெயர்ப்பு செய்யப்படுவது காலத்தின் கட்டாயம். ஆங்கிலம் மட்டுமன்றி ஐரோப்பிய மொழிகள், மத்தியக் கிழக்காசிய மொழிகள், அரேபிய மொழிகள், தென்கிழக்காசிய மொழிகளில் தமிழ் நூல்கள் மொழிபெயர்ப்பு செய்யப்படும் போது சமகாலத் தமிழ் சூழ்நிலையை, தமிழ்ச் சிந்தனையை, தமிழ்ப் பண்பாட்டை, தமிழர் வரலாற்றை வேற்று மொழி பேசும் வேற்று இனத்தோர் அறிந்து கொள்ள சிறந்த வாய்ப்பை இது வழங்கும். மிக மெதுவாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த தமிழ் நூல்கள் மொழிபெயர்ப்பு என்பது இந்த ஆண்டின் தொடக்கத்திலேயே தமிழ்நாடு அரசின் அனைத்துலக புத்தகக் கண்காட்சி நிகழ்வின் காரணமாக மிகுந்த பாய்ச்சலுடன் வேகம் எடுத்து இயங்கத் தொடங்கி இருக்கின்றது என்பதைக் காண்கின்றோம். இது வரவேற்கத்தக்க ஒரு செயல்பாடாகும்.

தமிழ்நாடு மட்டுமன்றித் தமிழ் நூல்கள் கண்காட்சி அயல்நாடுகளில் செயல்படுத்தப்பட வேண்டியதன் தேவை இருக்கின்றது. தற்சமயம் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் தமிழ் நூல்கள் கண்காட்சி,

வருகின்ற காலங்களில் மேலும் விரிவாகச் செயல்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டிய அவசியம் இருக்கின்றது. இதன் வழி அயல்நாடுகளில் வாழ்கின்ற லட்சக்கணக்கான தமிழ் மக்கள் தமிழ் நூல்களைப் பெறவும், புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழ்ச் சமூகம் தமிழ் நூல் வாசிப்பைக் கைவிடாது தொடரவும் இது வழிவகுக்கும்.

இந்தக் காலாண்டிதழ் பல்வேறு தலைப்புகளில் அறிஞர்களது கட்டுரைகளைத் தாங்கி மலர்கின்றது. ஒவ்வொரு கட்டுரையும் முன்வைக்கின்ற கருத்துக்கள் தமிழ்ச்சமூகத்தின் சிந்தனைக்கு விருந்தாக அமையும். கட்டுரைகளோடு நூல் திறனாய்வுகளும் நூல்கள் பற்றிய செய்திகளும் இந்தக் காலாண்டிதழைச் சிறப்பிக்கின்றன.

விரிவான நூல் வாசிப்பும் தரமான ஆய்வு சிந்தனையும் தமிழ்ச் சமூகத்தின் சிந்தனைப் போக்கிற்கு உரமாக அமையும். தொடர்ந்து வாசிப்போம் தமிழர் சிந்தனைக்கு வளம் சேர்ப்போம்!

தமிழால் இணைவோம்!

அன்புடன்
முனைவர் க சுபாஷினி
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

# 1. தமிழும் இசையும்: இசை என்ற சொல்லின் ஆழமும் அகலமும்

— ஆர். பாலகிருஷ்ணன், இ.ஆ.ப .

தமிழ் ஆகச்சிறந்த ஓர் இசைமொழி.
பாணரும் பறையரும் துடியரும் பொருநரும் கூத்தரும் விறலியரும் பாடல் ஆடல் பாங்குடன் வளர்த்த இசைத் தமிழ்.
இந்தச் சொல்லாடல்களைப் பாருங்கள்: ( தரவு: தமிழ்ப் பேரகராதி - Tamil Lexicon). இச்சொற்களின் ஆக்கமுறையை (lexical encoding) உற்று நோக்குங்கள்.
அடிப்படையில் இசை என்பது ஓர் ஆக்கச் சொல்.
இசை என்பது இசை ( music )மட்டும் அல்ல அதாவது "சங்கீதம்" "சங்கதி" போன்ற விஷயங்கள் மட்டும் அல்ல.
இசை என்பது பொருந்துதல்; இசை என்பது இயைதல்; இசை என்பது புகழ், தகுதி. இசை என்பது இனிமை.
இசைவு என்பது உடன்பாடு. உடன்படாமைக்கு, முரண்பாட்டிற்கு தமிழில் "இசைவு கேடு" என்று பெயர். இசைஞர் என்பது அடிப்படையில் பாணர்.
செவிக்கு தமிழில் இசைப்பொறி என்பது

இன்னொரு பெயர். இசைத்தமிழ் முத்தமிழில் இடைத் தமிழ்!

"கச்சேரி" என்பது நேற்று வந்தது. "கச்சேரி" என்பதற்கு காவல் நிலையம் என்று கூட ஒரு பொருள் உண்டு.!
பறையே ஆதி இசைக்கருவி.
பாணரும் பறையரும் வித்திட்டு வளர்த்ததே இசையின் வேர்!
நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளின் கருப்பொருள்களின் பட்டியலில் பறை, யாழ் போன்ற இசைக்கருவிகளும் உண்டு. தொல்காப்பியம் சொல்லும் வண்ணம் என்னும் இசை சார்ந்த வகை இருபது. தூக்கு என்பது பாடலோசை!
சிலப்பதிகார அரங்கேற்று காதை கூறும் இசை இலக்கணம். இசைக்கலைஞர்களின் தகுதிகள்; இசைக் கலைஞர்களாகிய இசையாசிரியன், தண்ணுமை ஆசிரியன், குழலாசிரியன். யாழாசிரியன்.
நிகழ்த்துக் கலை அரங்கில் மூன்று வகைத் திரைகள்: ஒரு முக எழினி, பொருமுக எழினி, கரந்துவரல் எழினி. வேறென்ன வேண்டும் சங்கீத கலாநிதிகளே! இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இசையரங்கும் நாடக அரங்கும் இருந்த பூமி இது! வேத்தியல், பொதுவியல் என்ற இருவகையில் பொதுவியல் பக்கமே நிற்கும் தமிழ்! ஏனெனில் இது பாணர் வளர்த்த தமிழ்! பறை முழக்கிய இசை!

"ஆகவே, இங்கே இசையை "குத்தகைக்கு" எடுத்திருப்பதாக யாரும் நினைக்கக் கூடாது. நினைத்தால் அது தவறு."

இப்போது கலைச்சொல் அகராதியை ( Tamil Lexicon) கொஞ்சம் துருவிப்பார்ப்போம்.

இசை[1]தல் icai- , 4 v. intr. < இயை[1]. 1. To fit in, as one plank with another in joining; பொருந்துதல். 2. To harmonise; to conform, as time-measure and melody; ஒத்துச்சேர்தல். தாளம் இராகத்திற்கு இசைந்துள்ளது.. 3. To consent, acquiesce, agree; உடன்படுதல்.

இசை[2]-த்தல் icai- , v.tr. caus. of இசை[1]-. To bring about; உண்டுபண்ணுதல். To give lavishly; மிகக்கொடுத்தல். (பிங்.)

இசை[3] icai , n. < இசை[1]-. Union, agreement, harmony; இசைவு. (W.) Gold; 3. Gain, profit; ஊதியம்.

இசை[4]-த்தல் icai- , 11 v. intr. To sound; ஒலித்தல். (தொல். பொ. 195.) To disclose, express; சொல்லுதல்.. To indicate, signify; அறிவித்தல்.

இசை[5] icai , n. < இசை[4]-. Sound, noise; ஓசை. Word, from its being a combination of the sounds of letters which, together, convey a meaning; Instrumental music; நரம்பிற் பிறக் கும் ஓசை. Sweetness, agreeableness; இனிமை.

இசைகாரர் icai-kārar , n. < id. +. Singers; பாடுவோர்.

இசைகாரர் Lute-players, the itinerant bards of ancient times; பாணர்.

இசைகுடிமானம் icai-kuṭi-māṉam , n. < இசை[1]- +. Written document executed by the bridegroom's father and attested to by witnesses in marriages among

Nāṭṭukōṭṭai chettiyars; கல்யாணத்தில் எழுதப்படும் சாட்சிப் பத்திரம்.

இசைகேடு icai-kēṭu , n. < இசை⁵ +. Loss of fame; disrepute; அபகீர்த்தி. False note; ஸ்வரத்தவறு. Reduced circumstances, disreputable condition; சீர்கெட்டநிலை.

இசைத்தமிழ் icai-t-tamiḻ , n. < id. +. Tamil poetry composed to suit the several melody-types and time-measures; that division of Tamil literature which consists of verses set to music as dist. fr. poetry or drama; one of mu-t-tamiḻ, q.v.; முத்தமிழுள் ஒன்று.

இசைநிறை icai-niṟai , part. < id. +. Poet. expletive used to fill a gap in the metre; செய்யுளில் இசைநிறைத்தற்கு வருஞ் சொல். (நன். 395.)

இசைநுணுக்கம் icai-nuṇukkam , n. < id. +. A work on music ascribed to Cikaṇṭi, a member of the Middle Tamil Caṅkam; ஓர் இசை நூல்

இசைநூல் icai-nūl , n. < id. +. A treatise on the science of music;

இசைப்பா icai-p-pā , n. < id. +. One of two classes of musical composition, the other class being known as இசையனவுபா;

இசைப்பாட்டு icai-p-pāṭṭu , n. < id. +. Song, musical composition; சாகித்தியம். (சிலப்பதி. 60, உரை.)

இசைப்பாடு icai-p-pāṭu , n. < id. + படு-. Rise of fame; கீர்த்திமிகுதி.

இசைப்பாணர் icai-p-pāṇar , n. < id. +. A division of the ancient Pāṇar caste, famous for their singing; minstrels; பாணருள் ஒருவகை யார். (தொல். பொ. 91, உரை.)

இசைப்பொறி icai-p-poṟi , n. < இசை⁵ +. Ear, the sense of hearing sounds; செவி.
*இசைமணி icai-maṇi , n. < id. +. Tinkling gold anklet worn on his right leg by a king who has slain 10,000 men, in battle;
இசைமரபு icai-marapu , n. < id. +. An ancient work on music; ஓர் இசைநூல்..
இசைமை icaimai , n. < இசை⁵ Honour; esteem, the desire for which acts as a powerful incentive to abstention, at all costs, from blameworthy actions; புகழ்.
இசையோலை icai-y-ōlai , n. < இயை[1]- +. Deed of consent or acceptance; ஒப்பந்த ஓலை. (I.M.P. N.A. 727.)
இசையோன் icaiyōṉ , n. < இசை⁵. One who sings to the accompaniment of instrumental music; இசைக்காரன். (சிலப். 3, 64.)
இசைவாணர் icai-vāṇar , n. < id. + வாழ்நர். Those who are devoted to music and live and have their being in it; musicians; பாடகர்
இசைவு icaivu , n. < இசை[1]-. Agreement; fitting in one with another; பொருந்துகை. . Fitness; தகுதி. Consent, approval; உடன்பாடு.
இசைவுகேடு icaivu-kēṭu , n. < இசைவு +. Difference, conflict, disagreement; பொருத்த மின்மை. (W.) Failure, as of a project or undertaking; காரியத்தவறு. இசைவுகேடாய்ப்போன காரியம்.

# 2. தமிழ்நாட்டின் வரலாற்றுப் பாதுகாப்பில் கலைஞர்

— முனைவர்.க.சுபாஷிணி

[கோவை பாரதியார் பல்கலைக்கழகக் கலைஞர் நூற்றாண்டு விழா மலருக்கு வழங்கப்பட்ட கட்டுரை.]

தமிழ்நாடு என்று நினைக்கும் போதும் சிந்திக்கும் போதும் அதில் கலைஞர் கருணாநிதி என்ற பெயரை ஒதுக்கிவிட்டுப் பார்ப்பது இயலாத ஒன்று. அரசியல், திரைப்படக் கலைத்துறை, இலக்கியம், சமூகச் சீர்திருத்தம் எனப் பொதுவாக இவரது செயலாக்கங்கள் விவரிக்கப்பட்டாலும், மிகப் பரந்து பட்ட வகையில் கலைஞர் கருணாநிதி அவர்களது ஆர்வமும், செயல்திட்டங்களும், நடவடிக்கைகளும் சாதனைகளும் திகழ்கின்றன.

தமிழ்நாட்டில் பிறந்த என் தாயார்; மூன்று தலைமுறைகளுக்கு முன்னரே மலாயாவுக்கு வணிகம் செய்யச் சென்ற என் தந்தையார் குடும்பம் என்ற பின்னனில் மலேசியாவில் பிறந்த எனக்கு கலைஞர் அவர்களைப் பற்றிய தகவல்கள் இளம் வயதிலேயே

அறிமுகமாகியிருந்தன. எனது இளம் வயதில் மலேசியாவில் வெளிவந்து கொண்டிருந்த வானம்பாடி, மலேசிய நண்பன், தமிழ் நேசன், தமிழ் மலர் போன்ற பத்திரிக்கைகள் மலேசியச் செய்திகளோடு தமிழ்நாட்டுச் செய்திகளையும் பாதிக்குப் பாதி எங்களுக்கு வழங்குவதைத் தவறுவதில்லை. தமிழ்நாட்டிலிருந்து கடந்த 250 ஆண்டுகளில் புலம்பெயர்ந்த தமிழ்மக்களின் உடல் மலேசியாவில் இருந்தாலும் உள்ளம் தங்கள் வேர் நிலமான தமிழ்நாட்டில் இருக்கின்ற அடிப்படையில் தமிழக அரசியலும், கலை இலக்கியச் செய்திகளும் மலேசியத் தமிழ்மக்களுக்கான உளவியல் தேவையாக அமைந்திருந்தன. அத்தேவை இன்றும் தொடர்கின்றது.

1987ஆம் ஆண்டு காலகட்டம் - மலேசியாவில் நான் வாழ்ந்த எனது பள்ளிக்காலத்தில் தான் மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் தான் தனிநாயகம் அடிகள் முன்னின்று 1968இல் தொடக்கிவைத்த உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் தொடர்ச்சியான நிகழ்வாக 6-ஆவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு ஏற்பாடாகியிருந்தது. நவம்பர் 15 முதல் 19 வரை இந்த மாபெரும் மாநாட்டு நிகழ்வு கோலாலம்பூரில் மலாயாப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்றது. அப்போது அம்மாநாட்டின் ஏற்பாட்டுக் குழுத்தலைவராக மலேசிய இந்தியர் காங்கிரஸ் கட்சியின் தலைவரும் மலேசியத் தமிழர்களின்

பெருந்தலைவரான துன் சாமிவேலு அவர்கள் தலைமை ஏற்றிருந்தார். சென்னைக்கு வந்து முக்கியத் தலைவர்களை நேரில் சென்று அழைத்திருந்தார் துன் சாமிவேலு அவர்கள். “தமிழினத் தலைவர் என்ற முறையில் அழைக்கிறேன்” எனக் கலைஞர் கருணாநிதி அவர்களுக்கும் சிறப்பு அழைப்பு வழங்கியிருந்தார்.

இந்த 6-ஆவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை அப்போதைய பிரதமர் துன் மகாதீர் முகமது அவர்கள் அதிகாரப்பூர்வமாகத் திறந்து வைத்தார். சிறப்பு அழைப்பாளர்கள் உரையும் கலைஞர் அவர்களது உரையும் இந்த நிகழ்வில் நிகழ்ந்தன. அதே நாளில் பொதுமக்களை நேரில் சந்தித்து உரையாற்றவும் கலைஞர் அவர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டார். கோலாலம்பூரில் புத்ரா உலக வாணிப மண்டபத்தில் பொதுமக்களுக்காகக் கலைஞரின் பொது உரைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அரங்கம் நிறைந்த அந்த நிகழ்வில் கலைஞர் அவர்கள் பேருரை ஆற்றினார். அது உணர்ச்சிமிக்க ஒரு பேருரையாக அமைந்திருந்தது.

இந்த உரையில் ஆங்கிலேய காலனித்துவ ஆட்சிக் காலத்தில் அதிகாரியாகப் பணியாற்றிய வெல்ஷ் (Colonel James Welsh) அவர்கள் எழுதிய Military Reminiscences என்ற நூலில் உள்ள குறிப்புகளைச் சொல்லி, சுதந்திரப் போராட்டத்தின் தொடக்கத்தில் தமிழகத்தில்

ஆங்கிலேயருக்கு எதிராகப் போராடிய மருது சகோதரர்களில் சின்ன மருதுவின் மகனான துரைசாமியும் மேலும் எழுபது பேரும் ஆங்கிலேயரால் பினாங்குக்கு நாடு கடத்தப்பட்ட நிகழ்வை உணர்ச்சியுடன் விவரித்தார் கலைஞர். பினாங்கிற்கு இளம் வயதில் சிறைக்கைதியாக நாடுகடத்தப்பட்டுக் கொண்டுவரப்பட்ட துரைசாமி சில காலங்கள் கழித்து மீண்டும் வெல்ஷ் அவர்களைச் சந்தித்த நிகழ்வையும் உணர்ச்சிப்பூர்வமான அந்நிகழ்வை விவரித்துக் கூறினார் கலைஞர் அவர்கள். இது மலேசிய வாழ் தமிழ் மக்களிடையே இந்த வரலாற்றுப் பூர்வமான சம்பவத்தை வெளிப்படுத்திய ஒரு நிகழ்வாகவும் மலேசிய மக்களுக்கும் தமிழ்நாட்டிற்கும் தொடர்கின்ற உறவைப் பலப்படுத்திய உணர்வுமிக்க ஒரு நிகழ்வாகவும் எழுச்சி ஏற்படுத்துவதாகவும் அமைந்தது.

மலேசியாவில் ஒரு பத்திரிக்கையாளராகவும், எழுத்தாளராகவும் சமூக நலத்தளத்தில் அக்காலகட்டத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்த எனது தாயார் ஜனகா அவர்களும் இந்த நிகழ்ச்சிக்கு நேரில் சென்றிருந்தார். நிகழ்வு முடிந்து திரும்பி வந்து அவர் எங்களுக்குத் தெரிவித்த இச்செய்திகள் அன்று அதன் முழுப் பரிமாணத்தில் புரியவில்லையென்றாலும் தமிழ்மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு என்ற உலகளாவிய ஆய்வு நிறுவனத்தை ஏற்படுத்திச்

செயல்படத்தொடங்கிய இக்கடந்த இருபது ஆண்டு காலகட்டத்தில் நான் நேரடியாகச்சென்று நிகழ்த்திய கள ஆய்வுகளின் போதும், நூல் வாசிப்பினாலும், வரலாற்றுத் தேடல் முயற்சிகளினாலும் என்னால் முழுமையாகப் புரிந்து கொள்ள முடிந்தது என்பதோடு எனது ஆய்வு நூலிலும் அதனைப் பற்றிக் குறிப்பிட்டு எழுதவும் முடிந்தது.

இந்த மாநாட்டின் போது ஒன்றரை நாட்கள் மட்டுமே கலைஞர் கருணாநிதி அவர்கள் மலேசியாவில் இருந்தார். ஆனால் அவர் பொதுமக்களுக்கு நிகழ்த்திய உரை மிகப்பெரிய எழுச்சியை மக்களிடையே ஏற்படுத்தியது. மலேசியத் தமிழர்களுக்குத் தங்கள் தாய்நிலமான தமிழ்நாட்டில் தொடர்புகளைப் புதுப்பித்துத் தொடரவேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டியது.

தமிழ் இலக்கியச் சூழலில் ஓர் எழுத்தாளராக வலம் வந்த எனது தாயார் கலைஞர் அவர்களது இலக்கியப் படைப்புக்களை மிக உயர்வாகக் கருதினார். தமிழ்நாட்டிலிருந்து நூல்கள் வருவது குறைவுதான் என்றாலும் இந்தியாவிலிருந்து அவ்வப்போது பினாங்கு வரும் உறவினர்கள், நண்பர்கள் மூலம் தமிழ்நூல்களை வரவழைத்து வீட்டில் ஒரு சிறு நூலகம் ஒன்றை உருவாக்கியிருந்தார். அந்தச் சிறு நூலகத்தில் கலைஞரின் முக்கியப் படைப்பான

குறளோவியமும் இடம் பெற்றிருந்தது. இப்போது நினைத்துப் பார்த்தாலும் அழகிய வண்ணப்பட அட்டையுடன் கூடிய கலைஞரின் குறளோவியம் என் கண்முன் விரிகிறது. கலைஞரின் மீது ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த என் தாயார் தனது படைப்புக்களுள் ஒன்றான "ஞானத் தழும்புகள்" என்ற சிறுகதைத் தொகுப்பு நூலை கலைஞர் அவர்களிடம் நேரில் சென்று வழங்க வேண்டும் எனத் திட்டமிட்டு தமிழகம் சென்று கலைஞர் அவர்களை நேரில் சந்தித்து அவரிடம் நூலை வழங்கி புகைப்படமும் எடுத்துக் கொண்டார். அந்தப் புகைப்படமும் ஒரு வரலாற்று ஆவணம் தான்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினை ஜெர்மனியில் தொடங்கி அதன் வழி பல்வேறு வரலாற்றுச் சின்னங்களை ஆவணப்படுத்தும் பணிகளை 2001ஆம் ஆண்டு தொடங்கினோம். அதன் பொருட்டு தமிழ்நாட்டிற்கு நான் நேரில் வந்து தமிழ்நாட்டில் உள்ள பல கிராமங்களுக்கும் சிற்றூர்களுக்கும் நேரில் சென்று அங்குள்ள வரலாற்றுச் சின்னங்களை ஆவணப்படுத்தும் பணியில் 2003 ஆம் ஆண்டு தொடங்கி ஈடுபட்டு வந்தேன். அத்தகைய ஒரு பயணத்தின் போது நான் பாஞ்சாலங்குறிச்சிக்கு எட்டயபுரம் தொடர்பான ஆவணங்களைப் பதிவு செய்வதற்காகச் சென்றிருந்தேன். அந்தச் சமயத்தில் வீரபாண்டிய கட்டபொம்மன் தொடர்பான சில தரவுகளையும் சேகரிக்கக் கூடிய வாய்ப்பு

எனக்கு ஏற்பட்டது. எட்டயபுரம் மட்டுமல்லாமல் கயத்தாறு சென்று பிறகு வீரபாண்டிய கட்டபொம்மனின் ஊரான பாஞ்சாலங்குறிச்சிக்குச் சென்றிருந்தேன். அங்குதான் தமிழக அரசின் ஏற்பாட்டில் உருவாக்கப்பட்ட வீரபாண்டிய கட்டபொம்மனின் நினைவு மண்டபம் உள்ளது.

வீரபாண்டிய கட்டபொம்மனின் நினைவு மண்டபத்திற்குள் நுழைவதற்கு முன்னர் நாம் ஐந்து வளைவுகளைத் தாண்டிச் செல்ல வேண்டும். முதலில் உள்ளது ஊமைத்துரை நுழைவாயில். இதைக் கடந்து மேலும் சற்று தூரம் பயணம் செய்து கொண்டிருக்கும் போது இரண்டாவது நுழைவாயில் தென்படுகின்றது. இதற்குப் பெயர் வெள்ளையத்தேவர் நுழைவாயில். இதைக் கடந்து மேலும் சற்று தூரம் சென்ற பின்னர் நம்மை வரவேற்பது தானாபதிப் பிள்ளை தோரணவாயில். இதற்கு அடுத்தார் போல் சற்று தூரத்தில் அமைந்திருப்பது சுந்தரலிங்கம் தோரணவாயில். இதனைக் கடந்து மேலும் பயணித்துக் கொண்டிருக்கும் போது நம்மை வரவேற்பது வீரசக்கம்மாள் தோரணவாயில். இந்த ஐந்து தோரண நுழைவாயில்களையும் கடந்து செல்லும் போது சற்று தூரத்திலிருந்தே வீரபாண்டிய கட்டபொம்மனின் நினைவுக் கோட்டை தெரிகின்றது. இவ்வளவு அழகாக ஒரு சிறு கோட்டை போல இந்த மண்டபம் இருக்கும் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

தமிழ்நாட்டிற்கான எனது அந்தப் பயணத்தின் போது சென்னையில் இருந்த நாட்களில் ஓய்வுபெற்ற தமிழ்நாடு தொல்லியல் துறையின் மேனாள் தலைவர் முனைவர் நாகசாமி அவர்களைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. முனைவர் நாகசாமி அவர்கள் என்னிடம் தனது ஆய்வு விபரங்களை அப்போது பகிர்ந்திருந்தார். அதில் ஒன்று வீரபாண்டிய கட்டபொம்மன் கோட்டை அகழ்வாரய்ச்சிப் பணிகள் பற்றியது.

வீரபாண்டிய கட்டபொம்மனைக் கைது செய்து தூக்கிலிட்ட பிறகு அவர் கட்டிய மாளிகை ஆங்கிலேய அதிகாரிகளால் இடித்து தரைமட்டமாக்கப்பட்டது. அப்பகுதி பிறகு வெறும் மணல் மேடாகக் கிடந்தது. இந்த இடத்திற்குப் பக்கத்தில் அப்போரின்போது இறந்து போன பன்னிரண்டு ஆங்கிலேய வீரர்களுக்கும் ஆங்கிலேயக் கிழக்கிந்திய அரசாங்கத்தால் கல்லறை கட்டப்பட்டது. அதில் அந்த ஆங்கிலேய வீரர்களின் பெயர்கள் குறிப்புக்கள் ஆகியவை சேர்க்கப்பட்டு இப்பகுதி ஆங்கிலேயர்கள் காலத்திலேயே நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டு வந்தது. முனைவர்.நாகசாமி அவர்கள் தொல்லியல் துறை இயக்குநராகப் பொறுப்பேற்றுக் கொண்ட பின்னர் தான் முதன் முதலாக அகழ்வாராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட ஆய்வுப் பகுதி வீரபாண்டிய கட்டபொம்மன் வாழ்ந்த இந்த பாஞ்சாலங்குறிச்சி கோட்டை இருந்த இடம்.

கள ஆய்விற்காக கட்டபொம்மன் கட்டிய கோட்டை இருந்த இடத்தைப் பார்க்கச் சென்றிருக்கின்றார். பாஞ்சாலங்குறிச்சிக்குச் சென்ற போது அங்குள்ள மக்கள் அந்தக் கோட்டையுடன் அந்த 12 ஆங்கிலேய வீரர்களின் நினைவிடத்தையும் பாதுகாக்க வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். இந்தக் கல்லறையை விட வீரபாண்டிய கட்டபொம்மன் வாழ்ந்த இடம் இப்போது தரைமட்டமாகிக் கிடக்கின்றது. அந்தக் கோட்டையை அகழ்வாராய்ச்சி செய்து மேலும் தகவல்களை வெளிக்கொணர வேண்டும். அதை முதலில் செய்து பின்னர் அந்த வீரர்களின் கல்லறை மண்டபத்தைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபடுகிறேன் என்று அவர்களிடம் கூறிவிட்டு தனது குழுவினருடன் அகழ்வாராய்ச்சிப் பணிகளைத் துவக்கியிருக்கின்றார் முனைவர் நாகசாமி அவர்கள்.

டாக்டர் கலைஞர் மு.கருணாநிதி அவர்கள் தமிழக முதலமைச்சராகப் பதவியேற்ற சமயத்தில் அவர் திருநெல்வேலிக்கு அருகில் 3 இடங்கள் மிக முக்கியமாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்று முயன்றிருக்கின்றார். அவை வீரபாண்டிய கட்டபொம்மன் ஆட்சி புரிந்து வாழ்ந்த பாஞ்சாலங்குறிச்சி, எட்டயபுரத்திலுள்ள சுப்பிரமணிய பாரதி பிறந்த இல்லம், ஒட்டப்பிடாரத்திலுள்ள வ.உ.சி. அவர்கள் இல்லம் ஆகியவை. வீரபாண்டிய கட்டபொம்மன் ஆட்சி புரிந்து வாழ்ந்த பாஞ்சாலங்குறிச்சி

கட்டபொம்மன் கோட்டையின் பகுதிகளைப் பாதுகாக்க முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும் என்று தொல்லியல் அறிஞர் குழு கேட்டுக் கொள்ள உடனே ஒரு சிறப்புப் பயணத்தை ஏற்பாடு செய்து பாஞ்சாலங்குறிச்சிக்கு வருகை தந்திருக்கின்றார் தமிழக முதலமைச்சர் கலைஞர் மு.கருணாநிதி.

அங்கு முனைவர் நாகசாமி அவர்கள் முதல்வருக்கு தொல்லியல் குழுவின் ஆய்வுகள் அனைத்தையும் விவரித்து ஆய்வுத் தகவல்களையும் சேர்த்து விளக்கியிருக்கின்றார். புதைந்து கிடந்த மாளிகையின் பகுதிகளை ஆய்வின் வழி மீட்ட தொல்லியல் வல்லுநர்களைப் பாராட்டியிருக்கின்றார் கலைஞர். உடனே அந்த ஊர்க்காரரர்கள் தங்களுக்கு அதே இடத்தில் ஒரு நினைவு மாளிகையைக் கட்டிக் கொடுக்க வேண்டும் எனக் கோரிக்கை வைத்திருக்கின்றனர். அதனை முதல்வர் மு.கருணாநிதி அவர்கள் ஏற்றுக் கொண்டாலும் தொல்லியல் ஆய்வு அடிப்படையில் அதே இடத்தில் கட்டுவது முறையாகாது. இவ்வாறு இந்த இடத்தில் ஒரு மாளிகை இருந்தது என்பதற்கு அடையாளம் தேவை. இந்த இடிபாடுகளுக்குக்கிடையே கிடக்கும் தடயங்களை அகற்றாமல் இதற்குப் பக்கத்திலேயே ஒரு நினைவு மண்டபம் அமைத்துத் தருகிறேன் என்று கூறிச் சென்றிருக்கின்றார். அடுத்த ஒரே ஆண்டுக்குள்

இந்த மாளிகையும் கட்டப்பட்டுள்ளது. வெறும் மாளிகையாக மட்டுமல்லாது கட்டபொம்மனின் வரலாற்றைக் கூறும் படங்களையும் சேர்த்து நினைவு மண்டபமாக அமைத்துக் கொடுத்தார் முதல்வர் கலைஞர் மு.கருணாநிதி.






புதைந்த புகழ் வெளிக்கொணர்வார்
வான்பொழிந்து பூவினையும் மாநிலத்தை முடிபுனையும்
மன்னனுக்கோ கிஸ்தி! எனமனம் கொதித்து கனன்றெழுந்து
அந்நியத்தளையை வீழ்த்தும் முதல்முரசறையும் ஆற்றல்
செந்தமிழ் மகனே என்று சீருடன் எடுத்துக் காட்டி
வீரம்சால் மறவர் வேந்து பாண்டியக் கட்டபொம்மு
உடன்நின்று உயர்வுகாத்த தம்பியாம் ஊமைத்துரை
இருவரும் வீரம்பெய்த ஈடிலாப்பெரிய கோட்டை
மண்ணோடு மண்ணாகி மேடிட்டுப் புதர் மண்டி
அப்படியும் ஒருகோட்டை இந்நாட்டில் இருந்ததுண்டோ!
என்றவகை இடிந்துபோய் மறைந்தும் போக
புதைந்திருக்கும் புகழை எல்லாம் வெளிக்கொணர்வ தெந்தம் பணி
ஏற்றிடுவோம் ஏட்டிலினி வீரனது வரலாற்றை
அதுவே எம்தலையாய கடன் என்னும் சபதம் ஏற்று
அரண்மனையின் பகுதிதனை அகழ்வாய்வில் வெளிப்படுத்தி
கண்ணிமைக்கும் நேரமதில் கோட்டைதனை அமைத்துத்தந்து
மாண்டபுகழ் மன்னவனின் நினைவுச்சின்னம் செய்தார்
வழித்தோன்றல் அனைவருமே வளம்பெற மான்யம் தந்தார்
பூதலம் போற்றும் வண்ணம் பூம்புகார் படைத்த
தமிழக அரசின் முதல்வர் மு.கருணாநிதி என்
ஆனந்த ஆண்டு ஆவணித்திங்கள் 2.ஆம் நாள்
18-8-1974

இப்புதிய மண்டபம் கட்டப்படக் காரணமாக இருந்த கலைஞர் அவர்களைப் புகழ்ந்து நிகழ்ச்சியைச் செய்யுள் வடிவில் வடித்திருக்கின்றார் முனைவர் நாகசாமி அவர்கள். அந்தச் செய்யுள் இந்த இடிந்த மண்டபத்தின் முற்பகுதியில் பெரிய கல்லில் அழகாகச் செதுக்கப்பட்டு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. அதே போலத்தான் எட்டயபுரத்தில் உள்ள பாரதி பிறந்த இல்லமும் கலைஞரின் வரலாறு பாதுகாக்கப்பட வேண்டும் என்ற ஆழ்ந்த ஈடுபாட்டினால் பாதுகாக்கப்பட்டதைக் காண்கிறோம்.

2011ஆம் ஆண்டு நான் எட்டயபுரம் சென்றிருந்தபோது இந்த பாரதி பிறந்த இல்ல நினைவுச் சின்னத்திற்குச் சென்றிருந்தேன். பச்சை நிறத்தில் வர்ணம் பூசப்பட்ட வீடு அது. வீட்டின் மாடிப்பகுதியில் பாரதி பிறந்த வீடு என்ற பெயர்ப் பலகை மாட்டப்பட்டுள்ளது. நுழை வாசலிலேயே வீட்டின் இரண்டு பக்கங்களிலும் திண்ணை வைத்துக் கட்டப்பட்ட வீடு அது. வீட்டின் பின்புறத்தில் கிணறு ஒன்றும் உள்ளது. திண்ணையைத் தாண்டி உள்ளே நுழையும் போது முகப்புப் பகுதி வருகின்றது. வலதுபுறத்தில் கருஞ்சிலை வடிவத்தில் பாரதியார் முகம் சிலையாக வடிக்கப்பட்டுள்ளது. அதற்குச் சற்று தள்ளி ஒரு பகுதியைப் பாரதி பிறந்த இடம் எனக்குறிப்பிட்டுள்ளனர். இப்பகுதியைக் கடந்து

உள்ளே சென்றோம். அங்கே பாரதியார் வரலாற்றைக் கூறும் பாரதியின் தனிப்படங்கள், குடும்பத்தார் படங்கள், நண்பர்களின் படங்கள், சில முக்கிய நிகழ்வுகளைப் பிரதிபலிக்கும் படங்கள் சுவரில் மாட்டி காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. பாரதியின் பத்திரிக்கைகள், அவர் ஆசிரியராகப் பணியாற்றிய பத்திரிக்கைகளின் புகைப்படங்கள் சிலவும் உள்ளன. அதற்குப் பக்கத்தில் வாசலுக்கு அருகில் பாரதியாரின் வாழ்க்கைக் குறிப்பு ஆண்டு வாரியாகக் குறிக்கப்பட்டு ஒரு பலகையில் பொறிக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது. இவற்றோடு பாரதியின் கையெழுத்தின் பதிவுகள் இங்கு உள்ளன. இந்த பாரதி பிறந்த இல்லத்தை வரலாற்றுச் சின்னமாக அறிமுகப்படுத்தி, அரசுடமைப்படுத்தி திறந்து வைத்த தமிழக முதலமைச்சர் திரு.மு.கருணாநிதி அவர்களின் திறப்பு விழா செய்தியும் அங்குள்ளது.

பாரதியின் தாய் மாமன் திரு.சாம்பசிவம், பாரதி இங்கிருந்து சென்ற பிறகும் அதே இல்லத்தில் வாழ்ந்தார். அவருடைய உறவினர்கள் சிலர் கல்கத்தாவில் இருந்திருக்கின்றனர். அவர்கள் இந்த இல்லத்தைச் சில காலம் வேறொருவருக்கு வாடகைக்குக் கொடுத்திருக்கின்றனர். திரு.துரைராஜ் ஆசிரியர் எட்டயபுரத்தில் தமிழாசிரியராகவும் கல்லூரி ஆசிரியராகவும் இருந்தவர். அவர் திரு. சாம்பசிவத்தையும் அவரது உறவினர்களை அணுகி இந்த

இல்லத்தை வாங்கியிருக்கின்றார். வாங்கியவுடன் அந்த இல்லத்தில் ஒரு நூலகத்தை ஏற்படுத்தியிருக்கின்றார். 1973 வரை இந்த இல்லம் பலர் வந்து நூல்களை வாசித்துச் செல்லும் நூலகமாக இருந்துள்ளது. 1973ல் அன்றைய தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்கள் ஆட்சியில் இந்த இல்லத்தை பாரதி நினைவு இல்லமாகப் பாதுகாக்க முயற்சிகள் எடுக்கப்பட்ட போது இந்த இல்லத்தை அரசாங்கத்திடம் இக்கட்டிடத்திற்கானப் பணத்தைப் பெற்றுக் கொண்டு திரு.துரைராஜ் ஆசிரியர் குடும்பத்தினர் ஒப்படைத்து விட்டனர். இன்று இந்த இல்லம் தமிழக வரலாற்றுச் சின்னங்களில் ஒன்றாக உருவாக்கப்பட்டு தினமும் ஒரு சிலர் வந்து பார்த்துச் செல்லும் வகையில் பாதுகாக்கப்படுகின்றது. (http://tinyurl.com/THF-Bharathi)

இவை இரண்டுமட்டுமல்ல. தமிழ்நாட்டில் தென்முனையில் கன்யாகுமரியில் திருவள்ளுவருக்கு 30 அடி உயரப் பாறை மீது அமைத்த 133 அடி உயரச் சிலை அமைத்த பெருமையும், வள்ளுவர் கோட்டத்தைத் தலைநகர் சென்னையில் உருவாக்கிய சிறப்பும் இவரையே சாரும்.

வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாத்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சேர்க்கவேண்டும் என்ற நோக்கம் உயர்வானது. அரசியல்

தளத்தில் இயங்கிக் கொண்டே தமிழர் வரலாற்றை மக்களிடம் உறுதியாகக் கொண்டு செல்ல அரசியல் தலைவர்கள் செயல்படுத்துகின்ற முயற்சிகள் வரலாற்றை மக்கள் மனங்களில் வாழவைக்கின்றன; அடுத்த தலைமுறைக்கும் இயல்பாகக் கடத்துவதில் எளிதாகச் சாத்தியப்படுத்துகின்றன.

கலைஞரின் தொல்லியல் வரலாற்று ஆர்வத்தைப் பற்றி அறிந்து கொள்ள முயற்சிக்கும் போது அவரது ஆழ்ந்த ஈடுபாடு நன்கு வெளிப்படுகின்றது. அதற்குச் சான்றாக அமைகின்றன கல்வெட்டு இதழில் வெளிவந்துள்ள அவரது இரண்டு சிறு வரலாற்றுக் கட்டுரைகள். (கல்வெட்டு இதழ் அக்டோபர் 2008: முதல் கட்டுரை கல்வெட்டு முதல் இதழில் 14.4.1974இல் வெளிவந்தது; 2ஆம் கட்டுரை கலைஞர் அவர்கள் 22.5.2972இல் கல்வெட்டுப் பயிற்சி பெற்றவர்களுக்குச் சான்றிதழ் வழங்கியபோது ஆற்றிய உரையிலிருந்து தொகுக்கப்பட்ட பகுதி)

"என்னைக் கவர்ந்த கல்வெட்டு" என்ற தலைப்பில் அமைந்த ஒரு கட்டுரையில் தான் பார்த்த செங்கத்தில் இருந்த மகேந்திரவர்ம பல்லவன் கால நடுகல் சிலையின் படமொன்றைக் குறிப்பிட்டு எழுதுகின்றார். அந்த நடுகல்லில் வீரன் ஒருவனும் அவனுடன் ஒரு நாயும் நிற்பது போல அமைக்கப்பட்டுள்ளது. அதில் செதுக்கப்பட்டுள்ள வீரன் எருமைப்

பண்ணையின் காவலன் என்றும் அவனைக் கள்வர்கள் தாக்கிக் கொன்று விட்டனர் என்றும் அப்போது அவனைக் காப்பாற்றப் போராடிய நாய் அவர்களைத் தாக்கிக் கொன்று தானும் உயிரை விட்டது என்றும் அக்கல்வெட்டு வெளிப்படுத்தும் செய்தியைக் கலைஞர் விளக்குகின்றார். அவ்வீரனோடு அவனது நாய்க்கும் சேர்த்து சிற்பம் வடித்து நடுகல் எடுத்த அக்காலத் தமிழர் பற்றி பெருமையாகக் குறிப்பிடுகின்றார்.

"கோவிசைய மயீந்திர பருமற்கு முப்பத்து நான்காவது வாணகோ அரைசரு மருமக்கள் பொற்றொக்கையார் இளமகன் கருந்தேவக்கத்தி"

என்பது நடுகல்லில் உள்ள கல்வெட்டு வரிகளாகும். இதில் பல்லவ மன்னன் மகேந்திரவர்மனின் 34ஆவது ஆட்சிக்காலத்தில் கருந்தேவக்கத்தி என்பவன் வீரமரணம் அடைந்த செய்தி கூறப்படுகின்றது. மேலும் அக்கல்வெட்டு கீழ்க்காணும் வரிகளையும் கொண்டுள்ளது.

"தன் எருமைப் புறத்தே வாடிபட்டான் கல்"

"கோவிவன் என்னும் நாய் இரு கள்ளரைக் கடித்துக் காத்திருந்தவாறு"

நாயின் பெயரான "கோவிவன்" என்ற சொல்லும் கல்வெட்டில் இடம்பெறுகின்றது. ஆக, வீரச்செயல் புரிந்த மனிதர் மட்டுமன்றி விலங்குகளையும் கூட மதித்து அவற்றின் நினைவாக நடுகல் எழுப்பும் வழக்கம்

தமிழ்ப்பண்பாட்டின் கருணை பண்பை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இதனைச் சுட்டிக் காட்டி தனது முதல் கட்டுரையில் கலைஞர் கருணாநிதி அவர்கள் விளக்கமளிக்கின்றார்.

இதே 'கல்வெட்டு' இதழில் வெளிவந்த கலைஞரின் இரண்டாவது கட்டுரை ஒரு சிற்பத்தைப் பற்றி பேசுகிறது. " என்னைக் கவர்ந்த சிற்பம்" என்பது இக்கட்டுரையின் தலைப்பு. தான் மதுரையில் அழகர் கோயிலுக்குச் சென்றிருந்த போது அங்குப் பார்த்த நரசிம்ம அவதாரம் இரணியனைத் தூக்கி அவன் வயிற்றைக் கிழிக்கும் வகையில் அமைந்த சிற்பத்தின் வடிவமைப்பை வியந்து விவரிக்கின்றார். இச்சிலைகள் கூறும் புராணத்தை தான் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் அச்சிற்பத்தின் நுணுக்கமான வடிவ அமைப்பை விவரிக்கும் வகையில் இச்சிறு கட்டுரை அமைந்துள்ளது.

இப்படித் தமிழ்நாடு முழுமைக்கும் வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாப்பது, தொல்லியல் துறை சிறப்பாகச் செயல்பட அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வது போன்றவற்றில் கலைஞர் அவர்களின் கவனம் இருந்துள்ளது என்பதை இன்று நாம் தமிழ்நாடு எங்கினும் காண்கின்ற பல எடுத்துக்காட்டுகளிலிருந்து அறியலாம்.

கலைஞரின் சமத்துவபுரத் திட்டம், பெண்களுக்கான சொத்துரிமை வழங்குதலில் முன்னோடி என்ற சிறப்பு, தமிழ்நாடு முழுமைக்கும் விரிவான சாலை அமைப்புகள், உழவர் சந்தைகள், பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்கள், கணினித்துறையில் தமிழ் மொழி வளர்ச்சி எனப் பல பிரிவுகளின் அவருடைய சாதனைகள் பேசப்படுவது போலத் தமிழ் மொழியின் தொன்மையைப் பாதுகாப்பதிலும், தமிழ்நாட்டின் வரலாற்றைப் பாதுகாப்பதிலும் கலைஞர் கருணாநிதி அவர்களின் செயல்பாடுகள் அடிப்படையை ஏற்படுத்திக் கொடுத்துள்ளன. கலைஞர் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் இவ்வேளையில் இவற்றை நினைவு கூர்வது சாலப் பொருந்தும்!

குறிப்பு: கோவை பாரதியார் பல்கலைக்கழகக் கலைஞர் நூற்றாண்டு விழா மலருக்கு வழங்கப்பட்ட கட்டுரை

முனைவர்.க.சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

# 3. கொடையளித்த அரசி

— இரா. கலைக்கோவன், வரலாற்றாய்வாளர்

தமிழ்நாட்டுக் கலை வரலாற்றில் சிறப்பிடம் பெற்றிருந்தபோதும் பொது வெளிச்சத்திற்கு வராத பெண்ணரசிகள் பலராவர். அவர்களுள் பூதி ஆதித்தபிடாரி குறிப்பிடத்தக்கவர். 'கொடும்பை' என்று சிலப்பதிகாரத்தால் சுட்டப்படும் கொடும்பாளூரையும் அதன் சுற்றுப்பகுதிகளையும் தம் ஆட்சியின் கீழ்க் கொண்டிருந்த வேளிர் மரபின் குலக்கொழுந்து இவர்.

முதற் பராந்தகர் சோழநாட்டின் ஆட்சிப் பொறுப்பேற்ற மூன்றாம் ஆண்டிலேயே கொடும்பாளூர் அரசர் மறவம்பூதியின் மகளாகவும் பராந்தகரின் மருமகளாகவும் அவரது புதல்வர்களுள் ஒருவரான அரிஞ்சய சோழரின் தேவியாகவும் கல்வெட்டு வெளிச்சம் பெறும் இவ்வம்மையே சிராப்பள்ளிக் குழித்தலைப் பெருவழியில் காவிரியின் தென்கரையிலுள்ள திருச்செந்துறைக் கோயிலைக் (சந்திரசேகரசாமி கோயில்) கற்றளியாக்கிய பெருமைக்குரியவர்.

ஆதித்தபிடாரி, இரண்டு தளங்கள் பெற்ற இணையகமும் அதன் முன் முகமண்டபமும் எனத் தம்மால் எழுப்பப்பெற்ற திருச்செந்துறைக் கோயிலை, 'நான் எடுப்பித்த கற்றளி' என்று கல்வெட்டுப் பொறித்து அடையாளப் படுத்தியுள்ளார். இத்தகு மொழிதல்கள் இல்லாமற் போனதால்தான் தமிழ்நாட்டுக் கோயில்கள் பல யாரால், எக்காலத்தே உருவாக்கப்பட்டன என்பதை அறியமுடியாதுள்ளது.

பொ. ஆ. 910இல் பூதி ஆதித்தபிடாரியால் கற்றளியான இக்கோயிலில் 59 கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள், ஏறத்தாழ நான்கில் ஒரு பங்குக் கல்வெட்டுகள் இக்கோயிலுக்கும் இங்குப் பணியாற்றிய ஊழியர்களுக்கும் அவ்வம்மை கருதிச்செய்த ஏற்பாடுகளைச் செவ்வனே பதிவு செய்துள்ளன. இறைவனுக்கான வழிபாடு, படையல்கள், மலர்த் தேவைகள், விளக்குகள் ஆகியவை எக்காலத்தும் குறைவின்றி அமையச் செந்துறை வாழ் மக்களிடமும் அவ்வூரை நிருவகித்த ஊராட்சியினரிடமும் பல நிலத் துண்டுகளை விலைக்குப் பெற்று கோயில் ஆட்சியரிடம் ஒப்புவித்ததுடன், உரியவைப்புத் தொகையை ஊராட்சிக்குச் செலுத்தி அந்நிலத்துண்டுகளை வரியற்றவையாக்கியவர் இவ்வம்மை.

இறைவனுக்கு அளிக்கப்படும் நிலம் தேவதானமாகவும் வரி நீக்கப்பட்ட நிலையில்

அது இறையிலித் தேவதானமாகவும் கல்வெட்டுகளில் சுட்டப்படுகிறது. இந்நில வாங்கல்-வழங்கல்களால் சோழர் கால நிலவிற்பனை, நிலஞ்சார் வரியினங்கள், ஆவண நடைமுறைகள் ஆகியவற்றை அறியமுடிவதுடன், ஆட்சியாளரின் வருவாய்த் துறைச் செயற்பாடுகளையும் விளங்கிக்கொள்ள முடிகிறது.



கொடும்பாளூர் இளவரசி எடுப்பித்த கோயில் என்பதால் கொடும்பாளூர்க் குடும்பமே இக்கோயிலில் ஈடுபாடுகொண்டிருந்தது. மறவம்பூதி, அவர் தேவி நக்கன் விக்கிரமகேசரி, மகன் பூதி ஆதித்தபிடாரன், அவர் மகன்களான ஆதித்தன் பூதி, ஆதித்தன் ஒற்றி எனப் பலரைக் கல்வெட்டுகள் அடையாளப்படுத்துகின்றன. தாங்கள் பிறந்த நட்சத்திரங்களில் திங்கள்தோறும் கோயிலில் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப் பூதி ஆதித்தபிடாரரும் ஆதித்தன் பூதியும் நிலமளிக்க, தம் திருமணக் கொடையாக ஆதித்தன் ஒற்றி அளித்த நிலவிளைவால் 12 நந்தாவிளக்குகள் இக்கோயிலில் ஒளிர்ந்தன. ஆதித்தன் பூதி தம் மகனான பூதி பராந்தகனுக்கு முதற்சோறு ஊட்டிய நாளில் இக்கோயில் இறைவனுக்கு நான்கு வேலி நிலமளித்தார். அதன் விளைச்சல் ஒரு வேலிக்கு நூறு கலம் நெல்லாக இக்கோயில் செயற்பாடுகளுக்கு உதவியது.

கோயிலை எழுப்பிய ஆதித்தபிடாரி இறைவனையும் வழிபாட்டையும் பற்றி மட்டுமே சிந்தனை கொள்ளாது, கோயில் ஊழியர்களின் நலத்தையும் கருதிச் செயற்பட்டதைக் கல்வெட்டுகளால் அறியமுடிகிறது. செந்துறைக் கோயிலில் உழைத்த பல்வகைப் பணியாளர்களுக்கும் வாழிடம் உருவாக்க விழைந்த அவ்வம்மை, அதற்காகவே ஊர்மக்களிடம் விலைக்குப் பெற்ற

நிலத்துண்டுகளை இணைத்துக் கோயிலருகே, 'மடவிளாகம்' ஒன்றை அமைத்தார்.**

செந்துறையில் தோல், காற்று, நரம்பு, கஞ்சக்கருவிகளுடன் வாய்ப்பாட்டும் சேர்ந்தமையும் இசைப் பெருக்கை ஐம்பேரொலியாக எழுப்பிய கலைஞர்களுக்கு வாழ்வூதியமாக ஊரவையாரிடமிருந்து தாம் விலைக்குப் பெற்ற நிலத்துண்டுகளைத் தட்டழிப்புறம் என்ற பெயரில் வழங்கி மகிழ்ந்தவர் ஆதித்தபிடாரி. சோழர் காலத்தில் ஐம்பேரொலியுடன் வழிபாடு நடைபெற்ற கோயில்கள் மிகச் சிலவே. அவற்றுள் செந்துறையும் ஒன்றென்னும் பெருமை ஆதித்தபிடாரியால் விளைந்தது.

கோயிற் செயற்பாடுகளுக்காகவும் கோயிலில் ஒளியூட்டிய விளக்குகளுக்காகவும் திருவிழா முதலிய கொண்டாட்டங்களுக்காகவும் தம்மாலும் பிறராலும் ஊரவையாலும் கோயிலுக்கு அளிக்கப்பெற்றிருந்த நிலங்களை உழுது பயிரிட்டுக் கோயிலுக்கு வளம் சேர்த்த உழு குடிகளையும் பிடாரி மறந்தாரில்லை. அவர்களுக்கு இல்லிருக்கை அமைக்கப் பல நிலத்துண்டுகளை விலைக்குப்பெற்று உதவியவர், அந்நிலங்களின் மீது பின்னாளில் உரிமைச் சிக்கல்கள் நேரிடக் கூடாது என்பதற்காகவே, 'நான் பெற்ற பரிசே குடுத்தேன்' என்று நிலத்தின் மீதான

உரிமைகளையும் தெளிவுபடுத்திக் கல்வெட்டாக்கினார்.

கோயில் நிலங்களையும் ஊர் நிலங்களையும் பழுதின்றி அளக்கக் கோயில்களில் அந்நாளில் அளவுகோல்கள் வெட்டப்பட்டிருந்தன. அவற்றுள் புகழ்வாய்ந்த இரண்டு அளவுகோல்களை இக்கோயிலில் அமைத்த பெருமை ஆதித்த பிடாரிக்கே உரிய. இது 'குழிக்கோல்' என்ற எழுத்துப் பொறிப்புடன் இறையகத் தாங்குதளத்தின் மேல் வெட்டப்பட்டுள்ள 90 செ. மீ. அளவுகோல் அரிதினும் அரிதான சோழர் காலப் பொறிப்பாகும். முகமண்டபத் தென்பகுதியில் இரண்டு கூட்டல் குறிகளுக்கு இடையில் வெட்டப்பட்டுள்ள 4 மீ. நீள அளவுகோலை அங்குள்ள எழுத்துப் பொறிப்பு 'நிலமளந்த கோல்' என்கிறது.

செந்துறையில் ஆதித்தபிடாரியின் காலத்தில் வெட்டப்பட்ட இக்கோல்களுள் ஒன்றான நிலமளந்த கோலை, செந்துறையிலிருந்து 4 கி. மீ. தொலைவிலுள்ள அந்தநல்லூர் வடதீர்த்தநாதர் கோயில் கல்வெட்டொன்று சுட்டுகிறது. ஆதித்த பிடாரியால் கற்றளியான இக்கோயிலின் தலமரமான பலாவும் இங்குள்ள கல்வெட்டொன்றில் இடம்பெற்றுள்ளமை கூடுதல் சிறப்பாகும். இம்மரத்தின் கீழிருந்து கோயிலாரும் கொடையாளரும் சான்றாளர் முன்னிலையில் ஓர் அறக்கட்டளை தொடர்பாக ஒப்பந்தம் மேற்கொண்டதை இக்கல்வெட்டு வழி

அறியநேர்கையில் தலமரங்களுக்கு மக்கள் அளித்த பெருமையை உணர முடிகிறது.

தமிழ்நாட்டில் பல பெண்ணரசிகள் கோயில்கள் எடுத்துப் புகழ் வளர்த்திருந்தாலும் நங்கை பூதி ஆதித்தபிடாரி வரலாற்றில் அழுந்தப் பதிவாவது கோயிற் குடிகளின் நல்வாழ்வில் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த அக்கறையால் தான். அளவில் சிறியதாக இருந்தாலும் அழகுணர்வுடன் எடுக்கப்பெற்றிருக்கும் செந்துறைக் கோயில் சோழர் காலப்பொருளாதாரம், சமூக நடைமுறைகள், கலைகள் சார்ந்து கல்வெட்டுகளும் சிற்பங்களும் கொண்டு பொலிவது நங்கைபூதி ஆதித்தபிடாரியின் பெயரைக் காலங்கடந்தும் வாழவைக்கும்.

குறிப்பு: இந்து தமிழ் திசை - மார்ச் 31, 2024 நாளிதழுக்கு வழங்கப்பட்ட கட்டுரை.

**கோயிலுடன் தொடர்புடைய பணியாளர்களின் குடியிருப்புப் பகுதி மடைவிளாகம் என அறியப்படுகிறது

# 4. தமிழ் மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் அரசே நடத்திய தமிழ்ப் பள்ளிகள் இருந்தனவா?

— பொ. வேல்சாமி

சனாதனத்தை ஆதரிப்பவர்களும் தமிழ்ப் பிழைப்புவாதிகளும் சுமார் 1200 ஆண்டுகளில் அரசாங்கமே சமஸ்கிருதக் கல்லூரிகளை நடத்தியதைப் போன்று தமிழகத்தில் அரசாங்கமே நடத்திய தமிழ்மொழியைக் கற்பிக்கும் கல்லூரிகளில் ஒன்றே ஒன்றை 19ம் நூற்றாண்டுக்கு முன்பு காட்ட முடியுமா ?

கடந்த 1200 ஆண்டுகளாக அரசு நிறுவனங்களின் ஆதரவுடன் வடமொழிக் கல்வி கொடிகட்டிப் பறந்தது. இவ்வாறான கல்வி நிறுவனங்கள் பற்றி ஏராளமான கல்வெட்டுகள் கிடைக்கின்றன. வரலாற்று அறிஞர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியார் எழுதிய “சோழர்கள்” நூலில் இத்தகைய நிறுவனங்களுக்குப் பேரரசன் இராசராசசோழனில் தொடங்கி பல்வேறு பின்னர் வந்த சோழப் பேரரசர்கள் அனைவரும் இத்தகைய வடமொழிக் கல்வி நிறுவனங்கள் கண்ணும் கருத்துமாகப் போற்றி பாதுகாத்து

வந்ததைப் பற்றிய பல்வேறு கல்வெட்டுகளைக் காட்டுகின்றார். அவற்றில் சமஸ்கிருத மொழியின் பாடத்திட்ட அமைப்பு, அதைக் கற்பித்த பார்ப்பன ஆசிரியர்களுக்கான ஊதிய பட்டியல், அதில் பயிலும் பார்ப்பன மாணவர்களுக்கு அரசினுடைய ஏராளமான சலுகைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதற்கான சான்றுகளையும் இணைத்துள்ளேன்.

அதே நேரத்தில் 2000 ஆண்டுகளாக வளர்ந்து வந்த தமிழ் இலக்கிய இலக்கணக் கல்வியை இந்த அரசர்களும் அரசாங்கங்களும் எவ்வாறு ஆதரித்து வந்தார்கள் என்பதைப் பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் இந்த நூலில் எழுதியுள்ளார். 19ம் நூற்றாண்டில் அந்நியர்களான ஆங்கிலேயர்களாலும் அமெரிக்கக் கிறிஸ்தவப் பாதிரியார்களாலும் தான் "தமிழ்க் கல்வி" அரசு நிறுவனங்களிலும் பள்ளிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பல்வேறு வகையான பாடத்திட்டங்களில் அடிப்படையில் மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கப்பட்டு வந்தது. இதனை 1827 இல் பாடத்திட்டக் குழு என்று ஒரு குழு அமைத்து தமிழை எப்படி மாணவர்களுக்குக் கற்பிப்பது என்பது பற்றியும் அதற்கான பாடநூல்களை எப்படித் தயாரிப்பது என்பது பற்றியும் ஆலோசனை நடத்தி அறிக்கைகளாக வெளியிட்டுள்ளனர். பின்னர் இந்த ஆலோசனைகளின் அடிப்படையில்

பாடத்திட்டங்களையும் வகுத்து, பாடநூல்களை எழுதியுள்ளனர். இதற்கான சான்றுகளை இத்துடன் இணைத்துள்ளேன்.



படுகிறது. கி. பி. 999 அளவில் (இப்போது செங்கற்பட்டு மாவட்டத்தில் ஆனூர் என வழங்கும்) ஆனியூர் மகாசபை, வேதம், இலக்கணம் (அஷ்டாத்தியாயி) முதலிய பாடங்கள் சொல்லிக் கொடுப்பதற்கு **பட்டவிருத்தி** ஏற்பாடு செய்திருந்தது. அந்தப் **பட்டர்**, வேதத்தில் ஆழமான புலமை பெற்றிருக்க வேண்டுமென்றும், **பாணினி வியாக்ரனம்**, அலங்காரம், மீமாசத்தில் 20 அதிகாரங்கள் ஆகியவற்றைச் சொல்லிக் கொடுக்கும் திறமை பெற்றவராய் இருக்க வேண்டுமென்றும் விதிகள் வகுக்கப் பெற்றிருந்தன. அவர் தன்னுடைய மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதோடு மட்டுமன்றி அவர்களுக்குச் சாப்பாடு போட வேண்டுமென்றும் கட்டளையிடப் பட்டிருந்தது, மீமாம்சத்தில் 20 அதிகாரங்கள் என்று குறிப்பிடப் பட்டிருப்பது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. இப்போது 16 அதிகாரங்கள் மட்டுமே கிடைக்கின்றன. எஞ்சிய 4 அதிகாரங்கள் நமக்குக் கிடைக்காமல் அழிந்து விட்டன. முதலாம் இராஜராஜன் காலத்தில்[6b] அவை வழக்கில் இருந்தமையால் பாடமாகச் சொல்லிக் கொடுக்கப்பட்டு வந்தன.

**எண்ணாயிரம்**

முதலாவது இராஜேந்திரன் ஆணைப்படி அவன் காலத்தில் தென் ஆர்க்காடு மாவட்டம் (எண்ணாயிரம்) இராஜராஜ சதுர்வேதிமங்கலத்துச் சபையார், அந்த ஊர்க் கல்லூரியில் பயின்ற மாணவர்களுக்குச் சாப்பாடு போடுவது என்றும், ஆசிரியர்களுக்கு ஊதியம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வதென்றும், அரசாங்க அதிகாரி ஒருவன் முன்னிலையில் முடிவு செய்திருந்தார்கள்.[7] கல்லூரி ஏற்கெனவே நடந்து வந்ததா அல்லது இவ்வாறு நன்கொடைகள் கொடுக்க இராஜேந்திரன் தாராளமாக முன்வந்த பிறகு, கல்லூரி தொடங்கப் பெற்றதா என்பது கல்வெட்டு வாசகத்திலிருந்து தெளிவாகத் தெரியவில்லை. அது எப்படியாயினும் இருக்கட்டும். கல்லூரியின் மாணவர் தொகையும், பல்வேறு துறைகளில் மாணவர்களுக்கு இருந்த ஆர்வமும், ஒவ்வோர் ஆசிரியர்களுக்கிடையே நிலவிய சம்பள வேறுபாடுகளும், அதையொட்டி அவர்கள் பால் இருந்த மதிப்பில் வேறுபாடுகளும், பல படிப்புக்களைப் பயின்ற மாணவர்களுக்காகச் செலவு செய்யப்பட்ட சராசரித் தொகையும் கல்வெட்டில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இளநிலை மாணவர்கள் 270 பேரும், முதுநிலை மாணவர்கள் 70 பேரும், ஆசிரியர்கள் 14 பேரும் இருந்திருக்கக் கூடும் என்று தெரிகிறது. பிரமச்சாரிகளான இளநிலை மாணவர்கள் 270 பேரும் ரூபாவதார

இலக்கணத்தை 40 பேரும் படித்தார்கள். ஏனையோர் மூன்று பிரிவினராக—ரிக்வேதத்தை 75 பேரும், யஜுர் வேதத்தை 75 பேரும், வாஜசனேய சாமவேதத்தை 20 பேரும், சண்டோக சாம வேதத்தை 20 பேரும், தலவாகர சாம வேதத்தை 20 பேரும், அதர்வ வேதத்தை 10 பேரும், எஞ்சிய 10 பேர் பௌதாயன கிருகஸ்ய சூத்திரம், பௌதாயன கல்ப சூத்திரம், பௌதாயன ஞான சூத்திரம் ஆகியவற்றையும் படித்தார்கள். இந்த இளநிலை மாணவர் ஒவ்வொருவருக்கும் நாள்தோறும் ஆறு நாழி நெல் கொடுக்கப்பட்டது. சாத்ரர் அல்லது முதுநிலை மாணவரான 70 பேருக்கு, ஒவ்வொருவருக்கும் பத்து நாழி நெல், தினசரி கொடுக்கப்பட்டது. உயர்ந்த (மேம்பட்ட) பாடங்களான வியாகரணத்தை அவர்களில் 25 பேரும், பிரபாகர மீமாம்சத்தை 35 பேரும், வேதாந்தத்தை 10 பேரும் படித்து வந்தனர். இந்தப் பாடத்திட்டத்தில் நான்கு வேதங்களும் இடம் பெற்ற போதும், ரிக் வேதத்தில் ஒரு சூத்திரம் மட்டுமே கற்பிக்கப்படுவது சிந்தனைக்குரியது. தென்னிந்தியாவில் சமஸ்கிருதப் படிப்பு வரலாற்றில் குறிப்பிடத்தக்க அம்சங்களாக (1) இராஜேந்திரன் ஆட்சியில்[8] சமஸ்கிருத இலக்கணக் கூறுகளுக்கு ஓர் அறிமுகமாக ரூபாவதாரம் உபயோகிக்கப்பட்டது, (2) பட்டரின் தத்துவத்தை முற்றிலும் புறக்கணித்துப் பிரபாகரரின் மீமாம்சத்திற்குச் சிறப்பான முறையில் ஆதரவு கொடுக்கப் பட்டது,[8a] (3) அந்தக் கல்லூரி முழுவதுமே ஒரு வைஷ்ணவ ஸ்தாபனமாக இருந்திருக்கக் கூடும். பாஷ்யக்காரரான ஸ்ரீராமானுஜருக்கு நெடுங்கால முன்னதாகவே விசிஷ்டாத்வைத்யக் கொள்கையைச் சார்ந்த வேதாந்தத்தைப் பாடத்திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது நம் விசேஷக் கவனத்திற்கு உரியன.

ஆசிரியர்களுள் கூடுதலான ஊதியமாக, நாளொன்றுக்கு $1\frac{1}{3}$ கலம் நெல், வேதாந்தப் பேராசிரியருக்குக் கொடுக்கப்பட்டது. மீமாம்சமும், வியாகரணமும் சொல்லிக் கொடுத்த ஆசிரியர்களான நம்பிகளுக்கு, இதற்கு அடுத்தபடியான ஊதியம்—தினசரி ஒரு கலம் கொடுக்கப்பட்டது. மற்ற ஆசிரியர்களுக்கு ஒரே அளவான ஊதியம்—தினசரி $\frac{1}{4}$ கலம் அல்லது 3 குறுணி—கொடுக்கப்பட்டது. தானியமாகக் கொடுக்கப்பட்ட இந்த ஊதியம் தவிர, (வேதாந்தப் பேராசிரியர்கள் நீங்கலாக) எல்லா ஆசிரியர்களுக்கும் சாத்திரர் (முதுநிலை மாணவர்களு)க்குத் தங்கமும் கொடுக்கப் பட்டது. வியாகரண, மீமாம்ச ஆசிரியர்கள், தாங்கள் சொல்லிக் கொடுத்த ஒவ்வொரு மாணவனுக்கும் கழஞ்சு விகிதம் படிப்புக்

நிலங்கள் ஆகியவற்றிற்கு விதிக்கப்பட்டிருந்த பாடிக்காவல் கட்டடத்தையும் நீக்கி அவன் இறையிலியாக்கித் தந்தான்.[11a]

## திருவொற்றியூர் வியாகரணப் பள்ளி

கி. பி. 1213-ல் திருவொற்றியூரில் ஏற்பட்ட கல்வெட்டு, சிவபெருமான் 14 வியாகரண சூத்திரங்களைப் பாணினிக்கு விளக்கிக் கூறிய கதையை நினைவுபடுத்துகிறது. அந்த நிகழ்ச்சி, திருவொற்றியூர் கோயிலிலுள்ள வியாகரண-தியான-மண்டபத்தில் நடந்ததாக அக்கல்வெட்டுக் கூறுகிறது. வியாகரணப் பள்ளிக் கூடம், அந்த மண்டபத்தில் நடந்து வருவதற்கும், மண்டபத்தைப் பழுதுபார்த்து ஒழுங்காக வைத்திருப்பதற்கு ஏற்படும் செலவுகளுக்காகவும் மூலதன நிதியாக 65 வேலி நிலம் மானியமாக விடப்பட்டிருப்பதாயும் அக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது.[11b]

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவிடைக்கழியில் மற்றொரு கல்வெட்டு கிடைக்கிறது. அதன் காலம் கி. பி. 1229. மலையாளச் சீமை[12]யிலிருந்து அங்கு வந்து, வேதாந்தம் பயிலும் பிராமண மாணவர்க்கு, உள்ளூர் மடத்தில் இலவசமாகச் சாப்பாடு போடுவதற்குக் கல்வெட்டில் கண்ட ஆணை வகை செய்கிறது. ஆண்டுக் குறிப்பிடாத மற்றொரு கல்வெட்டு உளது. அது ஒருவேளை 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்டிருக்கலாம். ஸ்ரீரங்கம் கோயிலில் பாலபள்ளி நீலகண்ட நாயகர் என்பவர் ஒரு நூல் நிலையம் (சரஸ்வதி பண்டாரம்) அமைக்க அடிப்படை ஏற்பாடுகள் செய்ததை அக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது. நூலக மண்டபத்தில் ஹயகிரீவர், சரஸ்வதி, வேதவியாசர் திருவுருவங்களை வைப்பதற்கும் அவற்றிற்குத் தினசரி பூஜை நடப்பதற்கும் இவர் வகை செய்திருந்தார்.[12a] காமரசவல்லியில் கி. பி. 998-ல் செய்யப்பட்டிருப்பதுபோல, இங்கும் தலவகாரகாமத்தின் பகுதிகளை மனப்பாடம் செய்து ஒப்புவித்தவர்களுக்குப் பரிசுகள் வழங்குவதற்காகப் பல கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன.[13] புலமை பெற்றவர்கள் கூடியிருந்த வேம்பத்தூர் கடிகை போன்ற பிற அமைப்புக்களும்[14] இருந்தன. அவற்றின் பெயர்கள் மட்டும் நமக்கும் இப்போது கிடைத்திருக்கின்றன.

## தமிழ்ப் படிப்பு

சமஸ்கிருத்தில் உயர்படிப்பு முறை அமைந்திருந்தது குறித்து நமக்கு மேற்கண்ட விவரங்கள் தெரிகின்றன. ஆனால், அதே காலத்தில் தமிழ்க் கல்வியின் தன்மை எவ்வாறு இருந்தது என்பதுபற்றி நம்பிக்கையான ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை

# TAMIL PRIMER.

பள்ளிக்கூடங்களிற்

பயிற்றிவிக்கவேண்டிய

# முதலாம் புத்தகம்.

௲அ௱சஅ௵.

இரண்டாம்பதித்தல்.

MADRAS:

PRINTED BY REUBEN TWIGG, AT THE CHRISTIAN KNOWLEDGE SOCIETY'S PRESS, VEPERY.

1848.

பள்ளிப்பாடத்திட்டக் குழு

# 1827

Serfojee Rajah. 1830

THE

# SECOND REPORT

OF THE

*MADRAS*

SCHOOL-BOOK SOCIETY.

Madras:

1827.

ஆங்கிலேயர்களின் ஆட்சியில் பள்ளிப் பாட நிறுவனம் ( SCHOOL BOOK SOCIETY) என்ற பெயரில் தமிழ் மாணவர்களுக்கு தமிழைக் கற்பிப்பதற்காக திட்டங்கள் தீட்டியதனால் உண்டாக்கப்பட்ட தமிழ்ப் பாடநூல்களின் பக்கங்கள்

தமிழ்ப் பாடநூல் - 1847

செந்தமிழ்

சிரியரின் சில நூல்களிலே

தெரிந்துகொண்ட

# இலக்கிய சங்கிரகம்.



THE

# CLASSICAL READER,

OR

SELECTIONS

FROM

STANDARD TAMIL AUTHORS.




JAFFNA:

AMERICAN MISSION PRESS:

1847.

Shadrach Emmanuel

# 5. தொல்லியல் போலிகள்!

— விக்கி கண்ணன்

தொல்லியல், வரலாற்றியல் குறித்த ஆர்வம் மக்களிடையே நாளுக்கு நாள் அதிகரித்து வருவது மகிழ்ச்சியானது தான் என்றாலும் ‘தொல்லியல் போலிகள்’ குறித்த ஓர் அறிமுகமும் தொல்லியல் ஆர்வலர்களுக்கும் மாணவர்களுக்கும் அவசியம் தேவை என்று நினைக்கிறேன். முதுகலை தொல்லியலை சென்னைப் பல்கலைக்கழகத்தில் நான் படித்தபோது இதற்கென்று சிறிய அளவில் ஒரு பாடம் இருந்தது. இதனைத் தினத்தந்தி செய்தி மாதிரி ருசிகரமாக எடுக்க ஆளில்லாததால் பலர் தூங்கி விடுவார்கள். ஆனால் ஃபிலின்ட் ஜாக் (Flint Jack) பற்றிய அறிமுகம் எனக்கு அதில் தான் கிடைத்தது. இவர் குறித்து இணையத்தில் விரிவாகத் தேடிப் படித்தபோது மிக ஆர்வ மூட்டுவதாக இருந்தது. அதே சமயத்தில் பல விசயங்களைத் தொடர்புப்படுத்திப் புரிந்துகொள்ள முடிந்தது. சரி யார் இந்த ஃபிலின்ட் ஜாக்?

கிபி 19 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பழங்காலத் தொல்பொருட்களைப் போலிகளாக உருவாக்கி அதைப் பலருக்கு விற்றும் பல தேசிய

அருங்காட்சியகங்களில் கொடுத்தும், அவ்வளவு ஏன்? உலகின் ஒட்டுமொத்தக் கலைப் பொருட்களின் கூடாரமாக விளங்கும் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தையே கூட நம்ப வைத்து 23 ஆண்டுகள் தன்னால் போலியாக உருவாக்கப்பட்ட தொல்பொருட்களை விற்று இங்கிலாந்தையே கலக்கிய ஒரு சகலகலா வித்தைக்காரர் தான் இந்த ஃபிலின்ட் ஜாக் எனும் எட்வர்ட் சிம்ப்சன்.



ஃபிலின்ட் ஜாக் எனும் எட்வர்ட் சிம்ப்சன் (Flint Jack alias Edward Simpson)

இவர் பல்வேறு பெயர்களில் தன்னை பல நாடுகளில் அறிமுகப்படுத்திக் கொண்டு தனது ‘தொல்பொருள் போலி’களை பெரிய தொகைக்கு விற்று வந்திருக்கிறார். 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தான் இந்தியாவில் தொல்லியல் துறையையே அறிமுகப்படுத்தியது பிரிட்டிஷ் அரசு. ஆனால் அப்போதே இங்கிலாந்தை உலுக்கும் அளவுக்கு எப்படி வளர்ந்தார் ஃபிலின்ட் ஜாக் என்று தெரியுமா?

இங்கிலாந்தின் யார்க்க்ஷையரில் பிறந்த எட்வர்ட் சிம்ப்சன் தனது இளமைக் காலத்தை ஜார்ஜ் யங் எனும் படிம சேகரிப்பாளர் (Fossil Collector) ஒருவரின் கையாளாகக் கழித்திருக்கிறார். அப்போது புவியியல் குறித்து ஓரளவு அறிந்துகொண்ட சிம்ப்சன் சில ஆண்டுகளுக்குப் பிறகு விட்பி (Whitby)நகரில் உள்ள டாட்சன் எனும் நபரைச் சந்திக்கிறார். டாட்சன் சிம்ப்சனிடம் ஓர் அம்புத்தலையை (Arrow head) கொடுத்து இதைப் போல் ஒன்றை உருவாக்க முடியுமா என்று கேட்கிறார். அங்கு தான் பிறக்கிறான் ஃபிலின்ட் ஜாக். ஃபிலின்ட் (Flint) என்பது சிக்கிமுக்கிக்கல்லை பொதுவாகக் குறிக்கும். பழங்காலத்தில் மனிதர்கள் விலங்குகளை வேட்டையாடக் கல்லாயுதங்களைப் பயன்படுத்தினார்கள் என்று நாம் பள்ளிக் காலங்களில் படித்தோம்

அல்லவா? அதுபோன்ற போலியான கல்லாயுதங்களை உருவாக்கி அது பல ஆயிரம் ஆண்டுகள் பழமையானது என்று நம்பவைத்து ஒரு பெருந்தொகைக்கு விற்றுவிடுவார் ஜாக்.

இப்படியாக, கல்லாயுதங்கள் தொடங்கி முதுமக்கள் தாழி வரை அவர் செய்யாத போலி பொருட்களே இல்லை. அதை வாங்காத ஆட்களும் இல்லை. ஒருகட்டத்தில் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து, அமெரிக்கா, மத்தியக் கிழக்கு நாடுகள் வரை ஜாக் தயாரிப்புகள் இல்லாத அருங்காட்சியகங்களே இல்லை எனும் அளவிற்கு 'போலி தொல்பொருட்களின் இராஜாவாக' வலம் வந்திருக்கிறார் ஜாக். ஆனால் ஆனைக்கும் அடி சறுக்கும் அல்லவா?



போலிகளைத் தயாரிக்க ஜாக் பயன்படுத்திய கருவிகள்



Forged Flint Implements.

ஜாக் தயாரித்த போலி அம்புத்தலைகள் (Arrowheads)

23 ஆண்டுகளுக்கு மேலாக நீடித்து நிலைத்த ஜாக்கின் சாம்ராஜ்யத்தை பேராசிரியர் டெனென்ட் முடித்து வைக்கிறார். போலி பொருட்களைக் கண்டறியும் நிபுணரான டெனென்ட், ஜாக்கை கையும் களவுமாகப் பிடித்து காவல்துறையினரிடம் ஒப்படைக்கிறார். அதோடு மட்டுமல்லாமல், புவியியல் மற்றும் தொல்லியல் கழகத்தின் உறுப்பினர்களை அழைத்து வந்து, ஜாக் எப்படி இந்தப் பொருட்களை எல்லாம் உருவாக்கினார் என்று அவரே நேரில் செயல் முறையில் ‘டெமோ’ செய்து காட்டும் அளவிற்கும் பேராசிரியர் டெனென்ட் ஜாக்கின் செயல்களை வெளிப்படுத்துகிறார். ஜாக் ஒரு மிகப்பெரிய தொல்பொருள் ஏமாற்றாளர் (Antique Forger) ஆனதற்குக் காரணம் சரக்கு வாங்கப் பணம் இல்லாதது தான். அந்தப் பணத்திற்காகவே இத்தனை பெரிய அளவில் போலிகளை உருவாக்கி உலகமெல்லாம் விற்றிருக்கிறார். ஒருவேளை இந்தப் பேராசிரியர் மட்டும் இல்லையென்றால் இந்நேரம் ‘உலகத் தொல்லியலின் தந்தை’ என ஃபிலின்ட் ஜாக் வரலாற்றை நாம் பாடப் புத்தகத்தில் படித்திருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் கையும் களவுமாகச் சிக்கிவிட்டாரே? எனவே, இங்கிலாந்து நீதிமன்றம் ஜாக்கிற்கு 12 மாதச் சிறைத்தண்டனை அளிக்கிறது.

பின்னர் இலண்டன் ஆய்வாளர்களே 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒரு பெரிய

புத்தகத்தை வெளியிடுகிறார்கள். இராபர்ட் முன்றோ எழுதிய அந்தப் புத்தகத்தின் பெயர் Archaeology and False Antiquities என்பதாகும். இங்கிலாந்தில் எவ்வாறெல்லாம் போலி தொல்பொருட்கள் உருவாக்கப்பட்டது? யாரெல்லாம் இதில் ஈடுபட்டார்கள்? எந்தெந்த அருங்காட்சியகத்தில் எல்லாம் அந்தப் பொருட்கள் உள்ளது? என மிக விரிவாகப் பேசுகிறது மேற்குறிப்பிட்ட புத்தகம். தொல்லியலூடாக கிருத்துவ/இஸ்லாமிய சமயங்களின் வரலாற்றுக் கட்டமைப்புகள் மேலை நாடுகளில் எவ்வாறு கட்டமைக்கப்பட்டது என்பதும் கவனிக்கத்தக்கது.

அதோடு மட்டுமல்லாமல், Rise and Fall of Flint Jack என்றொரு புத்தகமும், ஆவணப்படங்களும் காணக் கிடைக்கின்றன. ஃபிலின்ட் ஜாக் செய்த போலியான பொருட்களுக்கென்றே தனி அருங்காட்சியகம் கூட செயல்பட்டுவருவது பாராட்டத்தக்கது. நிற்க!

இவற்றை எல்லாம் ஏன் இப்பொழுது நான் விரிவாக எழுத்திட்டு இருக்கிறேன் என்றால் உங்களுக்குப் புதிய ஒரு விடயத்தை அறிமுகப்படுத்தவோ அல்லது ‘பரம்பொருள்’ மாதிரியான ஒரு திரில்லர் திரைப்படக் கதைக்காகவோ அல்ல. தமிழ்நாட்டில் ‘தொல்லியல் போலிகள்’ குறித்த அறிமுகத்தைக் கொடுக்க வேண்டும் என்பதற்காகத் தான்.

வழமையாகவே நமது தமிழ் சினிமா மேலைநாட்டுத் திரைப்படங்களின் தழுவல்களை அளித்து நம்மை பரவசப்படுத்தும். மேலைநாட்டுக் கடவுளர்களும் இங்குத் தாக்கம் செலுத்தினார்கள் என்பது 2000 ஆண்டுக்கால வரலாறு. அதேபோல் மேலைநாட்டுப் போலிகளும் அதே வீரியத்தில் இங்கும் தாக்கம் செலுத்தியது நம்மை ஆச்சரியப்படுத்தவில்லை. ஆனால் தமிழ்நாட்டில் இந்த மாதிரியான செயல்பாடுகளைச் செய்வதற்கென்றே பிரத்தியேகமான பூமி ஒன்று இருக்கிறதல்லவா?

1990களின் இறுதியிலேயே தொல்லியல் போலிகளை உருவாக்கி பெரிய காசு பார்த்தவர்கள் சாட்சாத் நமது கொங்கு மண்டலத்தார்கள் தான். பணம் அச்சடிக்கும் எந்திரம், ஈமு கோழி வளர்ப்பு தொடங்கிப் போன மாதம் MLM மோசடிகாரனை விடுதலை செய்யப் போராடியது வரை சமகாலத்தில் கொங்கு மண்டலச் சேட்டைகளைப் பார்த்துச் சலித்ததால் இந்தக் காலத்தில் இது ஆச்சரியமானது இல்லை தான். ஆனால் 1998-99 களியிலேயே போலி தமிழ்ப் பிராமி / தமிழி சுடுமண் சிற்பங்கள், காசுகளை அச்சடித்து சுடச்சுட விற்றது இவர்கள் தானென்று கேள்விப்பட்டபோது கொஞ்சம் அதிர்ச்சியாகத் தான் இருந்தது. (கொங்கு நாட்டின் ஃபிலின்ட் ஜாக் தற்போது உயிரோடு இருப்பதாக

அறிந்ததால் பெயர் குறிப்பிடுவதைத் தவிர்க்கிறேன்).

இதில் மற்றொரு விடயம் என்னவென்றால் அன்றைய ஆய்வாளர்கள் அதனை ஏற்றுக்கொண்டதால் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையும் கொங்கு நாட்டு ஃபிலின்ட் ஜாக்கின் பொருட்களை அங்கீகரித்திருக்கிறது. ஆனால் ஃபிலின்ட் ஜாக்களின் பிரச்சினை என்னவென்றால், ஒருமுறை தனது முயற்சியில் வெற்றிகண்டால் அதை அப்படியே பயன்படுத்தி உடனுக்குடன் பல்வேறு பொருட்களைப் போலியாகச் செய்து செய்து சந்தைப்படுத்துவது தான். இதனால் ஆய்வாளர்களுக்கு ஏற்படும் சந்தேகம். அதுவும் கொங்கு நாட்டு ஜாக், சுடுமண் சிற்பங்களை எல்லாம் மைக்ரோவேவன்ல வைத்து எடுத்த மாதிரி சுடச் சுடச் சுட்டுக் கொண்டு வந்து தந்திருக்கிறார். ஆனால் நமது ஜாக் கொஞ்சம் படிப்பறிவு குன்றியவர் என்றாலும் நன்றாக நினைவுகூர்ந்து வரைந்து காட்டும் திறமை படைத்தவர். ஒருமுறை காவல்துறையிடம் பொருட்களை விற்கும்போது கையும் களவுமாகச் சிக்கியிருக்கிறார். அதன்பின் அவருடைய போலிகள் குறித்து யாரும் பெரிதாகப் பேசவில்லை. இப்படி ஒருவர் செய்த சம்பவமே கூட பலருக்குத் தெரியாமல் போய்விட்டது.

இதேபோல் கரூரில் கிடைக்கப்பெற்ற மோதிரங்கள், காசுகள் ஆகியவற்றின் நம்பகத்தன்மை இன்றுவரை உறுதி செய்யப்படவில்லை என்று மூத்த ஆய்வாளர் ஒருவர் கூறியது மிகவே அதிர்ச்சியளித்தது. (பண்டைய காசுகள் எவ்வாறெல்லாம் விற்கப்பட்டது என்பது குறித்து வேறொரு சமயம் விரிவாக எழுதுகிறேன்)

ஆதிச்சநல்லூர் தாழியில் கிடைத்த தமிழி எழுத்துப் பொறிப்பு சமீபகாலம் வரையில் சர்ச்சைக்குரியது. ஆனால் அது திட்டமிட்டு உருவாக்கப்பட்டதல்ல என்பதால் அதைப் போலி என்று வரையறுக்க முடியவில்லை. ஆனால் அதனை மறுத்துப் பேசவும் எழுதவும் பல ஆண்டுகள் தேவைப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

சிந்துவெளியில் குதிரை இருந்தது என்பதை நிறுவுவதற்காக சிந்துவெளி முத்திரையில் குதிரையைப் பொறித்துக் கொண்டுவந்த சம்பவம் முதல் கீழடி அறிக்கையைத் தமிழ்நாடு அரசு வெளியிட்ட சமயத்தில் மகாபாரதக் காலத்துத் தேர் நேப்பாளில் கிடைத்தது என பீட்டா புகழ் நந்திதா கிருஷ்ணா அவர்கள் கணினியிலேயே ஆய்வு செய்து காலம் கணித்துக் கொடுத்துக் கொடுத்தது வரை தொல்லியல் போலிகளுக்குப் பஞ்சமே இல்லாமல் தான் ஓடிக்கொண்டிருக்கிறது.

வெகு சமீபமாக கிண்ணி மங்கலத்தில் கிடைத்த தமிழி/தமிழ் பிராமி கல்வெட்டு சர்ச்சை. இங்கேயும் முதலில் அவர் தமிழி கல்வெட்டைக் காட்டியது பிரச்சினை அல்ல. அடுத்தடுத்து காலக்கோட்டில் (Chronological order) காட்டுகிறேன் என்று வட்டெழுத்து, தமிழ் எழுத்தென்று ஒவ்வொரு மாதமும் ஒவ்வொன்றை எடுத்துக் காட்டியதில் தான் பிரச்சினை. ஃபிலின்ட் ஜாக்கு களின் வரலாறே இப்படித் தான் இருக்கிறது. ஆனால் இங்கிலாந்து ஆய்வாளர்கள் போலிகளின் முகத்திரைகளை வெளிப்படையாக உரித்துக் காட்டி யிருக்கிறார்கள். உலகப் புகழ்பெற்ற பிரிட்டிஷ் அருங்காட்சியகமே ஜாக்கின் போலி பொருட்களை உண்மையென நம்பி வாங்கி குவித்திருக்கிறது. ஆனாலும் ஃபிலின்ட் ஜாக் அருங்காட்சியகம் வைக்கும் அளவிற்கு நகர்ந்திருக்கிறார்கள். ஜாக்கின் திறமையைக் கொண்டாடுகிறார்கள். ஜாக்கையே கூட்டிப் போய் பயிற்சி வழங்கவும் செய்திருக்கிறார்கள். தொல்லியல் பாடத்தில் லெஜண்டரி ஃபோர்ஜர் (Legendary Forger) ஆக அறிமுகப்படுத்துகிறார்கள். இந்த திறந்த மனப்பான்மையும் தமிழ்நாட்டு ஆய்வுலகில் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

தொல்லியலை வெறும் சாதி/மத/இன/மொழி பெருமைக்காக இல்லாமல் ஓர் அறிவியல் பாடமாகக் கருதி நேசிக்கும் யாவருக்கும் இந்த திறந்த மனப்பான்மை வேண்டும். அத்துடன் போலிகளைத் துகிலுரித்துக் காட்டும் தைரியமும் வேண்டும்.

# 6. தமிழ்நடை பற்றிய என் எண்ணங்கள்

— மணி மு. மணிவண்ணன்

பாஞ்சாலி சபதத்தின் முன்னுரையில் மகாகவி பாரதி "எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். ஓரிரண்டு வருஷத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்துதல் வேண்டும்", என்று எழுதியது தற்காலத் தமிழ் இலக்கிய உலகத்துக்கு வேதவாக்கு. எது எளிமை, எது மொழிக்குப் புத்துயிர் கொடுக்கிறது, எது கொச்சைப் படுத்துகிறது என்பதில் தான் கருத்து வேறுபாடுகள் உள்ளன."தொன்மை" என்ற சொல்லையே எடுத்துக் கொள்வோமே! அது "தொல்" என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்தது. மிகப் பழமையானது என்ற பொருள் கொண்டது. இன்றும் வழக்கில் இருக்கும் சொல். தொல்காப்பியம் என்ற மிகப் பழமையான தமிழ் நூலின் பெயரில் இருக்கிறது. "தொன்று தொட்டு"

என்ற மரபுத் தொடரில் இருக்கிறது. தொல்பழங்காலம், தொல் பொருள் ஆராய்ச்சி என்ற சொற்களில் இருக்கிறது. தொல்லுலகு, தொல்லிசைக் காவியங்கள், தொல்சீர் மறக்குலம், தொல்புவி என்று பாரதியின் பாடல்களில் விரவிக் கிடக்கிறது. அதே போல் இராமன், இலக்குவன், இராவணன் என்ற பெயர்களும் கவிச்சக்கரவர்த்தி கம்பரின் ராமாயணத்திலிருந்து நமக்கு வந்த கொடை. மகாகவி பாரதி மட்டும் சளைத்தவனா என்ன? பாஞ்சாலி சபதத்தில், தருமன், கருணன், அருச்சுனன், யுதிட்டிரன், திருதராட்டிரன், திட்டத்துய்மன் என்று வடமொழிப் பெயர்களை எளிமைப்படுத்துகிறான்.

சீரிய வாசகர்களுக்குப் பலதரப்பட்ட சிந்தனைகளை அறிமுகப்படுத்துவதற்குத் தேவை துல்லியமான மொழி நடை. ஆங்கில இதழ்களை வாசிப்பவர்கள் அவற்றின் துல்லியமான மொழியைப் பாராட்டுவது மட்டுமல்லாமல், புதிய கருத்துகளைப் புரிந்து கொள்ளத் தேவையான புதிய சொற்களை அகராதியைப் புரட்டிக் கற்றுக் கொள்கிறார்கள்.

'அ'னா, 'ஆ'வன்னாத் தாண்டி எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளும் போது ஒரு பெரிய உலகமே நம் மனக்கண் முன் திறக்கிறது. எழுத்தும், சொல்லும், வாக்கியமும் நம் மன நாட்டிய மேடையில் ஆடும்போது கால தேசங்களைக் கடந்து கருத்துகள் ஆளும் உலகத்துக்குள்

நுழைகிறோம். இந்தப் பயணத்தின் தொடக்கத்தில் நாம் கற்றுக் கொள்ளும் முதல் பாடம், நுட்பமான கருத்துகளை அறிய வேண்டும் என்றால் சொற்களை அறிய வேண்டும். தாய்மொழிச் சொற்களை நாம் நம்மைச் சுற்றி உள்ளவர்களிடம் இருந்தே எளிதாகக் கற்றுக் கொள்ளுகிறோம். ஆனால், பிறமொழி ஒன்றைக் கற்றுக் கொள்ளும்போது, சொற்களை அறிந்து கொள்ள நாம் நாடுவது அகராதி என்னும் கருவி. இந்து போன்ற ஆங்கில நாளேட்டில் ஆசிரியருக்குக் கடிதங்களையோ, விளையாட்டுப் பக்கங்களையோ படித்து ஆங்கில வளத்தைப் பெருக்கிக் கொள்ளத் தொடங்குகிறோம். கொஞ்சம், கொஞ்சமாக நூலகத்திலே இருக்கும் பெரிய பெரிய ஆங்கிலப் புத்தகங்களையும் புரட்டிப் பார்க்கும் துணிச்சல் கொள்கிறோம். வாழ்நாள் முழுதும், கேள்விப்படாத புதிய ஆங்கிலச் சொல் ஒன்றை முதல் முறையாகப் பார்க்கும்போது, உடனடியாக நாம் தேடுவது அகராதியைத்தான்.

ஒவ்வொரு புதிய சொல்லும், ஒரு புதிய கருத்தை நமக்கு அறிமுகப்படுத்துகிறது. நுட்பமாகச் சிந்திக்கும் திறனை வளர்க்கிறது. புதிய சொற்களைக் கற்றுக் கொள்ளும் தணியாத தாகம் நமக்கு வேகமாக வளரும் தொழில் நுட்ப யுகத்தில் முன்னேற வழி வகுக்கிறது. மனித வளர்ச்சியின் பரப்பினைப் புரிந்து கொள்ள வாய்ப்பளிக்கிறது. அரசியல் பக்கங்களுக்கு இணையாக அறிவியல் பக்கங்களை

வெளியிடும் நியூயார்க் டைம்ஸ், இந்து போன்ற நாளேடுகள் வேகமாய் வளர்ந்து வரும் நாகரீக உலகத்தைப் புரிந்து கொள்ள, நம் வாழ்க்கைக்கு உதவுகின்றன. 'ஏன் புரியாத சொற்களைப் போட்டு மிரட்டுகிறாய்' என்று இந்தப் பத்திரிகைகளிடம் நாம் முறையிடுவதில்லை. 'எழுத்தாளர்கள் தங்கள் ஆங்கிலத் திறமையைக் காட்ட எழுதுகிறார்கள்' என்று குற்றம் சாட்டுவதில்லை. மாறாக, அந்தப் பத்திரிகைகளை விடாப்பிடியாகப் படித்து நம்மை வளர்த்துக் கொள்கிறோம். ஆங்கிலச் சொற்களின் கிரேக்க, லத்தீன் வேர்களைப் படித்துப் பயின்று நம் பிழைப்புக்கு வழி தேடுகிறோம். ஆனால், நாம் நம் ஆங்கில மொழி வளத்தைப் பெருக்க முயற்சிக்கும் அளவுக்குத் தமிழ் மொழி வளத்தைப் பெருக்க முயல்வதில்லை. புதிய தமிழ்ச் சொல் ஒன்றைப் பார்க்கும்போது நாம் அகராதியைத் தேடுவதில்லை. நம் தாய் மொழியில் நமக்குப் புரியாத சொல்லைப் பார்க்கும்போது நமக்கு அந்த எழுத்தாளர் மீது எரிச்சல் வருகிறது.

தமிழ் மொழி நமக்குக் கிடைத்த ஒரு மாபெரும் செல்வம். இந்தியாவின் இன்னொரு மாபெரும் இலக்கிய மொழியான சமஸ்கிருதத்தின் ஒப்பற்ற படைப்புகளை, வேதங்களை, கீதையை, சாகுந்தலத்தை, சௌந்தரிய லகரியை உணர்ந்து, புரிந்து, பேசும் மொழியில் அனுபவிக்கும் திறமையை நாம் இழந்து விட்டோம். கடந்த எழுநூறு ஆண்டுகளில்

வளர்ந்த ஆங்கிலத்தில் சாசர் ஆங்கிலமும், தற்கால ஆங்கிலமும் முற்றிலும் வேறுபட்ட மொழிகளைப் பார்ப்பது போன்ற மயக்கம் தரும். தமிழிலோ, மிகக் குறைந்த பயிற்சியுடன் நம்மால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்களையும் படித்துப் புரிந்து கொள்ள முடிகிறது. "தீதும் நன்றும் பிறர் தர வாரா", "குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்", "அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்", "இது பொறுக்குதிலை, தம்பி எரிதழல் கொண்டு வா!", "நதியில் விளையாடிக் கொடியில் தலை சீவி நடந்த இளந்தென்றலே!" என்ற கவிதை வரிகள் பல வேறு நூற்றாண்டுகளில், கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் எழுதப்பட்டவை. ஆனால், எழுத்துத் தமிழின் தொடர்ச்சியால் அவற்றை நாம் வாழும் மொழியிலேயே உணர்கிறோம்.

இந்த இரண்டாயிரம் ஆண்டு சொத்தை நம் அடுத்த தலைமுறையும் அனுபவிக்க வேண்டும் என்றால், நாம் ஓரளவுக்காவது துல்லியமான பொருள் உணர்த்தும் தமிழ்ச் சொற்களைப் புழங்க முயல வேண்டும். எழுத்துத் தமிழோடு பேச்சுத் தமிழையும் கற்றுக் கொள்ளும் இளைய தலைமுறைக்கு நாம் வழிகாட்டியாக அமைய வேண்டும். அதனால், கணினி (computer), இணையம் (internet), ஆவணம் (document, record), தொன்மை (antiquity), அகவி (pager), செல்பேசி (mobile phone) போன்ற சொற்களைப் பார்த்தால்

அவற்றிற்கு இணையான ஆங்கிலச் சொற்களை ஏற்றுக் கொண்டது போலவே ஏற்றுக் கொள்ள முயல்வோம்.

ஆங்கிலத் திறமை இல்லாமல் ஆங்கில இதழ்களில் எழுத முடியாது. ஆனால் ஆங்கிலத் திறமை மட்டும் போதாது. அதே போல் இதழில் எழுதத் தமிழ்த் திறமை தேவை. ஆனால், தமிழ்த் திறமை மட்டும் போதாது. தமிழை வெறும் அடுக்களை மொழியாக ஒதுக்கி விடாமல், வாழும் மொழியாக வளர்க்க வேண்டும். இந்தச் சமுதாயக் கடமையை மனத்தில் கொண்டுதான் பாரதி நமக்கு "சென்றிடுவீர் எட்டுத் திக்கும், கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்து இங்கு சேர்ப்பீர்!" என்று அன்புக் கட்டளை இடுகிறான். வாசகர்களுக்குப் புதிய கலைச்சொற்களை அறிமுகப்படுத்தும்போது அடைப்புக் குறிக்குள் இணையான ஆங்கிலச் சொல்லைத் தருவதை வரவேற்கிறோம்.

# 7. காலணிகளைக் கவினுற அமைத்தனர்

— இலக்குவனார் திருவள்ளுவன்

கற்களிலும் முட்களிலும் நடக்க வேண்டிய தேவை ஏற்பட்ட பொழுது அதனால் ஏற்படும் துன்பத்தில் இருந்து விடுபட மனிதன் தொடக்கக் காலத்திலேயே கால்களில் எதையோ அணியும் பழக்கம் உருவாகியிருக்க வேண்டும். அதுவே மக்கள் கூட்டத்தின் நாகரிகத்திற்கேற்ப வெவ்வேறு காலணிகளாக வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.

அமெரிக்காவில் ஆரிகன் (Oregon) பகுதியில் உள்ள கற்கோட்டைக் குகையில் (Fort Rock Cave) 10,000 ஆண்டுக்காலத் தொன்மையான காலணிகள் 1938இல் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. 2009இல் ஆர்மேனியாவில் குகை ஒன்றில் 3500 ஆண்டுத் தொன்மையான காலணியைக் கண்டுபிடித்துள்ளனர். எகிப்தியர்கள் பண்டைக்காலத்தில் பனை ஓலைகளாலும் நாணற் புற்களாலும் ஆனக் காலணிகளை அணிந்துள்ளனர். எகிப்திய குருமார்களின் ஆடைத் தொகுப்பில் இக்காலணிகளும் இடம் பெற்றிருந்திருக்கின்றன. மெசபடோமியாவில்

தோலினால் ஆனக் காலணிகளைப் பயன்படுத்தி இருக்கிறார்கள். உரோம் நாட்டில் ஆடம்பரப் பொருளாக இருந்த காலணிகள் மாவீரர் அலெக்சாண்டருக்குப் பிந்தைய அகசுடசு எழுச்சி வரையிலான 300 ஆண்டுக் காலத்தில் (கி.மு.323-கி.மு.30) ஓரளவு பரவலான பயன்பாட்டிற்கு வந்தன. இருப்பினும் கி.பி.1760இல் முதல் காலணித் தொழிலகம் அமைக்கப்பட்டது. எனினும் பிற நாடுகளில், 19ஆம் நூற்றாண்டில்தான் பொது மக்கள் காலணிகளைப் பரவலாகவும் பலவகைகளிலும் பயன்படுத்தத் தொடங்கினர்.

கிரேக்கத்தில் கி.மு.முதல் நூற்றாண்டில் தொன்மைக்கதை ஒன்றில் முதன்முறையாகக் காலணி இடம் பெற்றுள்ளது. (இக்கதையைத் தழுவி 1634 இல் கியம்பட்டிசுட்டா பசிலி(Giambattista Basile) என்பவர் கதைகளின் கதை(Lo cunto de li cunti) என்னும் நூலில் காலணி அடிப்படையில் கதையைப் படைத்தார். 1697 இல் சார்லசு பெர்ரால்டு (Charles Perrault) கண்ணாடிக்காலணியாக மாற்றிச் சுவையுடன் சிந்தரெல்லா (Cinderella) கதையைப் படைத்தார். இப்பொழுது, மரத்திலும் தோலிலும் மட்டும் அல்லாமல் வெள்ளி, தங்கம் முதலான மாழைகளிலும் வைரக் கற்கள் பதித்தும் வெவ்வேறு நேரத் தேவைக்கேற்பவும் ஆட்டக்காலணி, தாளணி, காலரணம், வார்மிதி, குதியணி, மிதியணி, எனப் பல்வகைக் காலணிகள் உருவாக்கம் பெருகி விட்டது.

தமிழ்நாட்டிலும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்தே காலணிகள் பயன்படுத்தி இருக்க வேண்டும். முறையான அகழ்வாராய்ச்சிகளை மேற்கொண்டால் பழந்தமிழ்நாட்டில் காலணிகளின் பயன்பாடு குறித்த பல சான்றுகள் கிடைக்கும். தமிழில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்களிலேயே மக்கள் பல்வகைக் காலணிகளைப் பயன்படுத்திய உண்மை வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

காலணிகள் பற்றிய குறிப்பு காணப்படும் இலக்கியங்கள் அவற்றை வழக்கமான அணிகளில் ஒன்றாகத்தான் குறித்துள்ளன. அடையல், அரணம், கழல், குத்திச் செருப்பு, குறட்டுச் செருப்பு, தோற்பரம், நடையன், மிதியடி, பாதுகை, பாவல், அரண், தோற்பரம், பாதக்காப்பு, அடிபுனைதோல் முதலான பல்வேறு வகையிலான காலணி பற்றிய சொற்கள் வெவ்வேறு பகுதிகளில் நடைமுறையில் உள்ளமை அவை காலங்காலமாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளமையை விளக்குகின்றன. இவற்றுள் தொடுதோல், செருப்பு, அடிபுதை அரணம் ஆகியவை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

வேடவன் செருப்பு அணிந்து செல்வதைப் புலவர் மருதன் இளநாகனார்

தொடுதோல் கானவன் (அகநானூறு: 34.3; 368.1)
எனக் குறிப்பிடுகிறார்.

காலணி அணிந்து செல்பவர்களைத்
தொடுதோல் அடியர்
என மதுரைக் காஞ்சியில்(636) புலவர் மாங்குடி மருதனாரும் பட்டினப்பாலையில் (265)புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் குறித்துள்ளனர்.

காலிற்கும் செருப்பிற்கும் இடையே புகுந்த கல் துன்பம் தருவதுபோல் பகைவர்க்குத் துன்பம் தருபவன் எனத் தலைவன் ஒருவனைப் பற்றிப் புலவர் ஒருவர்
செருப்பு இடைச் சிறுபரல் அன்னன் (புறநானூறு: 257.1)
எனக் கூறுகிறார்.
புலவர் மாமூலனார்,
அடிபுதை தொடுதோல் (அகநானூறு 101.9)
பயன்படுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளார். காலடி புதைந்து - மறைந்து- காணப்படும் அடிதோல் என்பதால் இது பாதங்களில் அணியும் மிதியடிபோல் இல்லாமல் காற்பகுதியை மறைக்கும் காலணி (சூ : shoe) ஆக விளங்கி உள்ளது எனலாம்.

காலடியை மறைக்கும் காலணியை அடிபுதை அரணம் எனக் குறிப்பிட்டுள்ளதைப் புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனாரின்

நோன்தாள்அடிபுதை அரணம் எய்தி (பெரும்பாணாற்றுப்படை 69-70)

என்னும் வரிகள் மூலம் அறிகிறோம். அடிபுதை அரணம் என்பது வீரர்களின் (பாதத்தையும் காலையும் மறைக்கும்) காலணியாக இருந்துள்ளது.

செருப்பை அணிந்த அடியவர்கள் தெளிந்த சுனை நீரைப் பருகி, அரிய சுரத்தைக் கடந்து சென்றனர் என்பதைக் குறிப்பிடும்

செருப்புடைஅடியர், தெண்சுனை மண்டும்
அருஞ்சுரம் (அகநானூறு: 129.13-14)

என்னும் வரிகள் மூலம் புலவர் குடவாயில் கீரத்தனார், மக்கள் காட்டுப்பாதையைச் செருப்பு அணிந்தே கடந்துள்ளனர் என்பதை விளக்குகிறார்.

காலணிகளை ஆடம்பரத்திற்காக அல்லாமல் தொடர்ந்து தேவைக்காகப்பயன்படுத்தி உள்ளனர். எனவே, காலில் வடு ஏற்பட்டுள்ளது. இதனைப் புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார்

தொடுதோல் மரீஇய வடுவாழ் நோன்அடி (பெரும்பாணாற்றுப்படை : 169)

எனக் குறிப்பிட்டுள்ளார். (செருப்பினை விடாமல்(மரீஇய) அணிந்தமையால் காலில் வடு ஏற்பட்ட வலிமையான கால்(நோன் அடி))

செருப்பு என்பது மலை ஒன்றிற்கும் பெயர். அதன் தலைவனான இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனைப்

பாடும்பொழுது மிதிப்பதற்கு அல்லாத செருப்பின் தலைவன் என வேறுபடுத்தி,

மிதிஅல் செருப்பின் பூழியர் கோவே (பதிற்றுப்பத்து : 21.23)

எனப் புலவர் பாலைக் கௌதமனார் பாடுகிறார். எனவே, காலணிகளைப் பிறநாட்டார் போல் ஆடம்பரமாகக் கருதாமல் அனைவரும் பயன்படுத்தி உள்ளனர் எனப் புரிந்து கொள்ளலாம்.

நடக்கும் பாதையில் ஏற்படும் இடர்களில் இருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள காலணிகளைப் பயன்படுத்திய நாம் வாழ்க்கைப் பாதையில் ஏற்படும் இன அழிப்பு இன்னல்களில் இருந்து நம்மைக் காக்கத் தவறிவிடுகிறோமே!

# 8. தவற்றைச் சுட்டிக்காட்டத் தவறிய தமிழாய்ந்த அறிஞர்கள்

— ஏலையா க.முருகதாசன்

அண்மை நாட்களில் கல் தோன்றி மண்தோன்றாக் காலத்து வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி என்ற சொற்றொடர் தொடர்பாக, அதனை அறிவியல் ரீதியாக ஏற்றுக் கொள்ள முடியாமலிருக்கின்றது என்ற எனது கருத்துக்கு எதிர்ப்புத் தெரித்தவர்களுக்கு எனது தாழ்மையான பதில் இது.

பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஐயனாரிதனார் என்ற புலவரால் எழுதப்பட்ட புறப்பொருள் வெண்பாமாலையில் ,

பொய் அகல நாளும்
புகழ் விளைத்தல் என் வியப்பாம்
வையகம் போர்த்த,வயங்கு ஒலி
நீர் கையகலக்
கல்தோன்றி மண் தோன்றாக்
காலத்தே வாளொடு
முன் தோன்றி மூத்த குடி தமிழ்க்குடி

என்ற பாடலில் வரும் கல்தோன்றி மண்தோன்றாக்காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்த குடி என்ற அறிவியலுக்கு ஏற்புடையதற்ற வரிகள் மீதான தர்க்க ரீதியான கேள்விகளை

எனது முகநூல் வாயிலாக வைத்த போது, அவற்றை நம்புங்கள் அதன்மீது வினா தொடுக்காதீர்கள் என்ற குத்திமடக்கும் பதில்கள் வந்தன.

ஆரியர்கள் மனிதர்களுக்குள் தாமே உயர் மனிதர்கள் என்று காட்ட வேண்டும் என்பதற்காக சூரிய சந்திரர்களுக்கு முன்னரே பிறந்தவர்கள் என்றும் சூரிய சந்திரர்களின் பிள்ளைகள் என்றும் பொய்சொல்லிப் புளுக அதை வாசித்த புலவர் ஐயனாரிதனார் ஆரியர்களுக்குப் பாடம் படிப்பிக்கிறேன் எனப் புளுகிப் பொய் சொன்னதே கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்தகுடி தமி ழ்க்குடி என்று ஒரு வேகத்தில் எழுதி அதைப் பதிவிட அந்தப் பொய் காலம் காலமாகத் தமிழர் பரம்பலில் மெய்யாகப் போலித் தோற்றம் கொண்டு சொல்லப்பட்டு வருகின்றது.

இலக்கியத்தில் இத்தகு கற்பனைகள் இருக்கலாம் மிகைப்படுத்தல் இருக்கலாம் ஆனால் அறிவியல் அதை உண்மையின் சுவடுகளாக ஒரு போதுமே ஏற்றுக் கொள்வதில்லை.

ஆரியர்களின் முட்டாள்தனமான சூரியர் சந்திரர் பிரபஞ்சத்தில் தோன்றும் முன்னரே தோன்றியவர்கள் நாம் என்று சொன்னதற்குப் பதிலாக தமிழ்ப்புலவரும் அதே மாதிரி ஏற்புடையதற்ற பதிலைச் சொல்லலாமா?.சொல்லியிருக்கத் தேவையில்லை.

பூமியும் பிற கோள்களும் சூரியனால் உமிழப்பட்ட நெருப்புப் பந்துகளிலிருந்தே உருவானவை என்று பிரபஞ்சவியல் விஞ்ஞானம் சொல்கிறது. பிரபஞ்சத்தில் சூரியன் தோன்ற முன்பு, சூரியனிலிருந்து பூமி தோன்ற முன்பு பிறந்தவர்கள் நாங்கள் என்று சொன்னால் அது எவ்வளவு சிரிப்புக்கிடமான பெரும் புளுகு என்பதை யோசிக்க யோசிக்க அவிவிவேக பூரணகுருவின் சீடர்களான மட்டி, பேதை, மடையன், மூடன் போன்றவர்களா இந்த ஆரியர்கள் என்று நினைப்பது மட்டுமல்ல நாமும் அத்தகையவர்களா என்று எம்மை நாம் ஆய்வு செய்ய வேண்டாமா?

புலவர் ஐயனாரிதனார் ஆரியர்களின் இந்த விட்டேற்றியான வார்த்தையை நினைத்து நினைத்துச் சிரிக்க வேண்டிய விடயத்தை எள்ளி நகையாடி அறிவியல் ரீதியாகப் பூமியில் தோன்றிய மனிதர்கள் எவ்வாறு சூரிய சந்திரர்களுக்கு முன் தோன்றினார்கள் எனக் கேள்வி எழுப்புவதை விட்டு விட்டு அவரும் அவர்கள் போலப் புளுகிப் பொய்யுரைத்தமையா னது புலவர் ஐயனாரிதனாரின் அறிவியலையும் கேள்விக்குறியாக்கிவிட்டது.

நாம் வாழுகின்ற பூமியில் தோன்றிய உயிரினங்களாகட்டும் மரம் செடி கொடிகளாகட்டும், கடல் ஆறு குளங்களாகட்டும், பூமிக்குள் புதைந்து கிடக்கும் கனிம வளங்களாகட்டும் அவையின் தோற்றம் பற்றி ஆய்வு செய்யும் போதெல்லாம் பிரபஞ்சத்தையும், பால்வெளிக் கிரகங்களையும் சூரியன் தொட்டு,

பூமிக் கோளையும் முழுமையாக ஆய்வுசெய்வதற்காக ஐம்பூதங்களான நிலம், நீர், நெருப்பு, ஆகாயம், காற்று என எல்லாவற்றினாலுமே அனைத்தும் உருவாக்க ப்பட்டவற்றிற்குச் சான்றாக நவீன விஞ்ஞானம் இன்னும் அவற்றை விளக்கியளித்த இயற்பியல் வேதியியல் பகுதிகளையும் உள்ளடக்காமல் எந்த ஆய்வையுமே மேற்கொள்ள முடியாது.

பிரபஞ்சவியலில் விஞ்ஞானம் கோள்களின் தோற்றம் பற்றி ஒரே முடிவைச் சொல்லவில்லை. சூரியனிலிருந்து உமிழப்பட்ட நெருப்புப் பந்துகளே பிரபஞ்சத்தின் அயல் சூழ்நிலை காரணமாக நெருப்பாறியும் அவை உருளை வடிவில் தோற்றம் பெற்றும் ஒன்றையொன்று கவர்ந்து இழுத்தமையால் தம்மைத்தாமே சுற்றிக் கோள்களாகின எனவும், இன்னொரு ஆய்வக் கண்டுபிடிப்பாக பிரபஞ்சக் கருந்துளையிலிருந்து வெடித்துச் சிதறிய சிறு சிறு துகள்களே கோள்களாக மாறின என்றும் விஞ்ஞானம் சொல்கின்றது.

கோள்களுக்கும் சூரியனுக்கும் இடையிலிருக்கும் தூரத்திற்கமைய கோள்களின் வெப்பம் கணிக்கப்படுகின்றது. சூரியனிலிருந்து அதிகத் தூரத்தில் இல்லாமலும் சூரியனிலிருந்து அருகில் இல்லாதிருக்கும் பூமியில் உயிரினங்கள் தோன்றுவதற்கு ஏதுவான பூமியின் தட்ப வெப்ப நிலையே காரணமாகும். நெருப்புப் பந்தாக உமிழப்பட்ட பூமி அதன் எரிமலைக்குழம்பு போன்ற தகதகக்கும் நெருப்பலைகள் தணிந்தாறவே பல

வாயிரம் கோடி ஆண்டுகள் ஆகியிருக்கும்.இன்றும் பூமியின் கருவாக இருப்பது தீக்குழம்புகளே. அதன் ஒரு பகுதியான நெருப்பாறுகளே எரிமலைக் குழம்புகளாக வெளிவருவதை நாமறிவோம். பூமியை அண்மித்திருந்த குளிர்ந்த நிலைகூட பூமியைக் குளிர வைத்திருக்கும். சூடாறிய பூமியின் வெளித்தோற்றம் கடினமான கற்பாறைகளுடையதாகவே இருந்திருக்கும்.

வெப்பமடைந்திருந்த பூமி குளிராகிச் சுருங்கச் சுருங்க பூமிக்குள்ளிருந்த கற்பாறைகள் பிதுக்கப்பட்டு பூமியின் மேற்பரப்பைத் துளைத்துக் கொண்டு மலைகளாக உருப்பெற்றன. இதுமட்டுமல்லாமல் வேறு கோள்கள் சிதைவுற்று அழிந்த போது அங்கிருந்து பூமியை நோக்கி விழுந்த கற்பாறைகளில் அமுக்கம் காரணமாக எரிந்தவை போக மிகுதியானவை பூமியில் அவை மலைகளாக வளர்ந்தனவென்றும் பூகவிற்பவியல் ஆய்வுகள் சொல்லுகின்றன.

இனி புறப்பொருள் வெண்பாமாலை என்ற புலவர் ஐயனாரிதனாரின் நூலுக்கு உரை எழுதியவர்கள் வாயிலாக அவர்கள் இப்பாடலுக்கு என்ன பொருள் கொண்டுள்ளனர் என்பதைப் பார்ப்போம். எனக்குக் கிடைத்த தகவலின்படி புறப்பொருள் வெண்பாமாலைக்கு உரை எழுதியவர்கள் இருவர். ஒருவர் தமிழகத்தைச் சேர்ந்த முனைவர் திரு.சுபாஷ் சந்திரபோஸ் அவர்களும், இன்னொருவர் இலங்கை யாழ்ப்பாண மாவட்டம் தொல்புரத்தைச் சேர்ந்தவரும்

மகாஜனக் கல்லூரியின் முன்னாள் தமிழாசிரியருமாகிய (நான் படித்த கல்லூரி) தொல்புரக்கிழார் வித்துவான் திரு.நா.சிவபாதசுந்தரனார் அவர்களும் ஆகும்.

இவரின் இந்த நூலை 1970களில் தெல்லிப்பழை அம்பனைக் கலை பெருமன்றத்தினராகிய நாங்களே மகாஜனக் கல்லூரியின் மாடி மண்டபத்தில் வெளியீடு செய்திருந்தோம். இந்தப் பாடல் தொடர்பாக எனது முகநூலில் நான் என்னுடைய சந்தேகங்களை அறிவியல் ரீதியாகக் கேள்விகேட்டுப் பதிவு செய்த வேளை கனடாவிலிருக்கும் பேராசிரியர் திரு.சேரன் உருத்திரமூர்த்தி அவர்களிடம் கேட்ட போது,வித்துவான் மாஸ்டர் எழுதிய புறப்பொருள் வெண்பாமாலை ஆராய்ச்சி நூலைப் பாருங்கள் எனச் சொல்லியதுடன் இப்பாடல் தமிழர்களை மகிழ்விக்கவும் உணர்ச்சி வசப்படுத்தலுக்குமாக எழுதப்பட்டதே தவிர உண்மையானது என்று எடுத்துக் கொள்ளத் தேவையில்லையென்றார்.(பேராசிரியர் திரு.சேரன் உருத்திரமூர்த்தி அவர்களும் மகாஜனக் கல்லூரிப் பழைய மாணவராவார்). அதனையடுத்து முனைவர் தேமொழி அவர்களிடம் கேட்ட போது அவர், இலக்கியத்தில் அறிவியலைத் தேட முடியாது.இது அறிவியலுக்கு ஒத்து வராது எனப் பதில் தந்தார்.

இப்பாடல் தொடர்பாக நான் பெரிதும் மதிக்கின்ற பழம்பெரும் எழுத்தாளராகிய இலக்கியச் செம்மல் திரு.இந்து மகேஷ் அவர்கள் எனது

கேள்விகளுக்குப் பதில் தருகையில் ஆரியர்கள் தமது தோற்றம் பற்றிப் புளுகிப் பொய் சொல்கையில், பூமியில் தோன்றிய மூத்தகுடிகள் என்று நாங்களும் புளுகுவோம் என்பதைச் சாட்சிப் படுத்த மலேசியாவிலிருக்கும் தமிழறிஞர் திரு.கலியபெருமாளை முன்னிறுத்தி அவர் சொல்வதை வாசித்தறியுங்கள் என்ற போது அதனை நானும் வாசித்தேன். அவரும் ஆரியர் அப்படிச் சொன்னார்கள் நாங்களும் புளுகிப் பொய் சொல்வதில் தவறில்லை என்ற கருத்துக்கமைய சொல்லியதை வாசித்தறிந்தேன்.

வித்துவான் திரு.நா.சிவபாதசுந்தரனார் அவர்கள் இப்பாடலுக்கு உரை எழுதுகையில் பூமிக்கோள் தோன்றிய பின் அதன் மாற்றத்தில் பூமி சுருங்குகையில் உள்ளிருந்த கற்பாறைகள் பூமியின் மேற்பரப்புக்கு வெளியே தள்ளப்பட்டு அது மலைகளாக உருப்பெற்றன. மேற்பரப்பில் இருந்த மலைகள் சூரிய ஒளியினாலும், மழையினாலும் சிதறிச் சிதிலமடைந்து மண்ணாகியது என்று விவரித்த அவர், மண் தோன்றாக் காலத்தினை வெளிப்படுத்துகையில், கல்தோன்றியக் காலத்தி ல் குள்ளமான மனிதர்கள் தோன்றினார்கள், அதனால்தான் மலையும் மலைசார்ந்த இடத்துக்குக் குறிஞ்சி நிலம் என்று பெயர் வந்ததெனக் குறிப்பிட்ட அவர், குறவர்களே தமிழர்களின் மூலவேர் என்பதனை மறைபொருளாகச் சுட்டிக்காட்டியிருந்தார்.

இந்தக் குள்ளமான மனிதர்களிடம் வாள் இருந்தது என்பது அபத்தமானது. ஏனெனில் மனிதர்கள் பூமியில் தோன்றிய காலம் மருத நிலம் தோன்றாத, மலைகளை மட்டுமே கொண்ட குறிஞ்சி நிலக்காலமாக இருக்கையில் அந்த மனிதன் அப்பொழுது ஆயுதத்துக் குரிய உலோகத்தைக் கண்டறிய வாய்ப்பே இல்லை.

இன்னும் இதனை ஆழமாகச் சிந்திக்கையில் பூமியில் தோன்றிய நீர்நிலைகளிலிருந்தும் பூமியின் பிரபஞ்சக் குளிரும் நீரைத் தாங்கிய நிலையில் அவை முகிலாகத் தோற்றம் பெற்றன என்றும், அத்துடன் பூமியில் காடுகள் தோன்றிய பின்னரே உயிரினங்கள் தோன்றின என்பதற்கு ஆதாரமாக இருப்பது மனிதர்கள் உட்பட உயிரினங்கள். சுவாசிக்கும் காற்றுக்குக் காரணமே பூமியில் உள்ள காடுகளும் மரங்களுந்தான். அமேசான் காடுகளே உயிரினங்களுக்குத் தேவையான பிராணவாயுவின் பெரும்பகுதியைத் தருகின்றன என்பது அறிவியல் ரீதியாக நிரூபிக்கப்பட்ட உண்மையாகும்.

அத்துடன் மழையைத் தருவதற்கும் மரங்களே காரணமாகின்றன அதனால்தான் நாடுகள் மரங்களை நட்டு வருகின்றன. சுத்தமான காற்று மழை போன்றவற்றுக்கு மரங்கள் அவசியமாகின்றன. அமேசான் காடு அழிந்துவிட்டால் பூமியில் உயிரினங்கள் அழிந்துவிடும் என்ற அச்சமும் நிலவிக் கொண்டிருக்கின்றது. எனவே கல்தோன்றிய போ

து உயிரினங்கள் தோன்றவில்லை காடுகள் தோன்றிய போதே உயிரினங்கள் தோன்றின அதில் மனித உயிரினமும் ஒன்றாகும்.

முன்தோன்றிய கல்தரையும், மலைகளும் மலைக்குகைகளும் பின்னர் தோன்றிய மரங்களும் உயிரினங்கள் வாழக்கூடிய ஒத்திசைவை உருவாக்கின. உயிரினங்கள் சுவாசிக்கக் காற்றுத் தேவைப்பட்டது. வெறும் மலைகளாக இருந்த இடத்தில் காற்று உருவாக முடியாது. காடுகளும் சூரியக் காற்றலைகளும் இணைந்து உயிரினங்கள் சுவாசித்து வாழக்கூடிய காற்றை உருவாக்கின. காடுகள் செடி கொடிகள் புல்பூண்டுகள் உருவாகிய பின்னரே உயிரினங்கள் தோன்றின என்பதே அறிவியல் ரீதியான உண்மையாகும். இதனை வித்துவான் திரு.நா.சிவபாதசுந்தரனார் கல்தோன்றிய போதே மனிதன் தோன்றிவிட்டான் என்றும் அந்த மனிதன் தமிழன் எனப் பாடலில் இருந்ததை விளக்கியுள்ளார்.

ஆனால் மனிதன் சுவாசிப்பதற்கான காற்று வெறும் கற்களாக இருந்த பூமியின் மேற்பரப்பில் எப்படி உருவாகியிருக்கும் என அவர் பாடலைக் கேள்விக்குட்படுத்தவில்லை. உயிரின ங்கள் அனைத்தும் சுவாசிப்பதற்குக் காற்று தேவையாக இருக்கின்றது. அந்தக் காற்றினில் கலந்திருக்கும் பிராணவாயுவை மரங்களால் மட்டுமே கொடுக்க முடியும், எனவே மரங்கள் தோன்றுவதற்கு ஏதுவான மருத நிலம் தோன்றாத காலத்தில் எப்படி மனிதன் தோன்றினான், எப்படி ஆயுதத்தைக் கண்டுபிடித்தான் என அவர்

பாடலைக் கேள்விக்கு உட் படுத்த வில்லை.அவருடைய பணி பாடல் எதைச் சொல்லியிருக்கின்றதோ அதை வெளிக்கொணர்வதாக இருந்தது.

பூமி உருண்டையின் தோற்றம் பற்றிய வரலாற்றினைக் கட்டம் கட்டமாக நுணுக்கமாக ஆய்வு செய்கையில் அறிவியல் ரீதியாக இப்பாடல் இடறுகிறது. கல்தோன்றிய போதே தமிழன் ஆயுதத்துடன் தோன்றிவிட்டான் என்பதை அறிவியல் அபத்தமாகவே கருத முடிகிறது. அத்துடன் அவர் மலைகளைப் பற்றி விளக்குகையில் பூமியின் வயிற்றிலிருந்து பூமி சுருங்கிய போது பிதுங்கி வெளிப்பட்ட மலை கிரனைட் மலைகள் எனத் தனது உரை எழுதலில் குறிப்பிட்டிருக்கிறார்.இதுகூட சூரியனிலிருந்து பூமி நெருப்புப் பந்தாய் உமிழப்பட்ட போது அதனுள் கொதித்துக் கொண்டிருந்த ஒரு வேதியியல் இயற்பியல் கலவையாகும்.இதவும் ஒரு கனிமமாகும்.கிரனைட் மலைமட்டுமல்ல அதுவல் லாத மலைகளும் பூமியின் உட்பகுதியிலிருந்து பூமியின் வெளித்தரையை கிழித்துக் கொண்டு வந்தன. விலங்குகளும் ஓர் உயிரினமே. அந்த உயிரினம் எப்பொழுது சுவாசித்தது என்று கேள்விகள் எழுகையில் காடுகளிலிருந்த பிராணவாயு கிடைத்ததால் காடுகள் உருவான பின்பே விலங்கினங்களும் தோன்றின என்பது அறிவியல் ரீதியாக உண்மையாகின்றது.

புறப்பொருள் வெண்பாமாலைக்கு உரை எழுதிய எவரையும் அறிவியல் ரீதியாகத் தவறு என்று

குற்றம் சாட்ட முடியாது. ஏதோ ஒரு வேகத்தில் ஆரியருக்கெதிராக இப்பாடலை எழுதிய புலவர் ஐயனாரிதனார் அவர்களே அறிவியல் ரீதியாக ஏற்றுக் கொள்ள முடியாத பாடலை எழுதியிருக்கிறார் என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது. அதுமட்டுமல்லாது காடுகளில் தோன்றிய பின் மனிதர் உட்பட உயிரினங்கள் தோன்றின என்பது பூமியில் ஆங்காங்கே உள்ள காடுகளில் வேறுவேறு தோற்றம் நிறமுடைய மனிதர்களும் தோன்றினார்கள் என்பதற்கமைய, தமிழகம் சார்ந்த மண் பரப்பில் தோன்றிய மனிதர்கள் பேசிய மொழி பிற்காலத்தில் தமிழ் எனப் பெயர் கொண்டதாயிற்று எனக் கொள்ளலாம்.

மனிதர்கள் தோற்றம் பெற்ற போது அவர்கள் எந்த மொழி அடையாளத்தையும் கொண்டிருக்கவில்லை. அவர்கள் பார்ப்பவற்றைக் குரலொலியாலும் சைகையாலும் உணர்த்தி, அது பின்னர் அவர்கள் நாகரீகத்தை நோக்கி வளர்ந்த போது மொழி அடையாளம் கொண்டு அதுவே மொழியாகியது. எனினும் கூட தமிழ்மொழியின் எழுத்துரு இன்று நாம் புழங்கும் எழுத்துருவாக அன்று இருக்கவில்லை. தமிழ்மொழி உருவாகிய போது இருந்ததை ஒத்த மொழித் தோற்றம் வேறு இன்றிருப்பது வேறு.

பல்வேறு இனக்குழுமங்களால் பல்வேறு மொழிகள் அவரவரின் குரல் ஒலிக்கேற்ப அடையாளப்படுத்தப்பட்டுள்ளன. மனிதன் எப்படித் தோன்றினான் என்பதற்கான நிலைநிறுத்தல் ஆய்வினை எந்தவொரு வரலாற்று

ஆய்வாளர்களும் முன்னிறுத்த வில்லை. ஆனால் காட்டிடை வாழ் மனிதனே முதல் மனிதன் என்ற முடிவினை வரலாற்றாய்வாளர்கள் முன்னிலைப்படுத்தி எழுதி வருகிறார்கள்.

கல்தோன்றிய காலத்தில் மனிதர்கள் மட்டுமல்ல உயிரினங்களே தோன்ற வாய்ப்பில்லை.புழு பூச்சிகளிலிருந்து விலங்குகள், பறவைகள் தொட்டு மனிதர்கள் வரை வாழ்வதற்குச் சுவாசித்தல் மிக முக்கியம் என்பதற்கமைய சுவாசப்பை கொண்ட உயிரினங்கள் தொடங்கி சுவாசப்பை இன்றி சுவாசிக்கும் உயிரினங்கள் வரை அவற்றுக்குக் காற்றும் அதில் கலந்திருக்கும் பிராணவாயுவைப் பிரித்தெடுத்துச் சுவாசிக்கும் உயிரியல் கோட்பாட்டுக்கமைய பூமியில் மரங்கள் தோன்றியதன் பின்னரே காற்றும் உற்பத்தியானது என்பது தெள்ளத் தெளிவாகிறது. உயிரினங்கள் உயிரோடு வாழ்வதற்கான வாய்ப்பற்ற கல் தோன்றிய காலத்தில் மனித உயிரினமே தோன்ற வாய்ப்பே இல்லை.

முதல் மனிதனான காட்டிடை மனிதன் சக மனிதனையே எதிரியாகப் பார்த்தவன். வலிமை உள்ள மனிதன் வலிமையில்லாத மனிதனை கையில் கிடைத்த கல்லால் அடித்துக் காயப்படுத்தியும் கொன்றுமிருக்கிறான். அனைத்துக் காட்டு மனிதர்கள் ஒத்திசைவான கூட்டு வாழ்க்கையை வாழ்வதற்கே பலநூறு ஆண்டுகள் சென்றிருக்கும். மிருகங்களிடமிருந்து தன்னைக்

காப்பாற்றிக் கொள்ள அவனுக்கு கையில் கிடைத்த ஆயுதமே கற்கள்தான். கற்களால் மிருகங்களைத் தாக்கியவன் தற்செயலாகக் கிடைத்த கூர்மையான கற்களின் பகுதியால் மிருகங்களைத் தாக்கிய போது சாதாரணக் கற்களினால் மிருகங்கள் பாதிப்பதைவிடக் கூர்மையான கற்களால் மிருகங்களைத் தாக்கும் போது அதிகளவு அவற்றுக்கு அதிகளவு பாதிப்பு ஏற்படுவதைக் கண்டறிந்து கற்களைக் கூர்மைப்படுத்தினான்.

காட்டில் வாழ்ந்து கொண்டிருந்த மனிதன் இடி, மின்னல், மழை, நெருப்பு, மிருகங்களின் தொல்லைகள் போன்றவற்றுக்குத் தீர்வு காண சூழ்நிலை தானாகவே அவனைத் தள்ளிச் சென்றது. பின்னர் கல்லால் ஆன கூர்க்கல்லை நீளமான தடிகளில் கட்டி அதனை ஆயுதமாகப் பாவித்தான்.தடிகளையே கூராக்கி அதையும் ஆயுதமாக்கினான். காட்டிடை மனிதன் நீர்நிலை நோக்கி நகர்ந்து விவசாயம் செய்தான், மீன்பிடித்தான் இவ்வாறான வளர்ச்சியின் பின்னரே காட்டிடை மனிதர்கள் நவநாகரீகத்தை நோக்கி நீர்; நிலைகளை அண்டி வாழத் தொடங்கினான்.அப்பொழுதுதான் மண்ணை ஊடுருவிப் பார்க்கும் சிந்தனையே அவனுக்கு ஏற்பட்டது. அவ்விஞ்ஞான நுட்பறிவே கனிமவளங் களைக் கண்டறியும் அறிவியல் ரீதியான சிந்தனையை மனிதக்குலத்துக்குக் கொடுத்தது. அதன் பின்னரே மண்ணுக்குள் இருக்கும் உலோகங்களைக் கண்டறிந்த மனித குலம் அதனை எவ்வாறு பயன்படுத்தலாம் என்ற

சிந்தனையின் வாயிலாக பெற்ற அறிவே ஆயுதமாகவும், வேறு பொருட்களாகவும் தோற்றம் பெற்றன.

இதுவேதான் மனிதகுல வரலாற்றில் உலோகங்களைக் கண்டறிந்த வரலாறாகும். அறிவியல் ரீதியாக, மனிதர்களின் படிமுறை வளர்ச்சியைக் கவனத்தில் கொள்ளாது. ஆரியர் சொன்ன புளுகிற்கு, பொய்க்கு எதிர்ப்புளுகாக புலவர் ஐயனாரிதனார் எழுதிய கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து வாளொடு முன்தோன்றிய மூத்தகுடி தமி ழ்க்குடி என்ற பாடலை ஆய்ந்தறிந்து அதில் அறிவியல் ரீதியாக உள்ள தவற்றை நுட்பமாக ஆராயாமல் எழுத்திலும் மேடைப்பேச்சுகளிலும் முன்னிறுத்தியமை தவறேதான். பத்தாம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை அதை தர்க்க ரீதியாக அறிவியல் ரீதியாக எதிர்கொண்டு உண்மைத்தன்மையைத் தமிழினத்துக்குத் தமிழாய்ந்த அறிஞர்கள் இதனைச் சொல்லியிருக்க வேண்டும்.

தமிழினத்துக்குப் பெருமையான விடயந்தானே அப்படியே அது இருக்கட்டும் என்று இதுவரை ஒரு பொய்யைப் புளுகை காவிக் கொண்டு வந்ததன் மூலம் தமிழர்களின் நுண்ணறிவு கேள்விக்குறியாகி உள்ளது. உண்மை பேச வேண்டும், நேர்மையாக இருக்க வேண்டும், பிழையென்றால் பிழையென்று சொல்ல வேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட கற்பனைக் கதைதான் நக்கீரன் சிவபெருமான் விவாதம். இக்கதை உண்மையானதுதானா

என்பது விவாதத்திற்குரிய விடயம். எனினும் இக்கதை மூலம் உண்மையைப் பேசு பிழை என்றால் பிழை என்று சொல் என்பதற்காக,சிவபெருமானின் மனைவியான பார்வதியின் கூந்தலுக்கு இயற்கையாகவே வாசனை கிடையாது, நெற்றிக் கண்ணைத் திறப்பினும் குற்றம் குற்றமே என்று தமிழ்ச் சங்கத் தலைமைக்கவி நக்கீரன் சிவபெருமானையே கேள்வி கேட்டானே, அது போல புலவர் ஐயனாரிதனாரின் இப்பாடலை நோக்கி தமிழறிஞர்கள் ஏன் கேட்கவில்லை.

தவறான கருத்தினைக் கொண்ட தவற்றைச் சுட்டிக்காட்டத் திரணியற்று நின்றீர்களே தமிழறிஞர்காள். இது வெறும் இலக்கியச் சுவைக்கென்றாலும் தமிழரின் வரலாற்றோடு பின்னிப்படரவிட்டீர்களே. உலகளாவிய ரீதியில் இருக்கும் தமிழறிஞர்களை நோக்கியே இக்கேள்வியை முன் வைக்கிறேன்.

இதற்கு இலங்கையில் உரையெழுதிய தமிழறிஞர் தொல்புராக்கிழார் வித்துவான் திரு.நா.சிவபாதசுந்தரனார்கூட அறிவியல் சார்ந்து சிந்திக்காமல் விட்டுவிட்டாரே.

# 9. இந்திய மொழிகள் பேராயம்: காலத்தின் கட்டாயம்

— கௌதம சன்னா

இந்தியாவில் எத்தனை மொழிகள் இருக்கின்றன என்னும் வினாவுக்கு இன்றைய நவீன யுகத்தில்கூடத் துல்லியமான விடை கிடைப்பதில்லை. அங்கீகரிக்கப்படாத மொழிகள் காலப்போக்கில் முற்றாக அழிந்துபோன வரலாற்றை உணர்ந்து, இந்திய மொழிகள் பேராயத்தை அமைப்பது காலத்தின் தேவை.

இந்தியாவின் மொழி வரலாறு:
ஐரோப்பியர்கள் இந்தியத் துணைக்கண்டத்தின் மொழிகளைப் பற்றிப் பரந்துபட்ட ஆய்வை மேற்கொள்ளும்வரை மொழிகளின் எண்ணிக்கை பற்றி யாரும் கவலைப்படவில்லை. இந்தியா ஒரு நவீன நாடாகப் பரிணமிப்பதற்கு முன்பு, ஒவ்வொரு மொழியும் தனக்கென ஒரு நிலப்பரப்பையோ பண்பாட்டுப் பரப்பையோ வைத்துக்கொண்டிருந்தன. ஒவ்வொன்றும் சுதந்திரமாகவே இயங்கின; புதிய மொழிகளும் தோன்றிக்கொண்டிருந்தன. பிற நாடுகள் அல்லது கண்டங்களுடன் ஒப்பிட்டால், இந்தியத்

துணைக்கண்டத்தின் இந்தப் பன்மைத்துவம் வியக்கவைக்கிறது.

ஆனால், இந்தியா என்கிற நவீன நாடு உருவான பிறகு எல்லாம் மாறத் தொடங்கியது. அந்த மாற்றங்களை ஒவ்வொரு மொழி சார்ந்த மக்களும் ஏற்றுக்கொண்டு, தம்மை இந்தியராக உணரத் தொடங்கினார்கள். பெரும் போராட்டங்கள் இன்றி இது நிகழ்ந்தது. இதற்குக் காரணம் நவீன இந்தியாவைக் கட்டமைத்தவர்களா அல்லது அதற்கு ஒத்துழைத்த மக்களா என்னும் கேள்வி முக்கியமானது.

'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' என்கிற நூலில் இந்தியாவில் 15 பெரும் மொழிகளும் நூற்றுக்கும் மேற்பட்ட பேச்சு மொழிகளும் இருப்பதாக ஜவஹர்லால் நேரு குறிப்பிட்டிருந்தார். ஆனால், சுதந்திர இந்தியாவின் இந்திய மொழிகளுக்கான கொள்கையாக அவர் வகுப்பார் என்று யாரும் எதிர்பார்த்திருக்க முடியாது. இந்திய அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்பட்டபோது, அதன் அங்கீகரிக்கப்பட்ட மொழிகளாக 16 இந்திய மொழிகள் இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 8ஆவது அட்டவணையில் சேர்க்கப்பட்டன. பிறகு, மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட வேண்டும் என்கிற கோரிக்கையை நடைமுறைப்படுத்த மொழிவாரி மாநிலங்கள் மறுசீரமைப்புக் குழு

அமைக்கப்பட்டது. அப்போது, "மொழிவாரி மாநிலங்கள் என்பது வியப்பாக இருக்கிறது. உண்மையில் உங்களால் மொழிவாரி மாநிலங்களை அமைக்க முடியாது. ஒரு மாநிலத்தை அமைத்துவிட்டு, அதில் பெரும்பான்மையாகப் பேசப்படும் மொழியை அம்மாநிலத்தின் மொழியாக அமையுங்கள்" என்று அக்குழுவுக்கு டாக்டர் அம்பேத்கர் பரிந்துரைத்தார்.

இந்த எச்சரிக்கை தொடக்கத்தில் புரிந்துகொள்ளப் படவில்லை. ஆனால், பிரச்சினையை ஆய்வுசெய்த குழு, அவரது பரிந்துரையின் ஆழத்தைப் புரிந்துகொண்டது. ஏனெனில், 1951 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி சுமார் 783 தாய்மொழிகள் இந்தியாவில் பேசப்படுவதாக மதிப்பிடப்பட்டிருந்தது. எனவே, ஒரு மொழிக்கு ஒரு மாநிலம் என்பது சாத்தியமில்லை என்பதைக் குழு உணர்ந்து கொண்டது. இறுதியில், அம்பேத்கரின் வழிகாட்டுதலே நடைமுறைக்கு வந்தது. சரி, 1951ஆம் ஆண்டு வெளியான மொழிகளின் எண்ணிக்கை இறுதியானதுதானா?

கவனம் பெறாத தகவல்:
1961 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்போது இந்தியாவில் 1,652 மொழிகள் இருப்பதாக அறியப்பட்டது. 1971 கணக்கெடுப்பில் மேலும் 700 மொழிகள் புழங்குவதும் தெரியவந்தது. இந்தத்

தொகை ஒவ்வொரு பத்தாண்டுகளுக்கும் வளர்ந்துகொண்டே வந்தது. இந்தப் புள்ளிவிவரங்கள் குறித்து மக்களவையில் ஒரு கேள்விக்குப் பதிலளித்த பண்பாட்டுத் துறையின் அப்போதைய அமைச்சர் ஜெயபால் ரெட்டி, "1991 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி 1,576 மொழிகள் வகுப்புவாரியாக அணி பிரிக்கப்பட்டன. 1,796 மொழிகள் இந்தப் பட்டியலுக்குள் இன்னும் கொண்டு வரப்படவில்லை. இவற்றில் 18 மொழிகள் அதிகாரப்பூர்வ அரசு மொழிகள். மீதமுள்ள மொழிகள் வெறும் பேச்சு வழக்கில் மட்டுமே உள்ளன. இவற்றில் பெரும்பாலான மொழிகளுக்கு எழுத்து வடிவமே இல்லை" என்றார். இந்தப் பதில் வெறும் தகவலாகவே கடந்துவிட்டதா?

2011 மக்கள்தொகைக் கணக்கெடுப்பு விவரங்கள் ஆய்வாளர்களை மேலும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கின. அதன்படி நாட்டின் மக்கள்தொகை 121 கோடி. பேசப் படும் மொழிகள் 19,569, அதில் 10,000 அல்லது அதற்கு மேற்பட்டவர்களால் 121 மொழிகள் அதிகளவில் பேசப்படுகின்றன. இதில் இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 8ஆவது அட்டவணையின் கீழ் சேர்க்கப்பட்டுள்ள 121 மொழிகள் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. அங்கீகரிக்கப்பட்டவை 22 மொழிகள். அங்கீகரிக்கப்படாதவை என 99 மொழிகள் அட்டவணை இடப்பட்டுள்ளன. மொத்த மக்கள்தொகையில் 96.71% பேர்

அட்டவணையிடப்பட்ட 22 மொழிகளில் ஒன்றைத் தாய்மொழியாகக் கொண்டுள்ளனர். மீதமுள்ள 3.29% பேர், பிற மொழி பேசுபவராக உள்ளனர். இதுவே இறுதியானதல்ல; கணக்கு மேலும் வளர்ந்துவருகிறது.

மொழியியல் ஆய்வுகள்:
இந்திய மொழிகள் தொடர்பான இந்தப்புள்ளிவிவரங்கள் ஏன் வளர்ந்தன ? இதற்குக் காரணம் பண்பாட்டுக் கலப்புகளும், மக்களின் இடப்பெயர்வுகளும் அல்லது மொழியைக் காப்பாற்றிக்கொள்ளத் தங்களைத் தாங்களே தனிமைப் படுத்திக் கொண்ட மக்களையும் சுட்டிக்காட்டலாம். ஆயினும் இந்த விவரங்களை இந்திய அளவில் அதிகாரப்பூர்வமாக்கியவர், இந்தியக் குடிமைப் பணி அதிகாரியும் மொழியியல் ஆய்வாளருமான சர் ஜார்ஜ் ஆபிரகாம் கிரியெர்சன் (Sir George Abraham Grierson).

1886 இல் வியன்னாவில் நடைபெற்ற 7ஆவது கீழை மொழியியல் மாநாட்டில் கலந்துகொண்ட ஜார்ஜ் கிரியெர்சன், அங்கே முன்வைத்த திட்டத்தின் அடிப்படையில், பிரிட்டிஷ் இந்திய அரசு 1894இல் இந்திய மொழியியல் கணக்கெடுப்பு (Linguistic Survey of India) என்கிற அமைப்பை உருவாக்கியது. இந்த அமைப்பு இந்தியா முழுமைக்கும் ஆய்வுசெய்து, 364 இந்திய மொழிகளைக் கண்டறிந்து, 12 தொகுதிகள் கொண்ட தொகுப்பை 1903-1923க்கு

இடையில் வெளியிட்டது. மேம்படுத்தப்பட்ட அந்த ஆவணத்தின் மூலமாகத்தான் இந்திய மொழிகள் பற்றிய அதிகாரப்பூர்வமான எண்ணிக்கை தெரியவந்தது. இந்த அமைப்பு 1928இல் தனது பணியை நிறுத்திக்கொண்டது. இந்திய மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மூலம் மொழிகளின் எண்ணிக்கை மட்டுமே தொடர்ந்தது. ஆனால், மொழியியல் ஆய்வுகள் தொடரப்படவில்லை. இந்த நிலையில்தான், மாநில மறுசீரமைப்புக் குழு 1953இல் அமைக்கப்பட்டு, 1955இல் தனது அறிக்கையை அளித்தது. அது விவாதிக்கப்பட்டு, 1956 ஆகஸ்ட் மாதம் சட்டமாக வெளியிடப்பட்டது.

இக்குழுவின் பரிந்துரையின்படி 1957இல் சிறுபான்மை மொழியினர் ஆணையர் பதவி உருவாக்கப்பட்டது. அந்த ஆணையம் சிறுபான்மை மொழி பேசும் மக்களின் நலன் தொடர்பான பணிகளை மேற்கொள்ளும் என்று சொல்லப்பட்டாலும், ஒவ்வோர் ஆண்டும் அந்த ஆணையர் அறிக்கைகளை வெளியிடுவதைத் தாண்டிப் பெரிதாக எதையும் செய்வதில்லை. இந்தச் சூழலில், 1894க்குப் பிறகு 364 மொழிகள் எனக் கணக்கிடப்பட்டு, 2011இல் 19,569 மொழிகள் இந்தியாவில் பேசப்படுவதாக வந்திருக்கும் புள்ளிவிவரம் மலைக்க வைப்பதில் ஆச்சரியமில்லை. இவ்வளவு மொழிகள் தோன்றும் அளவுக்கு இங்கு மொழிவளம் இருப்பதை எண்ணி நாம் பெருமைப்படலாம்.

ஆனால், அது எவ்வளவு காலத்துக்கு நீடிக்கும் என்பது தெரியவில்லை.

உரையாடல் தேவை:
இவ்வளவு பெரிய துணைக் கண்டத்துக்கு ஒரு பொது மொழி வேண்டும் என்று குரல்கள் ஒலிப்பதைப் பார்க்க முடிகிறது. தொழில்நுட்ப வசதிகள் தோன்றியிராத அக்காலத்தில், இதெல்லாம் கவர்ச்சிமிக்கதாக இருந்திருக்கலாம். இப்போதும் அதே காரணத்தை முன்வைப்பது சரியல்ல, இப்போதைய தேவை இந்திய மொழிகளுக்கு இடையே ஓர் உரையாடல். அத்துடன் அதை முன்னெடுக்கும் ஓர் அகில இந்திய அமைப்பும் தேவை. 'இந்திய மொழிகள் பேராயம்' (Languages Assembly of India) என்ற தன்னாட்சி அமைப்பு இன்றைய காலத்தின் தேவை.

இவ்வமைப்பில் எல்லா மொழிகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க முடியாது என்பது உண்மைதான் என்றாலும், குறைந்தபட்சம் அரசமைப்புச் சட்டத்தின் 8ஆவது அட்டவணையில் சேர்க்கப்பட்ட அங்கீகரிக்கப்பட்ட, அங்கீகரிக்கப்படாத மொழிகளுக்கான பேரவையாக அது அமைய வேண்டும். படிப்படியாகப் பிற மொழிகளைச் சேர்க்கலாம். இவ்வமைப்பின் மூலமான மற்ற மொழிகளின் வளங்கள் பரிமாறப்படவும், சிறுபான்மை மொழிகள் நசுக்கப்படாமல் பிற மொழியினரின் ஒத்துழைப்பைப் பெறவும்

முடியும். மொழி என்பது தகவல் பரிமாற்றத்துக்கான கருவி மட்டுமல்ல, அது உணர்வுப் பரிமாற்றத்துக்கும் சிந்திக்கும் ஆற்றலை வளர்த்துக்கொள்வதற்குமான இயற்கைக் கட்டமைப்பு. மொழிப் பரிமாற்றம் தொடர்பான இணைய வசதிகள் பெரும் திறப்பை உருவாக்கியுள்ள இக்காலத்தில், இந்திய மொழிகள் பேராயத்தின் பணிகள் மூலம் கவனிக்கப்படாத ஏதோ ஒரு மொழி எளிமையாகக் கவளம் பெற்று, அது உலக மொழியானாலும் ஆகலாம். இல்லையெனில், நாம் கவனிக்காமலே பல மொழிகள் சிதைவுற்று அழிந்தும் போகலாம்!

குறிப்பு: இந்து தமிழ் திசை, பிப்ரவரி 1, 2024 இதழுக்கு வழங்கப்பட்ட கட்டுரை

# 10. அறிவியல் அடிப்படையில் சீரமைக்கப்பட்ட தமிழ் நாட்காட்டி

— முனைவர் தேமொழி

அறிவியல் அடிப்படையில் அமைந்த இந்திய தேசிய நாட்காட்டி இந்து சமயத்தின் நாட்காட்டிகளின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது. வட இந்தியாவில் பண்டைய நாட்களில் நாள் கணிப்பு மத்தியப் பிரதேசத்தில் உள்ள உஜ்ஜயினி நகரை (Ujjain, Madhya Pradesh- GPS: 23.11N, 75.79E) அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்பட்டது. இந்திய விடுதலைக்குப் பின்னர் இந்திய தேசிய நாட்காட்டி கணிப்பிற்கு சத்தீஸ்கர் மாநிலத்தின் கரக்வான் (Kharagwan, Chhattisgarh- GPS: 23.11N, 82.30E) என்ற ஊர் அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. ஏனெனில் இந்தப் பகுதிகளின் வழியாகத்தான் கடகரேகை (Tropic of Cancer 23.43617°) செல்கிறது. கதிரவன் தன் வடதிசைச் செலவில் இந்த இடத்திற்கு நகர்ந்த பிறகு தென்திசைக்குத் திரும்பி தென்திசைச் செலவைத் தொடங்கிவிடும் என்று நாம் அறிவோம். இந்தக் கோட்டிற்கு வடக்கில் உள்ள எந்த இடத்திற்கும் சூரியன் தலை உச்சிக்கு நேராக என்றுமே வராது. ஆகவே

அப்பகுதி மக்களுக்கு தாங்கள் வசிக்கும் பகுதியில் நிழலற்ற நாள் (Zero Shadow Day) என்ற இயற்கை நிகழ்வைப் பார்க்க வாய்ப்பு இல்லை. ஆம், வட இந்தியாவும் தென் இந்தியாவும் பலவகையில் வேறு வேறு வாழ்வியலைக் கொண்டவை. புவிப் பரப்பின் மீது நர்மதை, தபதி ஆறுகளும், விந்திய சாத்பூரா மலைத்தொடர்களும் மட்டும் வட இந்தியா தென் இந்தியா என்று பிரிக்கவில்லை; கதிரவனின் நகர்வுகளும் வான்வழியே கடகரேகை கோட்டிற்கு வடபகுதி, கடகரேகை கோட்டிற்குத் தென்பகுதி என இந்தியாவைப் பிரிக்கிறது. கடகரேகை கோட்டிற்குத் தென்பகுதி வெப்பமண்டலப் பகுதியாக (tropical zone) இயற்கையிலேயே அமைந்துள்ளது.




கடகரேகைக்கு வடபகுதியில் உள்ள வட இந்தியர் விக்கிரம ஆண்டுக் கணக்கைப்

பின்பற்றுபவர்கள். இது ஒருவகை கதிர்-மதிவழி நாட்காட்டி. நிலவின் சுழற்சியை அடிப்படையாகக் கொள்வதால் அவர்களது பண்டிகை நாட்கள் இஸ்லாமிய நாட்காட்டி போல ஒவ்வொரு ஆண்டும் 11 நாட்கள் முன்னரே நிகழும். (அதாவது, மார்ச் 25, 2024 அன்று அந்த ஆண்டின் ஹோலி பண்டிகை கொண்டாடுபவர்கள், அடுத்த ஆண்டில் மார்ச் 14, 2025 இல் ஹோலி பண்டிகை கொண்டாடுவார்கள்.) இந்தியாவின் தென்பகுதியில் கதிர்வழி நாள் கணக்கீடு வழக்கத்தில் உள்ளதால் அவர்கள் பண்டிகைகள் ஒவ்வொரு ஆண்டும் பொங்கல் பண்டிகை போல ஆண்டின் அதே நாட்களில் அமையும். இது போன்ற கணிக்கும் அடிப்படை மக்கள் தாங்கள் வாழும் பகுதிக்கேற்ப, பருவ காலங்களைத் துல்லியமாகக் கணக்கிட இயற்கை வகுத்துக் கொடுத்த இயல்பான நிலைதான் காரணம்.

நாட்காட்டி அமைக்கும் மக்கள் தங்கள் வாழ்வியல் வாழிடம் சூழலுக்கு ஏற்றவாறுதான் நாட்காட்டி உருவாக்குவார்கள், அதுதான் இயல்பும் கூட. உலகெங்கிலும் வழக்கத்தில் உள்ள நாட்காட்டிகள் மக்களின் தேவைக்கு ஏற்ப உருவானவை. பொதுவாக நாட்காட்டிகள் என்பவை துல்லியமாகப் பருவ காலங்களைக் கணக்கிட உருவாக்கப்பட்ட மனித குல கண்டுபிடிப்பு.

ஆனால், இன்றைய நிலையில் சூரிய சித்தாந்த கணக்கின் அடிப்படையில் உள்ள தமிழ் நாட்காட்டியில், நாட்கள் பருவங்களைத் துல்லியமாகக் குறிக்காமல் விலகிச் செல்கின்றன. பருவகால நாட்கள் விலகிச் செல்வதைத் தவிர்க்க, தமிழர் தங்கள் நாட்காட்டியைச் சீரமைப்பது தேவையானதும் வரவேற்கத்தக்க முயற்சியும் ஆகும்.

தமிழ் நாட்காட்டியைச் சீரமைக்கும் பொழுது இந்திய தேசிய நாட்காட்டி அடிப்படையில் இளவேனில் சமநாளை சித்திரை முதல் நாளாகக் கொள்ள இயலாவிட்டாலும் கூட, தமிழகப் பகுதியில் நடக்கும் கதிரவன் நகர்வுகளைக் கொண்டு, தமிழகத்தில் இப்பொழுது வழக்கத்தில் உள்ள ஏப்ரல் 14 - சித்திரை முதல் நாளையும், தைப்பொங்கல் புத்தாண்டை ஜனவரி 14 ஆம் நாளிலும் என்றுமே அதே நாளில் அமையுமாறும் நிலை நிறுத்தலாம். தமிழ் நாட்காட்டியை வானியல் அடிப்படையில் மாற்றி அமைக்கலாம். இது இந்திய தேசிய நாட்காட்டி உருவாக்கப்பட்டதன் அடிப்படைதான். அதே அறிவியல் வானியல் அடிப்படையில் தமிழ் நாட்காட்டியைச் சீரமைக்கலாம்.

- ஒரு நாட்காட்டி கட்டமைப்பில் பலவிதிகள் அடிப்படையாக உள்ளன. நாட்காட்டியைச் சீரமைப்பு செய்வதற்கு இந்த விதிகள் மாற்றி

அமைக்கப்படுவதுண்டு. நாட்காட்டியில் மாற்றம் என்பது பெரும்பாலோர் எண்ணுவது போல அரிதான ஒன்று அல்ல. எடுத்துக்காட்டாக, சீனர்களின் நாட்காட்டி கடந்த 2500 ஆண்டுகளில் 50 முதல் 100 முறை வரை மாற்றியமைக்கப்பட்டுள்ளது. அவையும் பருவகாலக் கணிப்பைத் துல்லியப்படுத்தவே மேற்கொள்ளப்பட்டன.[1]

- கதிர்வழி நாட்காட்டியில் சீரமைப்பு மாதங்களின் நாட்களைக் கூட்டுவதிலும் குறைப்பதிலுமாக மேற்கொள்ளப்பட்டு ஓரை (இராசி/ zodiac) ஒன்றை கதிரவன் கடக்கும் காலத்திற்கு ஏற்ப சீர் செய்யப்படுவது வழக்கம். துல்லியமாக்கப்பட்டுவிட்ட கிரிகோரியன் நாட்காட்டியைக் கூட இன்றுவரையில் சீர் செய்யும் வகையில் பலரால் பல கருத்துகள் முன்வைக்கப்பட்டு, பல கோணங்களில் ஆராயப்பட்டு வருகிறது.[2]
- நாட்காட்டி சீரமைப்பு குறித்த பல வானியல் ஆய்வுக் கட்டுரைகள் ஆய்விதழ்களில் தொடர்ந்து வெளிவந்த வண்ணம்தான் உள்ளன.[3]

மாற்றியமைக்கப்பட்ட கிரிகோரியன் நாட்காட்டி ஒன்று மேகநாத் சாகா வின் கவனத்தைக் கவர்ந்து அவரும் ஐக்கிய

நாடுகள் அவையில் அதைப் பரிந்துரைத்துள்ளார்.

வரலாறு நெடுகிலும் நாட்காட்டி கட்டமைப்பின் விதிகள் பல வகையில் மாறுதலுக்கு உள்ளாகி இருக்கிறது. பொதுவாக அவை:

- பருவக்கால ஆண்டுக் கணக்கு (புவி கதிரவனைச் சுற்றி வரும் சராசரி நாட்கள் 365.2422 நாட்கள், இந்த முறையில் நாள்மீன்களுடன் நாளைப் பொருத்துவது கைவிடப்படும்), நாள்மீன் சுழற்சியுடன் இணைக்கப்பட்ட ஆண்டுக் கணக்கு (புவி கதிரவனை ஒரு முறை சுற்றத் தொடங்கிய நாள்மீனுக்கே மீண்டும் வந்தடையும் சராசரி காலம் 365.2564 நாட்கள்) ஆகிய இவற்றில் எந்த முறையைக் கடைப்பிடிப்பது;
- ஒரு மாதத்தின் நாட்களின் எண்ணிக்கையை என்னவென்று நிர்ணயிப்பது;
- எந்த ஆண்டை லீப் ஆண்டாகக் கணக்கில் கொள்வது, எந்த ஆண்டை சாதாரண ஆண்டாகக் கணக்கில் கொள்வது;
- ஆண்டுகளின் எண்ணிக்கையை எந்த எண்ணிக்கையில் தொடங்குவது;
- எந்த மாதத்தை எந்த நாளை ஆண்டின் தொடக்கமாகக் கொள்வது (சமநாள் அல்லது கதிர் திருப்ப நாள்)

- எந்தக் குறிப்பிடத்தக்கச் சிறப்பு நிகழ்வைத் தொடர் ஆண்டின் தொடக்கப் புள்ளியாகக் கொள்வது;
- ஒரு நாளின் காலை, மாலை, நண்பகல், நள்ளிரவு எந்தப் பொழுதை ஒரு நாளின் தொடக்கமாகக் கொள்வது;
- மாதங்களின் பெயர்களை மாற்றுவது;
- சமூக வாழ்வியலுடன் இசைந்து செல்வது போல மாற்றி அமைப்பது;
- வானியல் நிகழ்வுகளுடன் இசைந்து செல்வது போல மாற்றி அமைப்பது;
- பருவகாலத்துடன் இசைந்து போகுமாறு மாற்றி அமைப்பது;
- நாட்களின் பெயரை மாற்றுவது எனப் பல வகையில் வரலாறு நெடுகிலும் நாட்காட்டிகள் மாற்றம் செய்து சீரமைக்கப்பட்டுள்ளது. [1]

மேகநாத் சாகா தலைமையில் இந்திய தேசிய நாட்காட்டி சீரமைப்புக் குழுவும் நாட்காட்டி சீரமைப்பிற்கான விதிகளைக் கீழ்க் கண்டவாறு வரையறுத்துக் கொண்டது:

- ஆண்டின் கணிப்பு வானியல் அடிப்படையில் அறிவியல் முறையில் இருக்க வேண்டும்;
- ஆண்டு பருவ ஆண்டாக (Tropical Year) இருக்க வேண்டும்;
- நாள், மாதம், ஆண்டு, பருவங்கள் ஆகியன சரியாக வரையறுக்கப்பட வேண்டும்;
- நள்ளிரவில் நாள் தொடங்க வேண்டும்;

- ஒரு மாதம் என்பது கதிரவன் ஓர் ஓரை (Zodiac) கொண்டிருக்கும் 30 பாகையைக் கடக்கும் காலமாக இருக்க வேண்டும்;
- இளவேனில் காலத்துப் பகல்-இரவு சமநாளில் (spring equinox), மார்ச் 21, அல்லது மார்ச் 22 அன்று, அதாவது சித்திரை முதல் நாள் ஆண்டின் தொடக்கம் என்ற அடிப்படை கடைப்பிடிக்கப்பட வேண்டும்;
- ஒரு பருவ காலத்திற்கு 2 மாதங்களெனவும்;
- ஆண்டின் கால அளவு 365.2422 நாட்கள் என இருக்க வேண்டும்;
- மாதத்தின் நாட்கள் தசம எண்ணாக இல்லாது முழு நாட்களாக இருக்க வேண்டும்;
- மாதங்களின் நாட்கள் 30 அல்லது 31 நாட்களாகக் கொள்ள வேண்டும்;
- புவி நீள்வட்டப் பாதையில் கதிரவனைச் சுற்றிச் சுழல்கையில் கெப்ளர் இரண்டாம் விதிப்படி கதிரவனிடம் இருந்து சற்று தொலைவில் புவி இருக்கும் மாதங்களில் புவி மெதுவாகச் சுழன்று ஓர் ஓரையைக் கடக்கும் மாதங்களுக்கு 31 நாட்கள் எனவும், கதிரவனுக்கும் புவிக்கும் இடையில் தொலைவு குறையும் காலத்தில் மாதங்களுக்கு 30 நாட்கள் எனவும் கொள்ள வேண்டும்;

- சாதாரண ஆண்டுகக்கு 365 நாட்களும் லீப் ஆண்டிற்கு 366 நாட்களும் கணக்கில் கொள்ளப்பட வேண்டும்;
- இவற்றுடன் இந்திய தேசிய நாட்காட்டி கணிப்பிற்கு சத்தீஸ்கர் மாநிலத்தின் கரக்வான் (Kharagwan, Chhattisgarh- GPS: 23.11N, 82.30E) என்ற ஊர் அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. [4]

சொல்லப் போனால் இந்திய தேசிய நாட்காட்டியின் அடிப்படையும் உலகப் பொது கிரிகோரியன் நாட்காட்டியின் அடிப்படையில் அமைந்ததுதான். ஆனால் இந்திய மாதங்களின் 12 பெயர்களை அவ்வாறே வைத்துக் கொண்டு, இளவேனில் சமநாளான சித்திரை முதல் நாளை ஆண்டின் தொடக்கமாகத் தேர்வு செய்து கொண்டது எனலாம். எனவே இந்திய மாதத்தின் தொடக்கம் ஒரு கிரிகோரியன் மாதத்தின் மூன்றாம் வாரத்திற்குப் பிறகு (22 ஆம் நாளில்) தொடங்கும். இது மட்டுமே அடிப்படை வேறுபாடு. மற்றபடி மாதங்களுக்கு 30, 31 நாட்கள், லீப் ஆண்டுக்கு ஒரு நாள் அதிக நாள், ஆண்டுக்கு 365 அல்லது 366 நாட்கள் என எல்லாமே கிரிகோரியன் நாட்காட்டியைப் பின்பற்றித்தான் அமைந்துள்ளது.

ஒரு ஆண்டில் கதிரவன் சரியான கிழக்கில் உதிப்பது இருமுறை நிகழும். அந்த இரு நாட்களில் உலகம் முழுவதுமே நாளின் இரவு

பகல் நேரம் சரி சமமாக அமைந்த சமநாளாக (Equinox) இருக்கும்.
மகரக் கிடைக்கோட்டில் இருந்து வடதிசைச் செலவாகக் கதிரவன் நில நடுக் கோட்டிற்கு வரும் பொழுது ஒருமுறையும் (இளவேனில் சமநாள்/மார்ச்/spring or vernal equinox);
அவ்வாறே கடகக் கிடைக்கோட்டில் இருந்து தென்திசைச் செலவாக மீண்டும் நிலநடுக் கோட்டிற்கு வரும் பொழுது ஒருமுறையும் (குளிர்கால சமநாள்/செப்டெம்பர்/autumnal equinox ) என இது நிகழும்.
இந்த இரு நாட்களிலும் கதிரவன் நிலநடுக்கோட்டுப் பகுதியின் நண்பகலில் தலைக்கு நேர் மேலே உச்சியில் இருக்கும் நாட்களாக இருப்பதால், நண்பகலில் தரையில் நிழல் விழாத 'நிழலற்ற நாளா'கவும் அமையும்.
ஒரு இளவேனில் சமநாளில் தொடங்கி மறுமுறை இளவேனில் சமநாள் வரை ஓராண்டாகக் கணக்கிடுவது உலகின் பலபகுதிகளில் காணப்படும் பண்டைய வழக்கம்.

இன்றைய தமிழ் நாட்காட்டி சித்திரை முதல் நாள், வேனில் சமநாள் அன்று தொடங்காமல், வேனில் சம நாளுக்குப் பின்னர் 24 நாட்கள் கடந்து ஏப்ரல் 14 ஆம் நாளில் சித்திரை தொடங்குகிறது.
வடதிசை கதிர் திருப்ப நாளான (மகர சங்கராந்தி/ டிசம்பர் 22, winter solstice) தை முதல்

நாளும் இவ்வாறே சுமார் 24 நாட்கள் பின்தங்கியுள்ளது.
இவை சித்திரைப் புத்தாண்டு மற்றும் தைப்புத்தாண்டு எனவும் தமிழர்களால் கொண்டாடப்படும் நாட்கள். ஆனால் இவை இரண்டுமே தொடர்ந்து ஒவ்வொரு ஆண்டும் ஒரே நாட்களில் வருவதில்லை. தைமுதல் நாளில் கொண்டாடப்படும் தைப்பொங்கல் என்றால் அது ஜனவரி 14 ஆம் நாள் வரும் என்றே அனைவரும் அறிவோம். ஆனால் இந்த 2024 ஆம் ஆண்டு அது ஜனவரி 15 நாள் கொண்டாடப்படுகிறது.

தை முதல் நாள் விலகிக் கொண்டே செல்கிறது, சித்திரை முதல் நாள் விலகிக் கொண்டே செல்கிறது என கணக்குப்படி நம்மால் சொல்ல முடியும்.
சித்திரை மாதம் தொடங்குவது இளவேனில் சமநாளில் (இந்நாட்களில் கிரிகோரியன் நாட்காட்டியின் மார்ச் 21/22) என்பதைக் குறிப்பிடும் தொல்லியல் தகவல் ஒன்றுமுள்ளது. கி.பி. 998ஆம் ஆண்டைச் சேர்ந்த, தஞ்சை மாவட்டம் திருவலஞ்சுழி சேத்ரபால தேவர் கோயிற் கல்வெட்டுப் பதிவில், ஆட்டைவட்டம் எனப்படும் ஓர் ஆண்டின் கதிரவனின் நகர்வுகளின் சுழற்சி - நான்கு பிரிவுகளாக,
சித்திரை விஷு [vernal equinox]
தக்ஷிண அயனம் [summer solstice]
ஐப்பசி விஷு [autumn equinox]

உத்தர அயனம் [winter solstice] குறிப்பிடப்பட்டுள்ளது.
இது இயற்கையை ஒட்டியது, பருவ காலங்களை அடிப்படையாகக் கொண்டது என்பது இதன் மூலம் தெளிவாகிறது. [5]

இத்தகவல் சித்திரை விஷு என்றால் இளவேனில் சமநாளில் சித்திரை தொடங்குகிறது என்பதைத் தெளிவாகக் காட்டும் நிலை. ஆனால் இன்று சித்திரை மாதம் தொடங்குவது இளவேனில் சமநாளில் இருந்து மூன்று வாரங்களுக்கும் மேல் விலகிவிட்டதையும் நாம் அறிகிறோம். அது போல உத்தர அயனம் தொடங்கும் தை மாதம்/மகர சங்கராந்தி என்பது அந்த குறிப்பிட்ட நாளில் இருந்து மூன்று வாரங்களுக்கும் மேல் விலகிவிட்டதையும் நாம் அறிகிறோம்.
இந்த முறையையும் விட, முந்தைய ஆண்டுகளில் கிரிகோரியன் நாட்காட்டிப்படி எந்த நாட்களில் தை சித்திரை மாதங்களின் நாட்கள் தொடங்கின என்ற தரவுகள் கிடைத்தால் அது நாட்களைத் தொடர்ந்து கண்காணிக்க உதவியாக இருக்கும்.

இந்நாட்களில் இத்தகவலைப் பல வானவியல் மென்பொருட்கள் உதவியுடன் சேகரிக்க முடியும். அதையும் விட மிக எளிதாக இணையத்தில் தமிழ்ப் பஞ்சாங்கம் கிடைக்கும் தளங்களில் கடந்த காலம், நிகழ் காலம்,

வருங்காலம் ஆகியவற்றின் நாட்காட்டிகள் கிடைக்கின்றன [6]. குறிப்பாக 'டிரிக் பஞ்சாங்கம்' [7] தளத்தில் 1424 முதல் 2824 வரை (1400 ஆண்டுகளுக்கு) உள்ள நாட்காட்டியைப் பெற முடியும். இத்தளத்தில் இன்றும் புழக்கத்தில் உள்ள இந்தியப் பஞ்சாங்கங்கள் பலவும், தமிழ்ப் பஞ்சாங்கமும் உள்ளன (https://www.drikpanchang.com/tamil/tamil-month-panchangam.html). இந்தப் பஞ்சாங்கத்தின் உதவி கொண்டு 1424 ஆண்டு முதற்கொண்டு ஒவ்வொரு 50 ஆண்டுகளுக்கும் என இந்த ஆண்டு 2024 வரை தை முதல் நாள், சித்திரை முதல் நாள், ஆவணி முதல்நாள் வரும் கிரிகோரியன் ஆண்டின் அந்நாளுக்கு இணையான நாட்கள் சேகரிக்கப்பட்டு அட்டவணைப் படுத்தப்பட்டது (பார்க்க அட்டவணை – I).

இந்த நாட்காட்டிதான் தமிழகத்தில் பயன்பாட்டில் இருந்தது என்பதையும் நம்மால் உறுதி செய்து கொள்ள முடியும். பதினெட்டாம் நூற்றாண்டு காலத்திய பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பனியின் மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றிய ஆனந்தரங்கம் பிள்ளை (1709 - 1761) எழுதிய நாட்குறிப்பு தரும் தகவல்கள் மூலம் அன்றைய கிரிகோரியன் நாட்காட்டி நாட்களும், இன்றும் வழக்கில் உள்ள அதே இந்துசமய சக நாட்காட்டியின் நாட்களும் இசைந்து செல்வதை நம்மால் உறுதிப் படுத்திக் கொள்ள முடிகிறது. [8]

## அத்தியாயம் I

நள ஞு ஆவணி மூ 25 வ 6-9-1736 முதல் பிங்கள ஞு ஆனி 7 வ 17-6-1737 இறுதியாக—பக்கம் 7—16

துய்லோரான் சங்கத்தின் அங்கத்தினராக நியமனம்; துய்பெலியேவின் ஆட்சேபமும், ராஜினுமாவும்.— தங்கசாலை ஏற்படுத்திக்கொள்ள உத்தரவுபெறுவதற்குச் செய்த செலவு.— சங்கத்திற்கு நெசவு பாக்கள் கொடுப்பதாகச் சுங்குவார் சேஷாசலசெட்டி ஒப்பந்தம் — பழயசங்கத்தின் வியாபாரிகள் ஒப்பந்தம்.-ஆனந்தரங்கப்பிள்ளை சட்டகர் மாதவராயப்பிள்ளை



**25, Aavani**
Shukla Paksha, Pirathamai
1658 Shaka Samvata, Kaliyugam 4837

**06**
**September 1736**
Thursday

| அட்டவணை— I : 1424 முதல் 2024 வரை - கடந்த 600 ஆண்டுகளில் விலகிச் செல்லும் மாதங்களின் தொடக்கம் | | |
|---|---|---|
| தை தொடக்கம் | சித்திரை தொடக்கம் | ஆவணி தொடக்கம் |
| 1424 - ஜனவரி 7 | 1424 - ஏப்ரல் 6 | 1424 - ஆகஸ்ட் 9 |
| 1425 - ஜனவரி 6 | 1425 - ஏப்ரல் 6 | 1425 - ஆகஸ்ட் 9 |
| 1475 - ஜனவரி 7 | 1475 - ஏப்ரல் 7 | 1475 - ஆகஸ்ட் 10 |
| 1525 - ஜனவரி 8 | 1525 - ஏப்ரல் 8 | 1525 - ஆகஸ்ட் 11 |
| 1575 - ஜனவரி 9 | 1575 - ஏப்ரல் 8 | 1575 - ஆகஸ்ட் 11 |
| 1625 - ஜனவரி 9 | 1625 - ஏப்ரல் 8 | 1625 - ஆகஸ்ட் 11 |
| 1675 - ஜனவரி 9 | 1675 - ஏப்ரல் 9 | 1675 - ஆகஸ்ட் 12 |
| 1725 - ஜனவரி 10 | 1725 - ஏப்ரல் 10 | 1725 - ஆகஸ்ட் 13 |
| 1775 - ஜனவரி 11 | 1775 - ஏப்ரல் 11 | 1775 - ஆகஸ்ட் 14 |
| 1825 - ஜனவரி 12 | 1825 - ஏப்ரல் 12 | 1825 - ஆகஸ்ட் 15 |
| 1875 - ஜனவரி 13 | 1875 - ஏப்ரல் 12 | 1875 - ஆகஸ்ட் 15 |
| 1925 - ஜனவரி 13 | 1925 - ஏப்ரல் 13 | 1925 - ஆகஸ்ட் 16 |
| 1975 - ஜனவரி 14 | 1975 - ஏப்ரல் 14 | 1975 - ஆகஸ்ட் 17 |
| 2024 - ஜனவரி 15 | 2024 - ஏப்ரல் 14 | 2024 - ஆகஸ்ட் 17 |
| கடந்த 600 ஆண்டுகளில் விலகிச் சென்ற நாட்கள் | | |
| 8 | 8 | 8 |
| | | |
| 2824 ஆம் ஆண்டில் மாதங்களின் தொடக்கம் | | |
| தை தொடக்கம் | சித்திரை தொடக்கம் | ஆவணி தொடக்கம் |
| **2824 - ஜனவரி 26** | **2824 - ஏப்ரல் 25** | **2824 - ஆகஸ்ட் 28** |
| அதாவது 2824ஆம் ஆண்டில் பருவ நாட்களின் தொடக்கம் ஒரு மாதத்திற்கும் மேலாகத் தள்ளிப் போய்விடும்! அப்படியானால், பருவத்தே பயிர் செய் என்பதைப் பின்பற்றுபவர்களின் நிலை என்ன? | | |

பஞ்சாங்கம் தளத்தில் தரவுகள் அடிப்படையில் உருவாக்கப்பட்ட அட்டவணையின் மூலம் (அட்டவணை – I) 1424 ஆம் ஆண்டின் தை முதல் நாள் ஜனவரி 7ஆம் நாளில் (1424 -ஜனவரி 7) வந்திருப்பதை அறிய முடிகிறது. அடுத்த ஒவ்வொரு 50 ஆண்டுகளுக்கும் தை முதல் நாள் சற்றே தள்ளித் தள்ளிநகரத் தொடங்கி இந்த 2024 ஆம் ஆண்டு தை முதல் நாள் ஜனவரி 15 ஆம் நாள் (2024 -ஜனவரி 15) வந்திருக்கிறது.

ஆகவே தை முதல்நாளான தைப்பொங்கல் என்பது ஜனவரி 14ஆம் நாளில் வரும் என்ற நமது எண்ணமும் எதிர்பார்ப்பும் தவறு என்பது இதிலிருந்து தெரிகிறது. நூறு ஆண்டுகளுக்கும் குறைவான ஆயுளைக் கொண்ட மனிதர் எவருக்கும் இந்த தொடர்ந்த மாறுதலைத் தன் வாழ்நாளில் உணர வாய்ப்பு இருக்காது. அத்துடன் இப்பொழுது நமக்கு மற்றொரு துல்லியமான கிரிகோரியன் நாட்காட்டியுடன் ஒப்பிட்டு, பருவகாலத் தொடக்க நாட்கள் விலகிக் கொண்டே செல்வதை ஒப்பிட்டு அறியும் வாய்ப்பும் கிடைத்துள்ளது. வானியல் அடிப்படையில் தரவுகளை ஒப்பிட்டு நாட்காட்டியைத் தொடர்ந்து சீரமைக்கும் முறையைக் கைவிட்டு கணித முறையை மட்டும் பயன் கொள்ளும் முறையால் கடந்த காலத்தில் பருவகாலத்தைத் துல்லியமாகக் கணிக்காத பிழை ஏற்பட்டிருக்கிறது என்பது இதிலிருந்து விளங்கும்.

இவ்வாறே சித்திரை முதல் நாள் தரவுகளும் சேகரிக்கப்பட்டதில் 1424 -ஏப்ரல் 6 ஆம் நாளில் இருந்த சித்திரை முதல் நாள், இந்த 2024 -ஏப்ரல் 14 ஆம் நாளுக்கு நகர்ந்துவிட்டதைக் காண முடிகிறது. அது போல 1424 -ஆகஸ்ட் 9 ஆம் நாளில் இருந்த ஆவணி மாதத்தின் தொடக்கம் (ஆவணிதான் பழந்தமிழர் புத்தாண்டு) இந்த 2024 -ஆகஸ்ட் 17 ஆம் நாளுக்கு நகர்ந்திருக்கிறது. அதாவது கடந்த 600 ஆண்டுகளின் (1424-2024) அடிப்படையில் மட்டும் பருவ கால நாட்கள் நாட்காட்டியில் '8' நாட்கள் விலகிச் சென்று விட்டன. தை முதல் நாளும், சித்திரை முதல் நாளும் எவ்வாறு கால ஓட்டத்தில் மாறிப்போகின்றன என்பதைப் படங்கள் மூலமும் காட்டப்பட்டுள்ளது.



பஞ்சாங்கம் தளத்தில் 2824 ஆண்டுகள் வரை தரவுகள் கிடைப்பதால், இன்றிலிருந்து 800 ஆண்டுகளுக்குப் பின்னர், 2824 ஆண்டில் தை, சித்திரை, ஆவணி ஆகிய மாதங்களின் தொடக்கம் என்னவென்றும் பார்க்கலாம். ஜனவரி 26ஆம் நாள் - தைமாதத் தொடக்கம்; ஏப்ரல் 25ஆம் நாள்- சித்திரை மாதத் தொடக்கம்; ஆகஸ்ட் 28ஆம் நாள் - ஆவணி மாதத் தொடக்கம் எனத் தள்ளிப் போகிறது. அதாவது 2824ஆம் ஆண்டில் பருவ நாட்களின் தொடக்கம் ஒரு மாதத்திற்கும் மேலாகத் தள்ளிப் போய்விடும்!

நாட்காட்டியைப் பருவகாலத்திற்கு ஏற்ப சீரமைக்கும் முயற்சியை மேற்கொள்ளாவிட்டால் ஓர் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு தைப்பொங்கலை மக்கள் பிப்ரவரியில்தான் கொண்டாடிக் கொண்டிருப்பார்கள்.

ஆனால் ஆதிகாலத்தில் ஒரு நாட்காட்டி உருவாக்கப் பட்டதன் நோக்கம் விழா கொண்டாடுதற்காக அல்லவே; வேளாண் சமூகம் பருவத்தே பயிர் செய்யத்தானே உருவாக்கினார்கள். அத்துடன் அப்பருவ காலங்களின் சிறப்பு நாட்களும் விழாக்களும் அத்துடன் கொண்டாடப்பட்டன. பிழையாகக் கணிக்கப்பட்ட நாட்காட்டியால் வேளாண்மையும் பாதிக்கப்படும். பருவகால

விழாக்களும் வேறோர் காலத்தில் கொண்டாடப் பட்டு எல்லாமே பொருளற்ற வகையில் சடங்குகளாக முடிந்துவிடும். இத்தகைய ஒரு நிலை செய்வாய் கோளுக்கு விண்கலம் செலுத்தும் மக்களின் வானியல் அறிவுக்கும் திறமைக்கு இழுக்கானது அல்லவா?

தமிழ் நாட்டிற்கான சீரமைக்கப்பட்ட நாட்காட்டி:
நாட்கள் விலகுவதைக் கண்கூடாகத் தரவுகள் அடிப்படையில் பார்த்தபின்னர் சீரமைப்பின் தேவை விளங்கியிருக்கும்.

அறிவியல் அடிப்படையில் சீரமைக்க நாம் இந்திய தேசிய நாட்காட்டியைத்தான் ஏற்கவேண்டும் என்பது தேவையில்லை. வட இந்தியாவும், வெப்பமண்டலப் பகுதியில் அமைந்த தென் இந்தியாவும் இயற்கையால் வேறுபட்டவை என்று பார்த்தோம். எனவே, இந்திய தேசிய நாட்காட்டிக்கு மாற்றாகத் தமிழகத்தை அடிப்படையாகக் கொண்ட பொருத்தமான நாட்காட்டி ஒன்றை நாம் இந்திய தேசிய நாட்காட்டி விதிகளின் அடிப்படையிலேயே உருவாக்கலாம். இந்திய தேசிய நாட்காட்டி கணிப்பிற்கு சத்தீஸ்கர் மாநிலத்தின் கரக்வான் (Kharagwan, Chhattisgarh-GPS: 23.11N, 82.30E) என்ற ஊர் அடிப்படையாகக் கொள்ளப்பட்டது போல, தமிழகத்திற்கும் தமிழகத்தில் உள்ள இடம் ஒன்றை நாட்காட்டி கணிப்பிற்கான இடமாகக் கொள்ளலாம்.

தமிழகத்தின் தொன்மையான மதுரை (Madurai-GPS: 9.93241, 78.13914) நகரின் உலகத் தமிழ்ச் சங்கத்திற்கு முன் நிற்கும் திருவள்ளுவர் சிலையை நாட்காட்டி கணிப்பிற்கான இடமாகக் கொள்ளலாம். வானியல் படி மதுரை நகரில் ஏப்ரல் 14ஆம் நாள் ஒரு நிழல் விழாத நாள். அந்த நாளை நாம் தமிழ் நாட்காட்டிக் கணக்கிற்கு அடிப்படையாக எடுத்துக் கொள்ளலாம்.



நிலநடுக்கோட்டில் இளவேனில் சமநாளில் கதிரவன் அங்குத் தலைக்கு நேர் உச்சியில் இருப்பதால் நிழல் விழாது. அங்கிருந்து கதிரவன் வடதிசைச் செலவாக மதுரைக்கு ஏப்ரல் 14ஆம் நாள் அன்று நகர்வதால், அன்று அப்பகுதியின் தலை உச்சிக்கு நேர் மேல் இருப்பதால் வரும் ஏப்ரல் 14, 1024 அன்று மதுரையில் நண்பகலில் நிழல் விழாது. [9, 10] நண்பகலில் நிழல் விழாத நாள் ஒரு 'சப் சோலார் பாயிண்ட்' / 'மாற்று கதிர்ப்புள்ளி' (The subsolar point) நாள் ஆகும். இதைக் கணக்கிட கணிதச் சமன்பாடு எல்லாம் உண்டு (அது கட்டுரையின் முடிவில் கொடுக்கப்பட்டுள்ளது) என்றாலும், தலை உச்சிக்கு நேர் மேலே கதிரவன் உள்ள நாள், அதனால் நண்பகலில் நிழல் விழாத நாள் என்பது எவருக்கும் புரியக் கூடிய ஒரு எளிமையான விளக்கமாக அமையும். இந்த நாள் அமையும் நிலைக்குக் காரணம்; கதிரவனின் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச்செல்லும் வடதிசைச் செலவில் மதுரைக்குச் செங்குத்தாக 90 பாகைச்சாய்வில் வருவது ஏப்ரல்14 அல்லது 15தான், இந்த நாள் லீப் அல்லது சாதாரண ஆண்டு அடிப்படையில் வேறுபடும். இந்த அடிப்படையில் அமையும் நாளை சித்திரைப் புத்தாண்டு தொடக்கம் என எடுத்துக் கொள்ளலாம்.

எனவே தமிழகத்திற்கே வானியல் அடிப்படையில் தனிச் சிறப்பாக அமையும் இந்த ஏப்ரல் 14, 2024 நாளை தொடக்கப்

புள்ளியாகக் கொண்டு இந்திய தேசிய நாட்காட்டி கொண்ட விதிகளையும் கடைப்பிடித்து இனி நாம் தமிழ் நாட்காட்டியைச் சீரமைக்கலாம்.




ஆண்டின் கணிப்பு வானியல் அடிப்படையில் அறிவியல் முறையில்; பருவ ஆண்டாக; நாள், மாதம், ஆண்டு, பருவங்கள் ஆகியன சரியாக வரையறுக்கப்பட்டதாக; நள்ளிரவில் நாள் தொடக்கத்துடன்; நிழல் விழாத வானியல் நிகழ்வு நாள் சித்திரை முதல் நாள் தொடக்கமாக; ஒரு பருவ காலத்திற்கு 2 மாதங்களாக; பருவ ஆண்டின் கால அளவு 365.2422 நாட்களாக; மாதத்தின் நாட்கள் முழு நாட்களாக; மாதங்களின் நாட்கள் 30 அல்லது 31 நாட்களாகக் கொண்டனவாக; சாதாரண ஆண்டுக்கு 365 நாட்களும் லீப் ஆண்டுக்கு 366 நாட்களும் கணக்கில் கொண்டதாக, நாட்காட்டி

கணிப்பிற்கு மதுரை நகரை அடிப்படையாகக் கொண்டதாக அமைக்கலாம். இவ்வாறாக மாதங்களின் நாட்களை 30 அல்லது 31 என்று பகிர்ந்து, ஒரு தமிழ் மாதம் தொடங்குவது பெரும்பாலும் கிரிகோரியன் நாட்காட்டியிலும் உள்ளதுதான். மாதத்தின் நாள் தொடங்குவதை கிரிகோரியன் மாதம் தொடங்கி இரண்டு வாரம் கழித்து எனக் கொண்டால், அதாவது கிரிகோரியன் மாதத்தின் 14 அல்லது 15 நாளாக அமைக்கலாம். அவ்வாறு அமைத்தால் ஜனவரி 14 இல் தைப்புத்தாண்டு தொடங்குவதாகவும் அமைக்கலாம் (பார்க்க அட்டவணை – II).

| அட்டவணை—II : இந்திய தேசிய நாட்காட்டி அடிப்படையில் சீர் செய்யப்பட்ட புதிய தமிழ் ஆண்டு கணக்கீடு | |
|---|---|
| மாதம் தொடங்கும் கிரிகேரியன் மாதத்தின் நாள் | தொடங்கும் மாதமும் (நாட்களின் எண்ணிக்கை) |
| 14 ஜனவரி | தை (30 நாட்கள்) |
| 13 பிப்ரவரி | மாசி (30 / 31 லீப் நாட்கள்) |
| 15 மார்ச் | பங்குனி (30 நாட்கள்) |
| 14 ஏப்ரல் | சித்திரை (31 நாட்கள்) |
| 15 மே | வைகாசி (30 நாட்கள்) |
| 14 ஜூன் | ஆனி (31 நாட்கள்) |
| 15 ஜூலை | ஆடி (31 நாட்கள்) |
| 15 ஆகஸ்ட் | ஆவணி (31 நாட்கள்) |
| 15 செப்டம்பர் | புரட்டாசி (30 நாட்கள்) |
| 15 அக்டோபர் | ஐப்பசி (31 நாட்கள்) |
| 15 நவம்பர் | கார்த்திகை (30 நாட்கள்) |
| 15 டிசம்பர் | மார்கழி (30 நாட்கள்) |

இந்திய தேசிய நாட்காட்டி போல சீரமைக்கப் பட்ட தமிழர் நாட்காட்டியும் கிரிகோரியன் அடிப்படையிலேயே அமையும் என்பதால் தனிக் கணக்கீடுகள் எதுவும் தேவையில்லை. கதிர்வழி நாட்காட்டி மட்டுமே சீர் செய்யப் பட்டுள்ளது. மதிவழி மறைமதி, வளர்பிறை, நிறைமதி, தேய்பிறை நாட்கள் எதுவும் மாறாது. நாள் விண்மீன்களும் மாறாது. நாட்டின் அரசு விடுமுறைகளான விழா நாட்கள், இஸ்லாமிய, கிறித்துவ, சமண, பௌத்த, சீக்கிய விழா

## நிலையான தமிழ் நாட்காட்டி

| January-14 | February-13 | March-15 | April-14 | May-15 | June-14 | July-15 | August-15 | September-15 | October-15 | November-15 | December-15 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தை | மாசி | பங்குனி | சித்திரை | வைகாசி | ஆனி | ஆடி | ஆவணி | புரட்டாசி | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி |
| 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 |
| 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 |
| 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 | 4 |
| 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 | 5 |
| 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 | 6 |
| 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 | 7 |
| 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 |
| 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 |
| 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 |
| 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 | 11 |
| 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 | 12 |
| 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 |
| 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 | 14 |
| 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 | 15 |
| 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 | 16 |
| 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 | 17 |
| 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 | 18 |
| 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 | 19 |
| 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 | 20 |
| 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 | 21 |
| 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 | 22 |
| 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 | 23 |
| 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 | 24 |
| 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 | 25 |
| 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 | 26 |
| 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 | 27 |
| 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 | 28 |
| 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 | 29 |
| 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 | 30 |
|  | மிகை(லீப்)நாள்-31 |  | 31 |  | 31 | 31 | 31 |  | 31 |  |  |

நாட்களை நாட்காட்டியில் இணைத்துக் கொள்வது போல, திதிகள் அடிப்படையிலும் நட்சத்திர அடிப்படையிலும் கொண்டாடப்படும் இந்துப் பண்டிகை நாட்களையும் தமிழர் நாட்காட்டியில் இணைக்கலாம். இந்த நாட்காட்டியில் மாதங்களின் தொடக்க நாள் என்றென்றும் மாறாது அமையும்.

இந்த அடிப்படையில் நான் உருவாக்கிய நாட்காட்டியின் விரிதாள்கோப்பு (spreadsheet file) இங்கு https://docs.google.com/spreadsheets/d/1cmq89oId2-ppANRVR3c0LHKcJqwGGW63/edit?usp=sharing&ouid=111146017168781937091&rtpof=true&sd=true இணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.[11] இது என்றும் மாறாத நிலையான தமிழர் நாட்காட்டி (A perpetual calendar). லீப் ஆண்டின் அதிகநாள் அந்த ஆண்டின் மாசி மாத இறுதியில் இருக்கும். இந்த நாட்காட்டி தொடங்கிய நாளில் இருந்து என்றும் மாறாமலே கிரிகோரியன் நாட்காட்டியுடன் இசைந்து செல்லும்.

ஆடியிலே வெத வெதைச்சோம் தங்கமே தங்கம்
ஐப்பசியில் களை எடுத்தோம் தங்கமே தங்கம்
கார்த்திகையில் கதிராச்சு தங்கமே தங்கம்
கழனி யெல்லாம் பொன்னாச்சு தங்கமே தங்கம்

தை பொறந்தா வழி பொறக்கும் தங்கமே தங்கம்
தங்கச் சம்பா நெல் விளையும் தங்கமே தங்கம்
– அ. மருதகாசி பாடல் (தை பிறந்தால் வழி பிறக்கும்-1958)

என்று பாடல் கூறும் வகையில் வேளாண்மை இத் தமிழ் மாதங்களின் அடிப்படையில் அமையும் பொழுது; ஆடிப்பட்டம் (ஜூன் - ஆகஸ்ட்), புரட்டாசிப் பட்டம் (செப்டெம்பர் - நவம்பர்), மார்கழி - தை பட்டம், சித்திரைப் பட்டம் என்று பருவம் பார்த்துப் பயிர் செய்பவர்களுக்கு உதவும் வகையில் நாட்காட்டி நிலை நிறுத்தப்படுவது அவசியம்.

நண்பகலில் நிழல் விழாத நாள் / மாற்று கதிர்ப்புள்ளி கணக்கீடு (விக்கிப்பீடியா)

## Coordinates of the subsolar point [ edit ]

The subsolar point moves constantly on the surface of the Earth, but for any given time, its coordinates, or latitude and longitude, can be calculated as follows:[2]

$$\phi_s = \delta,$$

$$\lambda_s = -15(T_{\mathrm{GMT}} - 12 + E_{\mathrm{min}}/60).$$

where

- $\phi_s$ is the latitude of the subsolar point in degrees,
- $\lambda_s$ is the longitude of the subsolar point in degrees,
- $\delta$ is the declination of the Sun in degrees,
- $T_{\mathrm{GMT}}$ is the Greenwich Mean Time or UTC, in decimal hours since 00:00:00 UTC on the relevant date
- $E_{\mathrm{min}}$ is the equation of time in minutes.

அடிக்குறிப்புகள்:

1. Calendar Reform
https://en.wikipedia.org/wiki/Calendar_reform

2. It's Time to Change the Calendar, Once and For All. Steve Hanke. Forbes, Dec 20, 2018.
https://www.forbes.com/sites/stevehanke/2018/12/20/its-time-to-change-the-calendar-once-and-for-all/?sh=499aca5f6cf6

3. Journal Articles on Calendar Reform
https://www.jstor.org/action/doBasicSearch?Query=%22Calendar+reform%22&acc=on&wc=on

4. Report of the calendar reform committee
https://archive.org/details/calendar_reform_comittee_report

5. சித்திரையில்தான் புத்தாண்டு, தொல்லியல் ஆராய்ச்சியாளர். எஸ். ராமச்சந்திரன், தினமண, ஜனவரி 24, 2008.
http://www.sishri.org/puthandu.html

6. Tamil Panchangam based on Thiru Ganita
https://www.drikpanchang.com/tamil/tamil-month-panchangam.html

7. Hindu Panchang
https://www.drikpanchang.com/panchang/hindu-panchangs.html

8. ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு
https://www.tamildigitallibrary.in/tva-search?tag=ஆனந்தரங்கப்+பிள்ளை+நாட்குறிப்பு

9. Zero Shadow Day
https://astron-soc.in/outreach/activities/zero-shadow-day/

10. Zero Shadow Days [For India]
https://alokm.com/zsd.html

11. சீரமைக்கப்பட்ட நிலையான தமிழ்நாட்காட்டி:
https://docs.google.com/spreadsheets/d/1cmq89oId2-ppANRVR3c0LHKcJqwGGW63/edit?usp=sharing&ouid=111460171687819370 91&rtpof=true&sd=true

கட்டுரைக்கு உதவிய நூல்களும் தளங்களும்:

Calendar Calculations
https://www.grc.nasa.gov/www/k-12/Numbers/Math/Mathematical_Thinking/calendar_calculations.htm

Calendars from around the world, Alan Longstaff, National Maritime Museum, 2005
https://www.rmg.co.uk/sites/default/files/Calendars-from-around-the-world.pdf

Echoes of the Ancient Skies: The Astronomy of Lost Civilizations (Dover Books on Astronomy) Paperback – August 5, 2003

THE CALENDARS OF INDIA: Incredible India's. Incredible Pañcāṅgam. Nakshatra Mandala & Zodiac. 6. April 2022. Vol. 3, No. 2
https://vigyanprasar.gov.in/wp-content/uploads/vp-vipnet-curiosity-magazine-april22.pdf

Lend me your years: How the Indian National Calendar came into being, Rachel Lopez, Hindustan Times, Jan 02, 2021
https://www.hindustantimes.com/columns/lend-me-your-years-how-the-indian-national-calendar-came-into-being/story-8pkNwDgw00PfpsaYqRLeeP.html

தமிழ் சர்வதேச திருவள்ளுவர் நாட்காட்டி, வே. அறிவுமணி, V.Arivumani, Int. Res. J. Tamil, 91-99, Vol. 2, Iss. 2, Year 2020

தமிழர் காலக்கணிப்பு முறையும் தற்காலத் தமிழ் நாட்காட்டியில் செய்ய வேண்டிய திருத்தங்களும். கா. பாலகிருஷ்ணன் (பாலா பாரதி), மலேசிய 11-ஆம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் வெளியிட்ட ஆய்வறிக்கை, 21 - 23 ஜூலை 2023

# 11. பேரின்ப நினைப்பு நுட்ப ஒகம் / ஆனந்த பாவனை தந்திர யோகம்

— சொல்லாக்கியன், கனடா.

முன்னுரை:
மனிதன் தன் மனவளர்ச்சியால், அறிவுக் கூர்மையால், உள்நோக்கால், அமைதியும் ஆனந்தமுமே தனிமனித வாழ்விற்கும், உலக மக்களின் தொடர்ந்த இருப்புக்கும் இலக்குகளாக இருப்பதாக அறிகிறான். அமைதி ஆனந்தத்தின் விளைவாக அன்பும், கருணையும், அழகும், அறிவும் மிளிரும் என்றும் உணர்கிறான். புத்தர், ஏசு, முகமது, பதஞ்சலி, திருமூலர், சித்தர்கள் எனப் பலரும், யோகத்தாலும், தியானத்தாலும், அமைதியையும் ஆனந்தத்தையும் அடையும் வழிகளைக் காட்டியுள்ளனர்.

எவராயினும், அவரவர் காலத்தில் திகழ்ந்த அறிவின் வளர்ச்சியைப் பொறுத்தே, அனுபவமும் படிப்பினைகளும் இருக்கும். எனவே, இன்று நிலவும் உடல், மனம், அறிவு, உள்நோக்கல், அனுபவம், ஆகியவற்றின் தன்மையைப் பொறுத்து, அமைதியையும்

ஆனந்தத்தையும் அடையும் வழியைக் காண்போம். நாளை, எதிர்காலத் தலைமுறைகள், தாம் பெறும் புதிய, மேலும் ஆழமான புரிதல்களைக் கொண்டு, அனுபவம் கண்டு, அமைதியையும் ஆனந்தத்தையும் அடையும் புதிய வழிகளைத் தோற்றுவிப்பார்கள்.




வரையறைகள் :

1. இன்பம் = இன் + ப் + அம். இனிமை + கொள்ளும் + தன்மை அல்லது இன்மையை + கொண்டிருக்கும் + தன்மை. மகிழ்ச்சி. புலன்கள் அறிய மாட்டா வெறுமை. உணரக்கூடிய வெளி.

இன்பம் = வெளியை உணர்வதால் ஏற்படும் அகமகிழ்ச்சி.

2. பேரின்பம் = பெரிய இன்பம். பெரு வெளியை உணர்வதால் ஏற்படும் அகமகிழ்ச்சி.
3. நினைப்பு = நினைவில் நிலைத்தல்.
4. நுட்பம் = நுண் + ப் + அம். நுண்மையாய்க் கொள்ளும் தன்மை.
5. ஓகம் = ஓ + க் + அம். அகமும் புறமும் விரிந்த மெய்மைத் தன்மை.
6. ஆனந்தம் = ஆன் + அந்தம். முடிவானத் தன்மை.
   ஆனந்தம் = ஆன் + அம் + தம். ஆதல் + உயிர்த்தன்மை + தேகத்தன்மை. தேகத்தன்மை உயிர்த்தன்மை ஆதல்.
7. பாவனை = ப் + ஆவ் + அனை. கொண்டதாய் + ஆதல் + அனைத்தும். முழுவதும் கொண்டதாய் ஆதல்.
8. தந்திரம் = தம் + திரம். தேகத்தன்மை + உறுதி. தேகத்தன்மையின் உறுதி.
9. யோகம் = ஓகம், புணர்ச்சியில் யோகமெனத் திரிந்தது. அல்லது யோகம் = இ + ஓகம். இருத்தல் + அகமும் புறமும் விரிந்த மெய்மைத்தன்மை. அகமும் புறமும் விரிந்த மெய்மைத்தன்மையுடன் இருத்தல்.

உடல் இன்பங்கள்:

(i) உடம்பு இன்பம் கொள்கிறது. உடலுக்கு, பகலின் வெம்மையும் இன்பம். இரவின்

குளிர்ச்சியும் இன்பம். உடலுக்குத் தேவையான அளவில், தகுந்த வெம்மையும், குளிர்ச்சியும் இன்பம். அளவோ, தரமோ தவறினால், வெம்மையும், குளிர்ச்சியும் துன்பமாகிவிடும்.

தாயின் கையெடுப்பும், மடிக்கிடப்பும், நெஞ்சணைப்பும், இதழளிப்பும், கைகால் நீவலும், முடி கோதலும் குழவிக்கு இன்பம். தாயுக்கும் பேரின்பம்.

மழலையின் மெய்தீண்டல் தந்தைக்கும் இன்பம், தாத்தன், பாட்டிக்கும் இன்பம். அன்புடையோர் எவர்க்கும் இன்பம்.

சிறுவர்கள் கைகோர்த்து நடப்பதிலும் இன்பம். இளைஞர்கள் தோளோடு தோள் சேர்வதும் இன்பம். இளமையில், கணவனும் மனைவியும் இணையல் ஆடலும் இன்பம். முதுமையில், தோள் கோலாவதும் இன்பம்.

மேனியின்பம் சிலிர்க்கின்றது, கூச்செறிகின்றது, புல்லரிக்கின்றது, புளகாங்கிதம் அடைகின்றது, மெய்மறக்கின்றது, ஏகாந்தமாகின்றது.

இதழ் விரிகின்றது. முகம் மலர்கின்றது. மூச்சு மணக்கின்றது. கண்கள் ஒளியைப் பனிக்கின்றது. காதில், உயிரின் ஒலி இசைக்கின்றது. மனம் நிலைக்கின்றது. அறிவு அமைதியாகின்றது. உடலின் ஆழத்தில்,

உயிரின் நுண் துடிப்பில், துடிப்பின் இடைவெளியில், பரம் வசமாகின்றது.

(ii) தாயின் அங்கப்பால், குழவிக்கு இன்பம். காக்கைக் கடி, சிறு நட்புக்கு இன்பம். பனிக்கூழ் ஊட்டல் காதலர் இன்பம். தாம்பூலம் தரித்த இதழுண்ணல் தம்பதியர்க்கு இன்பம். பிணியில், அமுதூட்டல் முதுமைக்கு இன்பம்.

அறுசுவை உணவும் நாவிற்கு இன்பம். உணவின் அறுசுவையும் உடலுக்கு இன்பம். நீரும் சாறும், மோரும் கூழும், தேனும் பாலும் எல்லாம் இன்பம். காயும் கனியும், சோறும் பருப்பும், கறியும் கூட்டும் எல்லாம் இன்பம். அக்காரவடிசில் இன்பம். ஊன்துவையடிசில் இன்பம்.

சுவைகள் எல்லாம், இதழுக்கும், நாவிற்கும், பல்லிற்கும், அண்ணத்திற்கும், உள் கதுப்பிற்கும், ஏங்கிய மனதிற்கும், பசி தாங்கிய வயிற்றுக்கும் இன்பம். உணவின் மணத்தால், நாசிக்கு இன்பம். வண்ண உணவால், கண்ணிற்கு இன்பம். நிறைவு, காதில் இசைக்கும் இன்பம். உண்ட மயக்கத்தால் உறங்கும் இன்பம்.

(iii) தாயின் வாசம் சேயிற்கு இன்பம். குழந்தையின் மணம் பெற்றோர்க்கு இன்பம். நண்பர் நாற்றம் கேளிக்கை இன்பம். அன்பரின் வாசனை, இன்பம் தரும் அகிலும் சந்தனமும். முதுமையின் வாடை பழகிய இன்பம்.

பூவும், மலரும், காயும், பழமும், தென்றலும், நெற்பயிர் பசுமையும், கரும்பாலைப் புகையும், அறுவடை நெல்லும், புதுமழை மண்ணும் வாசத்தால் வீசும் நாசி இன்பம்.

(iv) தூக்கத்திற்கு இருள் இன்பம். விழிப்பிற்கு ஒளி இன்பம். அன்னையின் முகமே குழந்தைக்குப் பகலாம். அமுதூட்டக் காட்டும் நிலவே பந்தாம்.
புழுவும், நத்தையும், எறும்பும், எலியும், நாயும், பூனையும், ஆடும் மாடும், கோழியும், காக்கையும், குருவியும், குயிலும், புறாவும், பருந்தும் காண்பது இன்பம்.

இளமை நட்பைக் காணும், இன்பம். அன்பு ஒளி பாயும் நோக்கே காதலர்க்கு இன்பம். மனக்கடலின் ஆழத்தில் எழும் புன்னகை முத்தைக் கொள்வதும் சுகம். கண்டு கண்டும் சலிக்காத இல்லாளின் விழியின்பம். முதுமையில், வெறித்த பார்வை பேசும் பழமை இன்பம். அழகின் சிரிப்பு காண்பது இன்பம்.

(v) ஊற்றும் அருவியும், ஊட்டும் குரலும் குழந்தைக்கு அமிழ்தாம். மழலை அழுகை ஒலியும், யாழினும் குழலினும் இனிதாம். நட்பினர் உள்ளக் கிடக்கை சொல்லி உணர்த்தல் இன்பம். அன்பினர் பொருள் அறியாது தெரியாது கேட்பதே இன்பம். கணவனும் மனைவியும் குறிப்பால் பொருளை உரைத்தல் இன்பம். ஆசிரியரின் அன்பான கேள்வியும் இன்பம். மாணவனின் துணிவான பதிலும் இன்பம்.

நாற்றுப் பாட்டும், ஏற்றப் பாட்டும், பறவைகள் கூச்சலும், வண்டுகள் இரைச்சலும் இன்பம். இயற்கையிலும், குடும்பத்திலும், சமூகத்திலும், உலகத்திலும் எத்தனைக்கோடி சொல்லின்பம், இசையின்பம்?

(vi) மெய் உற்றறிதலும், நா சுவை அறிதலும், நாசி மண நுகர்ச்சியும், கண் காட்சியும், செவி கேள்வியும், நடையும், ஓட்டமும், ஆட்டமும் பாட்டமும், உழைப்பும், ஒத்துழைப்பும், அன்பும், பாசமும், நட்பும், நேசமும், அரவணைப்பும், ஆதரவும், எல்லா உணர்ச்சியும், உணர்வும், மனதிற்கும் இன்பம்.

(vii) தன்னை அறிதல் இன்பம். தனதை அறிதலும் இன்பம். பிறரை அறிதலும், உலகை அறிதலும் இன்பம். அறிவுமரத்தின் கனியாம், நன்மை, தீமை பகுத்தறிதல் இன்பம். கதிரை அறிவதும் நிலவை தெரிவதும் இன்பம். மண்ணை அறிவதும் விண்ணை அறிவதும் இன்பம். உடலை அறிவதும், உயிரை அறிவதும் இன்பம். அணுவை அறிவதும் அண்டம் அறிவதும் இன்பம். அளவை அறிதல் இன்பம், அறிதல் பற்றி அறிதல் அதனினும் இன்பம். வரலாற்று நிகழ்வுகளும் இன்பம். எதிர்கால கனவுகளும் கற்பனைகளும் இன்பம். உணரும், உணர்த்தும், இயங்கும் இயக்கும், அறியும் அறிவிக்கும், இன்புறும், இன்பூட்டும் மூலத்தை அறிவது அனைத்தினும் இன்பம்.

மூலமுதல் :

மூலம் என்பது யாதாம்? மூலம் என்பது முதலாம். முதலில் எது தோன்றியதோ, அது முதலாம். எது பிற எல்லாம் ஆகியதோ அது முதலாம். எனவே, பிற எல்லாவற்றின் இன்பமும், முதலின் இன்பமாம். முதலின் இன்பமே பிற எல்லாவற்றின் இன்பமுமாம். முதலும் இன்பம். அகமும் இன்பம். புறமும் இன்பம். எல்லாமும் இன்பம். ஆதியும் இன்பம். அந்தமும் இன்பம். அனந்தமும் இன்பம். அனைத்தும் இன்பமே! அனைத்தின் இன்பமே பேரின்பம். மூலத்தின் உணர்தல் இன்பமே பேரின்பம். பேரின்பம் = பெரிய இன்பம். பேரின்பம் நிறைவான இன்பம். பேரின்பம் நிலையான இன்பம். பேரின்பமே ஆனந்தம், பரமானந்தம். பேரின்பமே மனித இலக்கு. உடல் / புலன் இன்பம், மன இன்பம், அறிவு இன்பம், மூலமுதல் பேரின்பம், பரமானந்தம் என்பதே எல்லை. அதைக் கடத்தலும் இல்லை. கடந்து இருத்தலும் இல்லை.

மூலமுதல் பேரின்பமே அறிவைத் தெளிவாக்கும்; மனதை நிறைவாக்கும்; உடலை வலுவாக்கும். வலுவான உடலும், நிறைவான மனமும், தெளிவான அறிவும், மூலமுதலுக்கு எளிதாகும். பேரின்பம் வலிதாகும். வாழ்வும் இருப்பும் இனிதாகும்.

மூலமுதலின் பேரின்பத்தால், அறிவும், மனமும், உடலும், முகமும் மலரும். அழகு மிளிரும்.

ஞானம் ஒளிரும். அமைதி நிலவும். ஆனந்தம் திகழும்.

மூலமுதல்தான் என்ன? அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது. அண்டம், பகிரண்டம், பேரண்டம் என எதற்கும் முதன்மையாய் இருப்பது, வெளிமை. வெளிமை வெற்றிடமல்ல. வெளிமை விண்மை. விண்மை, நுண்மையான பொருண்மை. புலன்கள் அறியமாட்டா பொருண்மை. மெய்மை உணரலாகும் மெய்மை. விண்மையின் நுண்மைப் பொருண்மையே அணுக்களாகின்றது. அணுக்கள் மூலக்கூறுகளாகின்றன. மூலக்கூறுகள் ஐம்பூதங்களுமாகின்றன. ஐம்பூதங்கள் உயிர்களாகின்றன. உயிர்கள் பரிணாமமாகி மனிதர்கள் ஆகின்றன.

மனிதனின் நினைவு மனமாகின்றது. மனம் தன்னியக்கம் பெறுகின்றது. அகக்காட்சியும் புறக்காட்சியும் ஒன்றுபடுகின்றன. அகக்காட்சியும் புறக்காட்சியும் முரண்படவும் செய்கின்றன. உள்நோக்கு சாத்தியமாகின்றது. அகத்திற்கும் புறத்திற்குமான முரண்பாட்டைத் தீர்க்க சிந்தனை எழுகின்றது. புறப்பார்வை கூர்மையாகின்றது. நினைவும் நுட்பமாகின்றது. சிந்தனை வளமாகின்றது. மொழியால், பலரது சிந்தனைகளும் சமூகத்தில் குவிகின்றது. கல்வியால், சிந்தனை தொடர்ச்சியும் வளர்ச்சியும் அடைகின்றது. கலைகளும், அறிவியல்களும் பெருகுகின்றன.

மனிதன் அகநோக்கால், தன் மனம், அறிவு, உயிர் பற்றி அறிகிறான். புறநோக்கால், அணு முதல் அண்டம் வரை அறிகிறான். புறநோக்கில், தற்சார்பின்மையால், கருத்தில் முரண்பாடுகள் மிகையில்லை. ஆனால், அகநோக்கில், தான்மைப்பண்பால், முரண்பாடுகள் மிகுதி. ஆயினும், அளவையியலே உண்மை அறிவிக்கும் கருவி. சில உண்மைகள் அறிதல் மட்டும் போதாது, உணர்தல் வேண்டும். உயிரை உணர்தல் வேண்டும்.

எது உயிர்?

உயிர் என்பது எது? எங்குள்ளது? மூச்சுதான் உயிரா? இதயத்துடிப்புதான் உயிரா? மூளையின் இயக்கந்தான் உயிரா? நுரையீரல், இதயம், மூளை, பிற உறுப்புகள் யாவும் இயங்குவது மத்திய நரம்பு மண்டலத்தால்தான். எனவே, நரம்பு மண்டலத்தை உயிர் எனலாமா? அந்த உயிர்க்கொடியில், உயிர்மரத்தில் பூத்ததுதான், இந்த உடல், புலன்கள், மனம், அறிவு எனலாமா?

மெய்யுணர்தல் :

இந்த உயிர்க்கொடி அல்லது உயிர்மரம் தோன்றியது எப்படி? தாயின் கருமுட்டை எனும் நிலத்துள், தந்தையின் விந்து எனும் விதை விழுந்து முளைப்பதுதான், இந்த உயிர்க்கொடி அல்லது உயிர்மரம் எனலாமா? ஆம், கருமுட்டை – விந்து பிணைவில் முளைக்கும் முதல் நரம்பு, தண்டுவடந்தான். அதன் கிளைகளை ஒட்டிதான்,

உடலின் எல்லா உறுப்புகளும் தோன்றுகின்றன. உடல் தோன்றவும் இயங்கவும் முதன்மையான காரணம், தண்டுவடம்தான். தண்டுவடம் விரிந்துப் பரவி நரம்புமண்டலமாகின்றது. மூலாதாரமும், மூளையும், தண்டுவடத்தின் கீழ், மேல் இருமுனைகள். மொத்த நரம்புமண்டலமே உயிரின் இயக்கமாகின்றது. நரம்பு மண்டலமே மெய். அதை உணர்தலே மெய்யுணர்தல்.
நரம்புமண்டலந்தான் மனிதனின் மூலமுதல். நரம்புமண்டலமே, உயிரின் தன்மையையும், உடலின் தன்மையையும் தீர்மானிக்கின்றது. நரம்பு மண்டலமே புலன்களின் பண்புகளையும், விளைவாய் மனதின் தன்மைகளையும், அறிவின் குணங்களையும் தீர்மானிக்கின்றது. எனவே, தனிமனிதனின் மொத்த இருப்பையுமே தீர்மானிப்பது நரம்புமண்டலந்தான். நரம்பு மண்டலம் நலம் மிகுந்தால், மனிதனின் உடலும், மனமும், அறிவும் வாழ்வும் நலம் பெறும். நரம்பு மண்டலம் நலம் குன்றினால், மனிதனின் உடலும், மனமும், அறிவும் வாழ்வும் நலிவுறும்.

தாய் தந்தையரின் இணைவால் ஏற்பட்டதுதானே, நரம்புமண்டலம் எனும் உயிர்மண்டலம், அதை நலமிக்கதாய், வளமிக்கதாய் ஆக்க இயலுமா? தாயின் 23 மரபணுக்களும், தந்தையின் 23 மரபணுக்களும் தம் போக்கில் பின்னிக் கொள்கின்றன. வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாய் பின்னிக் கொள்கின்றன. அதனால்தான், ஒரு இணை பெற்றோர்களுக்குப் பிறந்த பல

குழந்தைகள் ஒன்று போல் இருப்பது இல்லை. இரட்டையர்களிலும் வேறுபாடுகள் உண்டு. தாய் தந்தையரின் மூலமாக, அவர்கள் வாழும் உலகம், சமுதாயம், குடும்பம், மனநிலைகள், குழந்தைகளுக்கும் கடத்தப்படலாம். மேலும், நீண்ட நெடிய மனித சமுதாயத்தின் வரலாறும், பண்புகளும், புதிய சந்ததிகளுக்குக் கடத்தப்படுகின்றன.

ஊழ் என்பது என்ன?

குழந்தையின் ஊழ் (மிக உள்ளே ஆழ்ந்திருப்பது – மரபணுக்களாக உட்பதியப்பட்டது) அக்குழந்தையின் ஊழ் அல்ல. அக்குழந்தையின் பெற்றோர், மூதாதையர் மற்றும் அவர்களுக்கு முன்பிருந்த மனிதகுலத்தினுடையது. மனித இனமே பல உயிர்களின் பரிணாம வளர்ச்சியின் ஊடே தோன்றியதால், பலப்பல உயிர்களின் மரபியல் பண்புகள், மனித மரபணுக்களில் பொதிந்திருக்கும். பலப்பல உயிர்களும் பலப்பல பொருட்களின் கலவை என்பதால், பலப்பல பொருட்களின் தன்மைகளும் மனிதனில் உறைந்திருக்கும். எல்லாப் பொருட்களும், விண்மையின் வெளிப்பாடாகையால், விண்மையின் தன்மை மனிதனில் நிறைந்திருக்கும். இறுதியில், மனிதனின் உடல், மனம், அறிவு, உயிர் ஆகிய அனைத்தும் விண்மைத்தன்மை கொண்டதே. உண்மையில், உலகமே விண்மைத்தன்மைமயமானது. விண்மையே உலகம். விண்மையே அண்டம், பேரண்டம் ஆகிய அனைத்தும்.

விண்மைத்தன்மை:

விண்மையின் தன்மை யாது? விண்மை நுண்மையானது. மனித உடலும், புலன்களும், அடிப்படையில் விண்மையாயினும், வெளிப்பாட்டில் பருண்மையானவை, எனவே, விண்மையை அறிய முடியாது. மென்மையான மனமும், கூர்மையான அறிவும் விண்மையைப் பற்றித் தெரிய முடியும், அறிய முடியும், ஆனால், அவற்றால் விண்மையை அனுபவம் கொள்ள இயலாது. நுண்மையான உயிர் மட்டுமே, நுண்மையான விண்மையை உணரமுடியும், அனுபவம் கொள்ள இயலும்.

உயிர்மை :

உடலின் செயல், புலன்களின் ஓட்டம், மனதின் ஆசைகள், அறிவின் எண்ணம் ஆகிய அனைத்தும் அடங்கும் போதே, உயிரின் துடிப்பொலி உணரப்படும். அதைக் கூர்ந்து உள்நோக்கவே, துடிப்பொலி வலுப்பெறும். உயிரின் துடிப்பொலி அறிவு, மனம், புலன்கள், உடல் என அனைத்தையும் ஊடுருவி, இருப்பின் முழுமையையும் நுண் அதிர்வுறச் செய்யும். அந்நிலை மன அமைதியைத் தரும். அந்நிலை தொடர்ந்தால், உடலும் உள்ளமும் ஆனந்தத்தில் திளைக்கும். உயிர்மையே விண்மையே ஆனந்தமே! உயிர்மையே நுண்மையே பரமானந்தமே!

ஆனந்தத்தால், பேரின்பத்தால், உயிர்மை எனும் நரம்பு மண்டலமே மலர்கின்றது. அதன் உணர் நரம்புகளும், இயக்க நரம்புகளும் முழு ஆற்றலுடன் இயங்குகின்றன. அவை முழு ஆற்றலுடன் இயங்குவதால், உடலின் உறுப்புகளும் திறம்பட இயங்குகின்றன; புலன்களும் குறைகள் குறைந்து அறிகின்றன; மனமும் நிறைவாகின்றது; அறிவும் தெளிவாகின்றது உடல், புலன், மனம், அறிவின் இடையூறுகள் இன்றி, உயிர்மை மேலும் அமைதி அடைகின்றது. ஆனந்திக்கிறது. முகமும் மலர்கின்றது. புன்னகை தவழ்கின்றது. நக்கன் தோன்றுகிறான்!

உயிர்மை உணர்தல்:

வேடிக்கை என்னவென்றால், மூச்சைப் போலவே, நரம்பு மண்டலமும், தானாகவும் இயங்கும், இயக்க வைக்கவும் இயலும். உயிர்மை, சோகத்தால் துவள்கின்றது; இன்பத்தால் துள்ளுகின்றது. மேலும், வேடிக்கை என்னவென்றால், நரம்புமண்டலம் பூரிப்படைவதால், முகம் மலர்கிறது, புன்னகை தவழ்கின்றது, ஆனால், முகம் மலர்வதாலும், புன்னகை தவழ்வதாலும்கூட நரம்பு மண்டலம் பூரிப்படைகின்றது. அதுதான் நுட்பம் அல்லது தந்திரம். முகத்தில் புன்னகை நீடித்து தவழ்ந்தால், நரம்பு மண்டலமும் பூரிப்படைந்து உயிர்ப்புடன் விளங்குவதை, கண்மூடி உள்நோக்க முடியும். இது, உயிர்மையை உணரும் எளிய வழி. அந்த நரம்பு மண்டலத்தின்

பூரிப்பு நிலைக்க வேண்டுமாயின், நரம்பு மண்டலத்தை, தொடர்ந்து நிலைத்து உள்நோக்கல் வேண்டும். அந்த உள்நோக்கல், உடல், புலன், மன, அறிவு செயல்பாடுகளின் வேகத்தைக் குறைத்து நிறுத்தும். நரம்பு மண்டலத்தை உள்நோக்குவதே, அமைதிக்கும் ஆனந்தத்திற்கும், பேரின்பத்திற்கும் வழிவகுக்கும்.

தன்னை உணர்தல்:

உள்நோக்கல் மனத்தால்தான் முதலில் நிகழ்கின்றது. புறமாய் நோக்கப்பட்ட நரம்பு மண்டலத்துள்ளேயே மனமும் அடங்கி விடுகின்றது. மனமே, நரம்பு மண்டலத்தின் விரிவாக்கச் செயல்பாடுதான். நரம்பு மண்டலமே உடலாகவும், மூளையாகவும் விரிவடைகின்றது. மனமும், அறிவும் நரம்பு மண்டலத்தின் செயல்பாடுகளே! உங்கள் நரம்பு மண்டலமே நீங்கள்! நரம்பு மண்டலத்தை உணர்வதால், நீங்கள் உங்களை உணர்கிறீர்கள்.

உடல், மனம், அறிவின் தேவை:

அதே சமயம், நரம்பு மண்டலத்தால் உருவான உடல் இருப்பதால்தான், நரம்பு மண்டலமே உயிர்ப்புடன் இருக்கின்றது. அறிவு இருப்பதால்தான், உடல், மனம், நரம்பு மண்டலம் பற்றி அறிய முடிகிறது. மனம் இருப்பதால்தான், உள் நோக்க முடிகின்றது. மனம், அறிவு என்பதெல்லாம், நரம்பு மண்டலத்தின் விளைவுகள். மனம், அறிவு என்பன,

செயல்பாட்டைப் பொறுத்து வெவ்வேறு பெயர்களைப் பெறுகின்றன. எனவே, நரம்பு மண்டலம், உடல், மனம், அறிவு ஆகிய அனைத்தும், தன்னை அறிதலுக்கும், உணர்தலுக்கும் தேவை.

உலகை உணர்தல்:

மொத்தப் பேரண்டமும், எல்லாப் பொருட்களும், எல்லா உயிர்களும் விண்மையின் வெளிப்பாடு என்பதால், தனிமனிதனின் நரம்பு மண்டலம், உடல், மூளை, மனம், அறிவு ஆகிய அனைத்தும் விண்மையின் வெளிப்பாடே. விண்மையே உயிர்மை. பேரண்டமே உயிர்ப்புடன் துடித்துக் கொண்டு உள்ளது. பேரண்டத்துள் பிண்டமான மனிதனும் துடிப்புடன் உள்ளான். விண்மை அனைத்தையும் ஊடுருவி நிற்கின்றது. எனவே, முழுமையான, வளமையான, வலிமையான செயல்பாட்டைக் கொண்டிருக்கும் தனிமனித நரம்பு மண்டலம், தன் உடலையும் கடந்து, விண்மையை ஊடகமாய்க் கொண்டு, புற உலகில் ஊடுருவச் சாத்தியப்படுகின்றது. பரத்தின் காயமான விண்மைக்குள் பயணம் கொள்ள முடிகின்றது. தன்னை உணர்தல் கடந்து, உலகை உணர்தலும் இயல்கின்றது. தன்னை உணர்ந்த தனிமனிதனின் அமைதியும், ஆனந்தமும், புற உலகின் அமைதியும் ஆனந்தமுமாக மலரலாம்.

தந்திரம்:
பௌத்த காலச்சக்கர யோகம் மற்றும் சைவ சிவசத்தி தந்திர யோகம், உடலின்பத்தின் உச்சத்தில் இருக்கும் மனநிலையைப் பற்றிக் கொண்டு, தியானத்திலும் அம்மனநிலையில் நீடித்து இருக்கப் பயிற்றுவிக்கின்றன. அம்மனநிலையால் என்ன நிகழ்கிறது? நரம்பு மண்டலம் உயிர்ப்புடன் இயங்குகிறது. நரம்பு மண்டல உயிர்ப்பின் நீடிப்பே, தன்னை உணர்தல், ஞானம் அடைதல், அமைதி காணல், பேரின்பம் அடைதல், ஆனந்தமயமாதல்.

எளிய வழி :
ஆனந்தமான நினைவைக் கொண்டு அல்லது பேரின்பமாய் இருப்பதாய் நினைத்து முகம் மலர்ந்து, பெரும் புன்னகை தவழ, கண்மூட, நரம்பு மண்டலம் துடிப்புடன் இயங்கும். அதை உள்நோக்க, நரம்பு மண்டலம் மேலும் உயிர்ப்புடன் இயங்கும். உடல் நலம் பெறும், மனம் தெளிவு பெறும். புலன்கள், அறிவு கூர்மையாகும், செயல்பாடுகள் அழகுறும், செம்மை அடையும். தொடர்ச்சியான நரம்பு மண்டல உள்நோக்கல், தன்னை உணரச் செய்யும், தன்னைக் கடந்து, புற உலகையும் உணரச் செய்யும். அமைதியும், ஆனந்தமும், பேரின்பமும், நிலைபேறும் சாத்தியமாகும். உயிர்மரத்தின் கனியைப் புசித்து, நீடித்து நிலவலாம். உலகமும், அமைதியும் பேரின்பமும் அடையும்.

# 12. நாளொற்றித் தேய்ந்த விரல்

— முனைவர் சே. கரும்பாயிரம்

கோடு என்னும் சொல்லுக்கு யானையின் கொம்பு (புறநானூறு, 17:17), மரக்கிளை (சிறுபஞ்சமூலம், 66:1), மலையுச்சி (நாலடியார், 372:2), சங்கு (குறுந்தொகை, 11:1), கரை (அகநானூறு, 30:11) எனப் பல்வேறு பொருள்கள் வழங்குவதைக் காணலாம்.

ஆயினும் எண்களைக் கணக்கிடுவதற்காக எழுதுபொருளைக் கொண்டு ஒரே அளவுடன் நீட்டு வாக்கில் ஒன்றன் பின் ஒன்றென வரிசையாகச் சுவரில் பதியும் வடிவத்தைக் கோடு என்று சொல்வதைக் காணமுடியும். இந்தக் கோடே ஒன்று என்ற எண்ணின் வரி வடிவத்திற்கு வித்திட்டது எனலாம்.

பண்டைய காலத்தில் தலைவனும் தலைவியும் அக வாழ்வில் ஈடுபட பொருள் தேவைப்பட்ட பொழுது அதைத் தேடிச் செல்ல தலைவன் அத்தலைவியை விட்டு நீண்ட நாட்கள் பிரிந்து இருப்பான். அந்த நேரத்தில் தலைவியானவள் அவன் தன்னுடன் இருந்து பிரிந்து சென்ற ஒவ்வொரு நாளையும் குறிக்கும் விதத்துடன்

சுவரில் வரிசையாகக் கோடுகள் இடுவதுமுண்டு.

அவள் அக்கோடுகள் இட்ட சுவரை நோக்கி தலைவன் வராமல் இருப்பதை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். இதனை ‘நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி’ (61:4) என்றும் ‘சேணுறை புலம்பின் நாண்முறை யிழைத்த, திண்சுவர் நோக்கி’ (289:9,10) என்றும் அகநானூறு கூறுவதால் அறியலாம்.

சில நேரங்களில் தலைவன் தலைவியிடம் இன்ன நாளில் வருவேன் என்று சொல்லிவிட்டுச் செல்லும் பொழுது அந்த நாளில் வராமலும் இருப்பதுண்டு. அந்த வகையில் ஒரு தலைவன் குறித்த காலத்தில் தான் வராதபொழுது தலைவியானவள் தன்னை நினைத்து வருந்துவதோடு பிரிந்து சென்ற நாட்களுக்காகச் சுவரில் இட்ட கோடுகளை விரல்கள் கொண்டு எண்ணிக் கொண்டிருப்பாள் என்பதை,

மெல்விரலினாள்வைத்து நங்குற்ற
மெண்ணுங்கொ லந்தோதன்
றோள்வைத் தணைமேற் கிடந்து (394:2-4)

என நாலடியார் தெரிவிக்கின்றது.

குறிப்பாகப் பொருள் ஈட்ட தலைவியை விட்டுப் பிரிந்து செல்லும் முல்லைநிலத் தலைவன் கார்காலத்தில் வருவது வழக்கமாகும். அந்த வகையில் அந்நிலத்துத் தலைவி ஒருத்தி பிரிந்து சென்ற தலைவன் வருவதாகச் சொல்லிய நாள்

வரை கோடுகளைச் சுவரில் இட்டுக் கொள்கிறாள். இட்ட கோடுகளைப் பார்த்து அவன் வரும் காலத்தில் வராமல் இருப்பதை நினைத்து அழுது கொண்டு இருக்கிறாள்.

அவளைப் பார்த்துத் தோழியானவள் நீ அழாதே என்று சொல்லி தலைவர் வருவதாகச் சொல்லிய கார்காலத்தில் கோவலர்கள் முல்லைக் கொடியில் பூத்த மலர்களைச் சூடிச் செல்கிறார்கள். ஆதலால் நீ சுவரில் கோடிட்டுக் கழித்த நாளில் தலைவர் வருவதாகக் கூறிய கார்காலம் வந்துவிட்டதால் அவர் உடனே வருவார் எனத் தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள் தோழி.

இதனை,

வீங்கிழை நெகிழ விம்ம யீங்கே
எறிகட் பேதுற லாய்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்றுநின் படர்சே ணீங்க
வருவே மென்ற பருவ முதுக்காண்
தனியோ ரிரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் கோவலர் கண்ணிச்
சொல்லுப வன்ன முல்லைமென் முகையே

(குறுந்தொகை, 358)

என்னும் பாடல் கூறுவதால் அறியலாம்.

தலைவன் வருவதில் காலம் தாழ்த்தும் பொழுது தலைவியானவள் அவன் வரும் வழியைப் பார்த்துப்பார்த்து இருப்பதால் அவளுடைய கண்களில் ஒளி மங்குவதோடு அவர் பிரிந்து சென்ற நாட்களைச் சுவரில் கோடுகளாக இட்டு

வந்ததைத் தொட்டுத்தொட்டுப் பார்ப்பதால் கை விரல்களும் தேய்ந்து போய் விடுகிறதாம்.
இதனை,

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்
(திருக்குறள், 1261)

என்று திருவள்ளுவர் அழகாகக் காட்சிப்படுத்தியுள்ளார்.

எனவே, முன்னோர்கள் சுவரில் கோடுகள் இட்டு அக்கோடுகளை நாட்களாகக் கணக்கிட்ட எண்ணலளவை இன்றைக்கும் மக்களிடையே இருந்து வருவது வியப்பளிக்கிறது.

குறிப்பு: 'தினமணி' ஜனவரி 21, 2024 நாளிதழுக்கு வழங்கப்பட்ட கட்டுரை

# 13. இளங்கோவடிகள் வழங்கிய 20 கட்டளைகள்

— அருள் மெர்வின்

பல மதங்களில் பல கட்டளைகள், உபதேசங்கள் உண்டு. பத்துக் கட்டளைகள் போன்று இருபது கட்டளைகளை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் நமக்குக் கொடுத்திருக்கிறார். மதங்களின் கட்டளைகளை அவற்றைக் கொடுத்தவர்களே கடைப்பிடிப்பது கஷ்டம். இளங்கோவின் கட்டளைகளைக் குறைந்தபட்சம் முயன்று பார்க்க முடியும்.

சரியாக இருபது கட்டளைகள்....
1) இன்பத்தையும், துன்பத்தையும் கடந்து செல்.
“பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்” (பாங்கு என்றால் பக்கம் என்று தமிழில் அர்த்தம் உண்டு.

புத்தகத்தில் ஒரு பக்கத்தில் இன்பமான விஷயம் எழுதப்பட்டிருக்கிறது, இன்னொரு பக்கத்தில் துன்பமான விஷயம் எழுதப்பட்டிருக்கிறது. பக்கங்களைப் புரட்டி கதையை வாசித்துச் செல்வது போல வாழ்க்கையை வாசித்துச் செல்லுங்கள்.)

2) கடவுள் பற்றித் தெளிவாக இரு.
“தெய்வம் தெளிமின்” (ஆச்சரியமான கட்டளை. கடவுள் இருக்கிறார் என்றும் சொல்லவில்லை, கடவுள் இல்லை என்றும் சொல்லவில்லை. கடவுள் என்ற விஷயத்தில் தெளிவாக இரு என்கிறார்.)

3) தெளிவாக இருப்பவர்களை அக்கறையுடன் பார்த்துக் கொள்.
“தெளிந்தோர்ப் பேணுமின்” (ஏனென்றால் அவர்கள்தான் அடுத்த தலைமுறைக்கு வழிகாட்டுபவர்கள்.)

4) பொய்பேசப் பயப்படு.
“பொய்யுரை அஞ்சுமின்” (பொய் பேசாதே என்று வேத புத்தகங்கள் போல கட்டளையிடவில்லை. பொய் பேசப் பயப்படு என்று கட்டளையிடுகிறார். இரண்டுக்கும் வித்தியாசம் உள்ளது.)

5) புறணிகளை மனதில் கொள்.
“புறஞ்சொல் போற்றுமின்” (கொஞ்சம் சிக்கலானது. அப்படியே அர்த்தம் கொண்டால் ‘புறங்கூறுவதை ஆதரி’ என்றுவரும். ‘போற்று’ என்பதற்கு ‘மனதில் இருத்து’ என்றும் ஒரு பொருள் உண்டு. புறணி பேசாதே என்று இளங்கோ கட்டளையிடவில்லை. புறணிகளைக் கேட்டு உன் மனதில் இருத்திக் கொள் என்கிறார். நம்மைப் பற்றி நல்லது பேசுபவர்களை விட, கெட்டது பேசுபவர்கள் சொல்லும்

விஷயங்களை மனதில் போட்டு ஆராய்ந்தால்தான் நாம் இன்னும் மேம்பட, திருத்திக் கொள்ள வழிகள் கிடைக்கும்.)

6) மாமிசம் உண்பதை விட்டுவிடு.
“ஊனூண் துறமின்” (மாமிசம் சாப்பிடாதே என்று சொல்லாமல், சாப்பிடுவதை விட்டுவிடு என்கிறார். மாமிசம் சாப்பிடாதே என்பதற்கும், மாமிசம் சாப்பிடுவதை விட்டுவிடு என்பதற்கும் வித்தியாசம் உள்ளது. புத்த, சைன மதங்களின் தாக்கத்திற்குள் செல்லாமல் இதை எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். எதை எப்போது நிறுத்த வேண்டும் என்று தெரிந்தவனுக்கு ஆபத்து வருவதில்லை. அடுத்த கட்டளையைப் பார்த்தால் இன்னும் விளங்கும்.)

7) உயிர்க்கொலை சம்பந்தப்பட்ட விஷயங்களிலிருந்து வெளியே வந்துவிடு.
“உயிர்க்கொலை நீங்குமின்” (ஓர் உயிரைக் கொல்லாமல் இன்னோர் உயிர் வாழ முடியாது. கத்தரிக்காய்க்கும் உயிர் உண்டு. ஆட்டுக்கிடாய்க்கும் உயிர் உண்டு. கொலை செய்யாதே என்று எளிதாக இளங்கோ சொல்லியிருக்கலாம். உயிர்க்கொலையிலிருந்து நீங்கிவிடு என்கிறார். அடுத்த முறை எதாவது உயிரைக் கொல்லும் போது இந்தக் கட்டளையை மனதில் ஓட்டிப் பாருங்கள். உயிரைக் கொல்வது என்பது செடியைப் பிடுங்குவது கூட இருக்கலாம்.)

8 ) தானம் செய்.
“தானம் செய்ம்மின்”

9) நல்ல விஷயங்கள் செய்யும் அளவு உன்னை வைத்துக்கொள்.
“தவம்பல தாங்குமின்” (தவம் என்ற சமஸ்கிருத வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்று தெரியும். ஆனால் தவம் என்ற வார்த்தை பழைய தமிழிலும் உண்டு. சிலப்பதிகாரத்திலேயே அது பல இடங்களில் பல அர்த்தங்களில் வருகிறது. தவம் என்றால் இல்லறம் என்றுகூட அர்த்தம் உண்டு. பொதுவாக எல்லா நல்ல விஷயத்தையும் தவம் என்ற அர்த்தத்தில் தமிழில் உபயோகித்திருக்கிறார்கள்.)

10) உதவி செய்பவர்களைத் துன்புறுத்தாதே.
“செய்ந்நன்றி கொல்லன்மின்” (உனக்கு உதவி செய்தவர்களை மறக்காதே - நன்றி மறவாதே - என்று பலர் அர்த்தம் சொல்கிறார்கள். இந்தக் கட்டளையில் உதவி உனக்கா, எனக்கா என்ற குறிப்பே இல்லை. யாரோ, யாருக்கோ கூட உதவி செய்திருக்கலாம். அப்படி உதவி செய்பவர்களைக் கொல்லன்மின்.)

11) கெட்ட நட்பை இகழ்.
“தீநட் பிகழ்மின்” (கெட்ட நட்பு கொள்ளாதே என்று சொல்லவில்லை. கெட்ட நட்பை எங்கு பார்த்தாலும் அதை இகழ்ந்து ஒதுக்கிவிடு என்கிறார். அது அரசியல் கூட்டணியாகவும் இருக்கலாம்.)

12) பொய்ச்சாட்சிப் பக்கம் போகாதே.
“பொய்க்கரி போகன்மின்” (கரி என்றால் சாட்சி என்றும் பொருள் உண்டு என்கிறார்கள். ‘இந்திரனே சிறந்த சாட்சி’ என்பதற்கு திருவள்ளுவர் ‘இந்திரனே சாலுங் கரி’ என்கிறார். வேறு அர்த்தம் கூட இருக்கலாம்.)

13) சொன்ன வார்த்தையை மாற்றிப் பேசாதே.
“பொருண்மொழி நீங்கன்மின்” (பொருண்மொழி என்பது ஓர் அற்புத வார்த்தை. ஒரு வார்த்தைக்குப் பலவித அர்த்தங்கள் நம் மொழியில் உண்டு. ஆனால் நீ எந்த அர்த்தத்தில் சொன்னாயோ அந்த அர்த்தத்திலிருந்து மாறாமல் இரு என்று கட்டளையிடுகிறார். அதுதான், ‘பொருண்மொழி நீங்கன்மின்’. மொழியின் பொருளிலிருந்து நீங்காதே.)

14) அறம் உள்ளவர்கள் எங்கே இருந்தாலும் அவர்களுடன் சேர்ந்துகொள்.
“அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்” (அறம் என்றால்? விளக்கம் திருக்குறளில் உள்ளது.)

15) அறம் இல்லாதவர்கள் எங்கே இருந்தாலும் தப்பித்தோம் பிழைத்தோம் என்று அங்கிருந்து ஓடிவிடு.
“பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்”

16) இன்னொருவர் வீட்டு விவகாரங்களில் தலையிட பயப்படு.
“பிறர்மனை அஞ்சுமின்” (பிறர்மனை என்பதற்கு அடுத்தவர் மனைவி என்று பொருள்படுத்துவார்கள். அடுத்த கட்டளைகளுக்குப் போவோம்.)

17) பிழையுள்ள உயிர்களைக் காப்பாற்று.
“பிழையுயிர் ஓம்புமின்” (பிழையுயிர் என்றால் பலவிதங்களில் அர்த்தப்படுத்திக் கொள்ளலாம். மாற்றுத்திறனாளிகளிலிருந்து, சாலையில் அடிபட்டுக்கிடக்கும் பறவை வரை இருக்கலாம். எவராக, எதுவாக இருந்தாலும் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு.)

18) ஒரு வீடு அறமுள்ள வீடாக இருந்தால் அந்த வீட்டைக் காப்பாற்று.
“அறமனை காமின்” (பிறமனை, அறமனை...என்று சேர்த்துப் பார்த்தால் இளங்கோ இங்கே மனைவிகளைப் பற்றிப் பேசவில்லை என்று தெரியும்.)

19) அறமில்லாத வீடாக இருந்தால் அந்த வீட்டைத் திருத்து.
“அல்லவை கடிமின்”

20) கள், களவு, காமம், பொய், நக்கல் போன்ற விஷயங்கள் அளவுகடந்து சென்றால் நிறுத்திவிடு.
“கள்ளும் களவும் காமமும் பொய்யும்

வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்”
(களவு, வெள்ளைக் கோட்டி, விரகு போன்ற வார்த்தைகள் ஆராய்ச்சிக்குரியவை. விரகு என்றால் தவறாக உபயோகித்தல் என்ற பொருளும் உண்டு.)

இருபதாயிரம் புத்தகங்கள் படிக்க வேண்டியதில்லை. இளங்கோவின் இந்த இருபது கட்டளைகள் போதும்.

# 14. மணிமேகலை காப்பியமும் தேவைக் கோட்பாடும்

— சொ.வினைதீர்த்தான்

மணிமேகலை காப்பியத்தில் தன்னம்பிக்கை என்ற கோட்பாட்டை ஆராய மணிமேகலை காப்பியத்தைப் படிக்கும் பொழுது, மணிமேகலை வாழ்க்கையோடு ஆபிரகாம் மாஸ்லோவின் 'தேவைக்கோட்பாடு கட்டமைப்பு பொருந்திப்போவதைக் கண்டேன். மாஸ்லோ கூறும் தேவைகள்:

1.அடிப்படைத் தேவைகள் (Physiyalogical Need)
2.பாதுகாப்புத் தேவை (Security Need)
3. தோழமையின் தேவை (Companionship Need)
4.மதிக்கப்படும் தேவை (Esteem Need)
5.தன்னிறைவுத்தேவை(Self-Actualization)

அடிநிலைத்தேவை பூர்த்தியானதும் அடுத்த தேவைக்கு மனிதன் ஏங்குகிறான்; அடைய முயல்கிறான் என்பது அவருடைய உளவியல் கொள்கை.

இந்த அடிநிலைத் தேவைக்கட்டமைப்புச் சிந்தனைகளை மணிமேகலை வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். முதல் அடிப்படைத் தேவையான (Basic Physiyalogical Need) பசிப்பிணியைத் தீர்க்க வேண்டும் என்ற மணிமேகலையின் எண்ணத்தின் வலு அவள்

கைகளில் அமுதசுரபியை மணிமேகலா தெய்வம், தீவதிலகை வழியாகக் கொண்டுவந்து சேர்க்கிறது.

தீவதிலகை மணிமேகலைக்குப் பசிப்பிணியின் கொடுமையைச் சொல்லி, நாட்டில் மழை வளம் இல்லாமல் விசுவாமித்திரனாகிய அரசன் கூட நாயின் புலாலைத் தின்ன நேர்ந்த நிலை வந்ததையும் சொல்லி, உலகில் எப்படிப்பட்டவர்களுக்கு உணவு அளிக்கவேண்டும் என்றும் அறிவுறுத்துகிறாள்.

"ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை;
மண் திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"

உலகத்தில் வாழ்பவருக்கு உணவு கொடுத்தவர்கள் உயிர் கொடுத்தவர்களே. இவ்வாறு மனித வாழ்வின் முதல் தேவையான பசிப்பிணியறுத்தல் குறித்துக் காப்பியம் பேசுகிறது.

மாதவி மணிமேகலைக்கு காட்டுகிற துறவறநெறி ஆடல் மகளிர் வாழ்க்கையை மணிமேகலை தவிர்க்க உதவும் .பாதுகாப்புத் தேவை (Security Need) அரணாகிறது.

அடுத்த தேவையான தோழமை (Companionship Need) குறித்துப் பார்க்கலாம். மணிமேகலையின் மீது காதல் கொண்டிருந்த அந்நாட்டு இளவரசன் உதயகுமரன் அவளைத்தேடி உவவனத்திற்கு வருகிறான். அவனிடமிருந்து தப்பித்துக் கொள்ள எண்ணிய மணிமேகலை அங்கிருந்த பளிங்கினால் அமைக்கப்பட்ட பளிக்கறை மண்டபத்தில் புகுந்துவிடுகிறாள். உதயகுமரன் பளிக்கறைக்குள்ளே செல்ல வழி தெரியாமையால் மணிமேகலையைப் பலவாறு இழித்துக் கூறிவிட்டுத் திரும்பிச் சென்றுவிடுகிறான். உதயகுமரன் சென்றபின் மணிமேகலை வெளியே வருகிறாள். சுதமதியிடம் தன் நெஞ்சமும் உதயகுமரனை நாடுவதை எடுத்து உரைக்கிறாள்.

புதுவோன் பின்றைப் போனது என் நெஞ்சம்
இதுவோ அன்னாய் காமத்து இயற்கை
இதுவே ஆயின் கெடுகதன் திறம்...

என்று. அவ்வெண்ணெத்தை மாற்றவேண்டும் என்ற உறுதியும் கொள்கிறாள்.

அவள் கைகளில் அமுதசுரபி கிடைக்கிறது. "காணார், கேளார், கால்முடமானோர், பசிநோய் நோற்றார், பல்நூறு ஆயிரம் விலங்கின் தொகுதி" என்று அருந்தியோர்க்கெல்லாம் ஆர் உயிர் மருந்தாய் பெருவளம் அமுதசுரபி வழியாகச் சுரந்து நல்குகிறாள் மணிமேகலை. "பசிப்பிணி தீர்த்த பாவை"யாக யாவரும்

போற்றுகிறார்கள்.(Esteem Need), யாவரும் அங்கீகரித்துக் கொண்டாடுகிறார்கள். பின்னரும் மணிமேகலையின் தேவையடங்கவில்லை. அவள் எண்ணம் பூர்த்தியாகவில்லை.

அவள் தேவை உச்சபட்சத்தேவையான தன்னை அறிதல், தன் நோக்கம் அறிதல், அதனை அடைதல் (Self Actualization) என்பதிலேயே நிலை கொண்டிருக்கிறது அறவண அடிகளிடம் "அடிகள் மெய்ப்பொருள் அருளுக" எனத் தருமம் கேட்கிறாள். புத்த சங்கத்தில் சரண் புகுகிறாள். இறுதியில் மனத்து இருள் நீங்க நோன்பு நோற்கிறாள். பசிப்பிணி அறுக்கும் அடிப்படைத் தேவையைப் போக்குகிற பணியில் தொடங்குகிற மணிமேகலையின் வாழ்க்கை "தவத்திறம்பூண்டு தருமம் கேட்டு நோன்பு நோற்றுப் பிறவாமை நீக்குகிற உச்சபட்சத்தில் நிறைவடைகிறது.

மணிமேகலை உணர்த்தும் தன்னம்பிக்கை:
இலக்கியங்களின் உயர்ந்த நோக்கங்களுள் ஒன்று படிப்போருக்குத் தன்னம்பிக்கையை ஏற்படுத்துதல் ஆகும். மணிமேகலை காப்பியத்தில் இடம்பெறும் தன்னம்பிக்கைச் சிந்தனைகளைப் பின்வரும் நிலையில் அடுக்கிக் காண இயலும்.

1. கோவலன் தன் செல்லப் பெண்ணுக்குப் பெயர் வைக்கிறபோது எண்ணிப்பார்த்து ‘மணிமேகலை’ என்ற நன்னெறித் தெய்வத்தின் பெயரை இடுகிறான். அப்பெயர் அவளுடைய நல்ல எண்ணங்களுக்கு வலுவூட்டுகின்றது. இன்று பிள்ளைக்குப் பெயர் வைப்பவர்கள் உணர வேண்டிய செய்தி இது.

2. பிள்ளைகளுக்குப் பெற்றோர் நடந்துகாட்டி வழிகாட்ட வேண்டும். தங்கள் குடும்ப அங்கத்தினரின், மரபினரின் நற்செயல்களைப் பெற்றோர் எடுத்துச்சொல்லி வளர்க்கிறபோது முன்னோர் உயர்ந்த நெறிகள் அவர்கள் மனதில் படியும். சித்ராபதி வழி வந்த ஆடல் மகளிர் வாழ்க்கை, கோவலன் கண்ணகி வழியாக வருகிற வாழ்க்கை என்று இரண்டு மரபுகள் மாதவி முன் தெரிந்தெடுக்க உள்ளன. ஆனால் மாதவி துறவறம் பூண்டு துறவாடை வழிகாட்டியாக மணிமேகலை முன்நிற்கிறாள்.

காவலன் பேரூர் கனைஎரி ஊட்டிய
மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை
அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்
திருந்தாச் செய்கைத் தீத்தொழில் படாஅள்
என்று சொல்லி மணிமேகலை நெஞ்சத்தில் தான் கண்ணகி மகள் தீத்தொழிலுக்கு உரியவளன்று என்ற நெறியை வளர்த்தெடுக்கிறாள்.

3. நல்ல அறங்களுக்கு முயல்பவர்களுக்கு மக்கள், பெரியோர், சூழ்நிலை, தெய்வம்

அனைத்தும் துணையாகும் என்பதைக் காப்பியம் உணர்த்துகிறது. மணிமேகலைக்கு சுதமதி, காயசண்டிகை, ஆதிரை, அறவண அடிகள் அனைவரும் உதவுகின்றனர். "தெய்வம் மடிதற்றுத் தான்முந்துறும்" என்பதற்கிணங்க மணிமேகலா தெய்வம் அவளை மணிபல்லவத் தீவுக்குக் கொண்டு சேர்க்கிறது. வரங்கள் நல்கிறது. தீவில் தீவதிலகை என்னும் தெய்வம் மணிமேகலை கைகளுக்கு அமுதசுரபி வர துணைநிற்கிறது பெரியாரைத் துணைக்கொள்வதில் மணிமேகலை சிறந்து விளங்குகிறாள்.

4. நல்லெண்ணத்தின் வலிமையால் வந்த துன்பம் நீங்கும். உதயகுமரன் கொலையால் மணிமேகலை சிறைபுகுகிறாள். சிறையில் இராசமாதேவி காவலர் மூலம் பல கொடுமைகள் செய்கிறாள். அவற்றைப் பொறுத்துக் கொண்ட திறத்தைக் கண்டு இராசமாதேவி மனம் மாறி மணிமேகலையைத் தொழுகிறாள். பெரியோர் போற்றும் தவச்செல்வி அதனைத் தடுத்துத் தான்தொழுகிறாள்.

5. தகவல் தொடர்பு கலை சாதுவன் கதை மூலம் தெற்றென விளக்கப்படுகிறது நாகர்மொழி அறிந்திருந்தமை அவன் உயிரினைக் காக்கிறது. சாதுவன் நரமாமிசம் உண்பவர்களிடமும் அவர்கள் மனம்கொள்ளுமாறு சான்றுகளுடன் அறிவைக்

கெடுக்கும் கள்ளுண்ணுதல், மனிதனால் படைக்கவியலாத உயிரைக் கொல்லுதல் போன்றவற்றைத் தவறெனத் தன் திறன் மூலம் உணர்த்தித் திருத்துகிறான். ஒருவனுடைய முன்னேற்றத்திற்குக் காரணமான அறிவை மயக்கும் கள் தன்முன்னேற்றம் வேண்டுபவர் விலக்க வேண்டியதில் தலையாயது என்பது வலியுறுத்தப்படுகிறது..

6. “பொறியின்மை யார்க்கும் பழியன்று
ஆள்வினை யின்மை பழி” என்பது பொய்யாமொழி. விதியெவ்வாறு இருந்தாலும் தவத்தாலும் பசிப்பிணியகற்றும் அறத்தாலும் தொடர்ந்து செயலாற்றி மானுடம் போற்ற வாழ்க்கை நடத்தலாமென்பதற்கு எடுத்துக்காட்டாகிறாள் மணிமேகலை.

7. ஆபிரகாம் மாஸ்லோ தன்னுடைய உளவியல் கோட்பாட்டில் அடிப்படைத் தேவையான உண்டி முதல் உயர்ந்தபட்சத் தேவையான இலக்கு நிறைவேறல், தன்னிலை அறிதல் வரை தேவைகள் நிறைவேறுகிற போது மனிதன் தன்னூக்கம் கொள்கிறான் என்கிறார். பசிப்பிணி அறுக்கும் அடிப்படைத் தேவையைப் போக்குகிற பணியில் தொடங்குகிற மணிமேகலையின் வாழ்க்கை “தவத்திறம்பூண்டு தருமம் கேட்டு நோன்பு நோற்றுப் பிறவாமை நீக்குகிற” உச்சபட்சத்தில் நிறைவடைகிறது.

ஒரு தனி மனிதப் பெண்ணாக இருந்து மணிமேகலை சாதித்த சாதனைகள், மற்றும் அவள் சிக்கல்களை எதிர்கொண்ட விதம் ஆகியன குறிப்பாகப் படிக்கும் பெண்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுவன.

# 15. முதன்மைத் தமிழாசிரியர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

— முனைவர் தேமொழி

அனைவருக்கும் கல்வி என்ற முறையில் இந்தியாவில் முறையான பள்ளிகளும் கற்பித்தலும் தோன்றிய திருப்புமுனையான காலம் 19ஆம் நூற்றாண்டு. அதற்கு முன்னிருந்த மன்னராட்சி காலங்களில் கல்வியை அனைவருக்கும் கற்பிக்கும் முறை இருந்ததில்லை. பிரித்தானிய அரசு மற்றும் மெக்காலே முன்னெடுப்பில் அனைவருக்கும் கல்வி வாய்ப்பு கிட்டியது. எனவே, அரசு செய்த ஏற்பாட்டின் மூலம் இந்தியாவில் பள்ளிகளில் முறையான கல்வி என்பதை 1850களுக்குப் பிறகு என்றே கொள்ளலாம். இந்தக் காலகட்டத்திற்கு முன்னர் ஆசிரியர்களைத் தேடிச் சென்று குருகுலம், திண்ணைப்பள்ளி போன்றவற்றில் வசதி வாய்ப்பு படைத்தவர் வீட்டுப் பிள்ளைகள்


மீனாட்சிசுந்தரம் பிள்ளை
(ஏப்ரல் 6, 1815 - பிப்ரவரி 1, 1876)

பயின்றனர். பண்டைய குருகுல முறையில் இவர்களுக்குப் பாடம் நடத்திய ஆசிரியர்கள் பிரிவில் முதன்மையானவராக நாம் அறிபவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள். குருகுல முறையின் கடைசி தமிழ் முனிவர் என்று இவர் குறிப்பிடப்படுகிறார். உதாரண ஆசிரியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்றும் குறிப்பிடப்படுகிறார். தியாகராசச் செட்டியார், உ.வே. சாமிநாதையர், மயூரம் வேதநாயகம் பிள்ளை, குலாம்காதர், நாவலர், சவுரிராயலு நாயக்கர் போன்றோர் இவரிடம் கல்வி கற்ற புகழ்பெற்ற தமிழறிஞர்கள். வித்துவான் தியாகராசச் செட்டியார், உ.வே. சாமிநாதையர் போன்ற தமிழ்ப் பெரியவர்கள் பின்னர் முறையான கல்லூரி, பல்கலைக் கழகங்களில் ஆசிரியர்களாகப் பணியாற்றினார்கள்.

ஒரு தனி மனிதப் பல்கலைக்கழகமாகத் திகழ்ந்தவர் என்றும், ‘பிற்காலக் கம்பர்' என்றும் பாராட்டப்பட்ட பெருந்தமிழ் அறிஞர் மீனாட்சி சுந்தரனார். கற்பது, கற்பிப்பது, கவி புனைவது என்பதைத் தனது வாழ்வின் பணியாக வகுத்துக்கொண்டவர் இத்தமிழ்ப்பெருந்தகை. தமிழ்ப்புலவர் சிதம்பரம் பிள்ளை அவர்களின் மகனாக ஏப்ரல் 6, 1815இல் திருச்சிராப்பள்ளியில் பிறந்தவர் மீனாட்சி சுந்தரனார். தந்தையிடமே முறையான கல்வியைத் தொடங்கி, பின்னர் காஞ்சிபுரம் சபாபதி முதலியார், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர்

உள்ளிட்ட பல தமிழ் அறிஞர்களையும், பற்பல ஆசிரியர்களையும் புலவர்களையும் தேடிச் சென்று கல்வி கற்றார். யாப்புடன் கூடிய பாடல்களை விரைவில் புனையும் ஆற்றல் பெற்றவர். 19ம் நூற்றாண்டில் தமிழில் அதிக நூல்களை இயற்றியவர் என்ற பெருமையும் இவருக்கு உண்டு. பிள்ளைத்தமிழ் நூல்கள் பல இயற்றியமையால் 'பிள்ளைத் தமிழ் மீனாட்சி சுந்தரம் பிள்ளை' என்றும் புகழப்பட்டார். திருவாவடுதுறை ஆதீனம் அம்பலவாண தேசிகர் இவருக்கு 'மகாவித்வான்' என்ற பட்டம் அளித்துப் பாராட்டினார்.

திருவாவடுதுறை மடத்தின் தலைமைப் புலவரான இவரிடம் கல்வி கற்க மாணவர் பலர் விரும்பி இவரைத் தேடி வந்தனர். பண்பின் உறைவிடமான இவர் தான் கற்றவற்றைச் சாதி, மதம், இனம் போன்ற வேறுபாடுகளைப் பாராட்டாது அனைவருக்கும் கற்பித்தார். தன்னிடம் பாடம் கேட்க வந்தவர்களுக்கு உணவும் உறைவிடமும் அளித்துக் கைம்மாறு கருதாது கல்வி புகட்டினார். அவர் தனது மாணவர்களைத் தனது மக்களைப்போல அன்புடனும் அக்கறையுடனும் பராமரித்தார் என்பதை தன் ஆசிரியர் குறித்த விரிவான வாழ்க்கை வரலாற்றை 'மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரித்திரம்' என்ற தலைப்பில் உ.வே.சா. அவர்கள் எழுதிய நூலின் மூலம் அறியலாம். 'தாயை விட என்மீது அதிக அன்பு கொண்டிருந்தவர் என் ஆசான்' என்று

குறிப்பிடுகிறார் உ.வே.சா. 'மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை; இந்தியா' என முகவரியிட்டு இலண்டனிலிருந்து அனுப்பப்பட்ட அஞ்சல் சரியாக இவரிடம் வந்து சேரும் அளவிற்கு அவர் வாழ்ந்த காலத்தில் பெருமையும் புகழும் பெற்றிருந்தவர், தமிழுலகம் போற்றிக் கொண்டாடும் வகையில் மதிக்கப்பட்டவர் மீனாட்சி சுந்தரனார். 1876 ஆம் ஆண்டு மறைந்த மீனாட்சி சுந்தரனார் அவர்களின் வாழ்வும் பணியும் இன்றைய ஆசிரியப் பெருமக்களுக்கெல்லாம் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும் வகையில் அமைந்திருந்தது என்றால் அது மிகையன்று. அதனாலேயே சாலப் பெரிய ஆசிரியர்பிரான், மாணாக்கனைக் கவர்ந்த ஆசான், ஆசான்களின் ஆசான், புலவர்களின் புலவர் என்றெல்லாம் பாராட்டப் பாடுகிறார்.

நவீன கல்வி வரலாற்றில் முதல் தமிழாசிரியராக அறியப்படுபவரும், தமிழுலகம் போற்றும் தமிழ் அறிஞர்களை உருவாக்கியவரும், தமிழாசிரியர்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவருமான திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் பிறந்தநாளைக் கொண்டாடி நினைவுகூர்தல் தமிழ்க் கல்வி அளிக்கும் ஆசிரியர்களைப் பாராட்டும் வகையில் அமையும் என்பதில் ஐயமில்லை.

# 16. கும்பகோணம் பாலாமணியின் " டம்பாச்சாரி விலாசம்"

— நா. விச்வநாதன்

கும்பகோணம் பாலாமணி அம்மாள் மகாராணியைப்போல வாழ்ந்த ஒரு நாடக நடிகை. ஆண்கள் உலகமாக இருந்த அன்றைய தமிழ்நாடகத்தில் எழுபது பெண்களை வைத்துக் கொண்டு நாடகக்கம்பெனி நடத்திய துணிச்சலான பெண்மணி. பேரழகி, நாடகக்கலைக்காகவே திருமணம் செய்துகொள்ளாமல் தன் வாழ்வை அர்ப்பணித்திருந்தார். மின்சாரம் இல்லாத அக்காலத்தில் பெட்ரமாக்ஸ் வெளிச்சத்தில் நாடகங்கள் நடத்தினார். பெண்களே கதாநாயகன் வேடம்தரித்தனர். பபூன் உட்பட பெண்கள்தான். பாலாமணி இசை பரதம் நாடகம் எனப் பல்துறை விதுஷி. ஏராளமாகச் சம்பாதித்தார். நாடக நிர்வாகியாக சி.எஸ். சாமண்ணா ஐயர் விசுவாசமானவர். கம்பெனி மேனேஜர் கந்தசாமி முதலியார். எம்.கே ராதாவின் தந்தையார். அவருடைய மனோகரா, தாராஷஷாங்கம், டம்பாச்சாரி முதலிய நாடகங்கள் கொடிகட்டிப் பறந்தன.

பாலாமணி நாடகத்திற்காகவே மாயவரத்திலிருந்தும் திருச்சியிலிருந்தும் பாலாமணி ஸ்பெஷல் ரயில் விடப்பட்டது. வசூல் ராணியாக இருந்தார். பாலாமணி 'சாந்து', பாலாமணி வளையல் பாலாமணி புடவை என செல்லமாகப் பெயர் சூட்டி வியாபாரம் செய்தனர். அரண்மனை மாதிரி வீடு. ஐம்பதுபேர், நடிகைகள் வேலையாட்கள் நூற்றுக் கணக்கானோருக்கு தினசரி சாப்பாடு என கல்யாணக் கோலாகலம். தினசரி குளித்துவிட்டு மாடி உப்பரிகையில் பாலாமணி இங்குமங்குமாக நடந்து ஈரத்தலையைக் காயவைத்துக் கொண்டிருக்கும் காட்சியைக் காணவே தெரு நிறையக் கூட்டம் அலைமோதுமாம்.

வெளியில் கிளம்பும்போது முன், பின்னால் நான்கு நான்குபேர் காவல், பட்டுத் துணி திரை எல்லாப்பக்கமும் சூழ நான்கு குதிரைகள் பூட்டிய சாரட்டில் சொகுசாகப் பயணிப்பாராம். சாலையில் ஏகப்பட்ட ரசிகக் கும்பல். களேபரம். நிறையச் சம்பாதித்தார். தருமங்களும் ஏகப்பட்டது செய்தார். நிறையக் கோயில்களுக்கு தானம் வழங்கினார். ஏழைகளுக்கு அள்ளியள்ளிக் கொடுத்திருக்கிறார். தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் மறைவுக்குப் பின் அவரது நாடக சபா நலிவடைய பாலாமணி அம்மாளை நாட அவர் டம்பாச்சாரி விலாசம் என்ற நாடகத்தை நடித்துக் கொடுத்து உதவியதாகச் சொல்வர். சமஸ்கிருத நாடகங்களைப் போடவும் முயற்சி செய்திருக்கிறார். மாண்டலின் வாசிக்கவும் தெரியும். தாரா ஷஷாங்கம் என்ற நாடகம் நடத்தினார். குரு பத்னியைவிரும்பும் சந்திரன் கதை. சாபத்தால் தாரா பூமியில் பிறக்கிறாள்.உதவிக்கு சந்திரன். சந்திரனுக்கு தாரை நிர்வாணமாக எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டிவிட்டால் சாபம் நீங்கும் என்பது சாபவிமோசனம்.

தாரையாக நடித்த பாலாமணி நிர்வாணக் காட்சியில் எப்படி இருப்பார்? நாம் ஓடினோமே ஸில்க் ஸ்மிதா கண்காட்சி பார்க்க தியேட்டருக்கு. அது போல் நம் தாத்தாக்கள் ஓடிக் குவிந்திருக்கிறார்கள் நாடகக் கொட்டகைக்கு. சந்திரன் குனிந்து கொள்ள

தாரை எண்ணெய் தேய்த்து விடவேண்டும். உடைகள் கழன்று விழும். குனிந்து சந்திரன் கிண்ணத்து எண்ணெயில் தாரையின் கண்கொள்ளாக் காட்சியைப் பார்க்கவேண்டும். பாலாமணி எண்ணெய்க் கிண்ணத்தோடு வரும் போது திரைபோட்டுவிடுவார்கள். இதற்கே ஆச்சாரக் கூச்சல் போட்டனர். தாரா ஷஷாங்கத்தைத் தடை செய்ய வேண்டும் என்றனர். பத்துவருடத்திற்கும் பிறகு ஈரோட்டில் ஸ்ரீமான் பார்த்தசாரதி ஐயங்கார் தலைமையில் கூடிய மாநாட்டில்" தாரா ஷஷாங்கம் நாடகத்தைத் தடை செய்தனர். பாலாமணியின் அபாரமான ஈகை குணத்தால் செல்வம் கரைந்து போக மதுரைக்கு இடம்பெயர்ந்து குடிசை வீட்டில் வாழ்ந்த சோகம் பாலாமணி என்ற விதூஷிக்கு நேர்ந்தது. நோய் தாக்கி இறந்துபோக இறுதிச் சடங்கு செய்யக்கூட பணமின்றி சாமண்ணா ஐயர் துண்டேந்தி காலணா அரையணா என்று வசூல் செய்து காரியம் செய்தார்.

# 17. “நான் கலைஞனும் ஆனேன்"

— முனைவர் சிவ இளங்கோ, புதுச்சேரி.

நாடக மேடைகளில் நானும் பிரகாசமாய் ஒளிர்ந்த நாட்களும் உண்டு. பள்ளி ஆண்டு விழாக்களில் மேடை நாடகங்களில் சிறு சிறு வேடங்கள், பின் வானொலி நாடகங்கள் என்றெல்லாம் பங்கு கொண்டு நடித்து, பின் வாலிபப் பருவம் எய்தி, வேலை கிடைத்து, குடும்பத் தலைவனாக ஆகி, வாழ்க்கை 'நாடகத்தில்' சுடர் விட்டுக் கொண்டிருந்தேன்.

அந்தச் சமயத்தில் "புதுச்சேரி விடுதலை வரலாறு" என்னும் நாடகத்தில் என்னை முதன்முதலாக நடிக்க வைத்தவர் முனைவர் அ. கனகராசு அவர்கள். அதற்குப் பயிற்சியும், இயக்கமும் அளித்தவர் முனைவர் வேலு சரவணன். அந்த நாடகத்தில் நான் பிரெஞ்சிந்திய ஆளுநர் வேடத்தில் நடித்தேன். தொடர்ந்து, முனைவர் வேலு சரவணன் இயக்கத்தில், நாடக மேதை ஷேக்ஸ்பியரின் "Tempest" (ஷேக்ஸ்பியரின் நாடகத்தைத் தமிழில் "சூறாவளி" ஆக்கியவர் முனைவர் இந்திரா பார்த்தசாரதி) நாடகத்தில் ப்ரோஸ்புரோ கதாபாத்திரத்திலும், "டாக்டர் அம்பேத்கர்" நாடகத்தில் கட்டியக்காரன் கதாபாத்திரத்திலும்

'பிய்த்து' உதறியதாகப் பிறர் கூறித் தெரிந்து கொண்டேன்.



கலைமாமணி எம். எஸ். ராஜா அவர்களின் இயக்கத்தில், கவிஞர் புதுவைச் சிவம் இயற்றிய "வீரநந்தன்", "அமுதவல்லி" ஆகிய நாடகங்களில் சமூக சேவகர் ஆகவும், நல்லதம்பி ஆகவும் நடித்துப் பாராட்டப் பெற்றேன். கலைமாமணி புதுவை முழக்கம் தங்கராசு அவர்களின் இயக்கத்தில் "கொடி காத்த குமரன்" என்னும் நாடகத்தில் பிரிட்டிஷ் காவல் அதிகாரியாகவும்,

என்னுடைய இயக்கத்தில், கவிஞர் புதுவைச் சிவம் இயற்றிய "காந்திமதி அல்லது கல்வியின் மேன்மை" என்னும் நாடகத்தில் பணக்காரப் பிரபுவாகவும், "ஔவையார்" என்னும் நாடகத்தில் சோழ மன்னனாகவும், "மகாகவி பாரதியார்" நாடகத்தில் பொன்னு முருகேசம் பிள்ளையாகவும், இன்னும் பலப்பல கதாபாத்திரங்களில், மேடை நாடகங்களில் நடிக்க வாய்ப்புகள் கிடைத்த போதெல்லாம் இயன்ற வரை அனுபவித்து நடித்து இன்புற்று இருக்கிறேன்.

பின்னர், குறும்படக் காலங்களில் பல குறும்படங்களில் நடித்து வந்தேன். அவையெல்லாம் வெளிவந்தனவா என்பது குறித்து இதுவரையிலும் தெரியாது.

இதுவரையில் நடித்ததில், "கவிஞர் புதுவைச் சிவம்" திரைப்படத்தில், தந்தை பெரியாராக நடித்த அனுபவம் பெரும் சவாலாக அமைந்தது. அதற்காகத் தலையின் முன் பகுதியை மொட்டை அடிக்க வேண்டி இருந்தது. நான் சிறுவயதில் பெரியாரை எப்படி எல்லாம் கண்டறிந்து இருந்தேனோ, அதைப் போலவே நடிக்க வேண்டும் என்ற ஆவலில், இயன்ற அளவில் பெரியார் பேசுவது போலப் பேசி நடித்து, அத் திரைப்படக் குழுவினரின் பாராட்டுகளைப் பெற்றது எல்லாம் பசுமையான நினைவுகள்.

# 18. கடலுக்கு அப்பால் - நூல் மதிப்புரை

— முனைவர் க. சுபாஷிணி

எழுத்தாளர் ப.சிங்காரத்தின் கடலுக்கு அப்பால் என்ற நாவலை அண்மையில் ஒரு நூல் திறனாய்வு நிகழ்ச்சிக்காக வாசிக்க நேர்ந்தது. வாசித்து முடித்த பின்னரும் மனதில் பல நிகழ்ச்சிகள்.. இந்த நாவல் தொடர்பானவை.. எண்ண ஓட்டங்களாக எழுந்து கொண்டிருக்கின்றன. கதைக்களம் 1940 காலகட்டம்..அன்றைய மலாயா.




1941 இறுதி காலகட்டத்தில் ஜப்பானியர்கள் கிழக்காசிய நாடுகளில் தங்கள் தடம் பதித்து சீனாவில் இருந்து பர்மா வரை... தெற்கே மலாயா சிங்கை எனப் பல நாடுகளையும் தங்கள் ஆளுமைக்குள் கொண்டு வரத் தொடங்கிய காலகட்டம்.

1942 ஆம் ஆண்டு காலவாக்கில் மலாயா முழுவதுமாக ஜப்பானியர் கைவசம் வந்துவிட, இக்காலகட்டத்தில் தாய்லாந்து பகுதியில் இருந்து பர்மா... பர்மாவில் இருந்து இந்தியாவை நில வழியாகச் சென்றடைந்து அதனையும் கைப்பற்ற வேண்டும் என்ற பேராசையுடன் ஜப்பானியப் படைகள் சயாம்-பர்மா மரண ரயில்வே பாதை அமைக்கும் திட்டமும் தொடங்கிய காலமாகும்.

இக்காலகட்டத்தில் அதற்கு முன்பிருந்து தமிழ்நாட்டிலிருந்து லேவாதேவி பணப் பரிவர்த்தனை செய்யும் தொழில்.. வியாபாரிகளுக்குப் பணம் வட்டிக்குக் கொடுக்கும் தொழில் செய்யும் வயிரவன் பிள்ளை குடும்பத்தார் பற்றியும் அவர்கள் பினாங்கு மாநிலத்திற்கு வந்து அங்கு சிறப்பாகத் தங்கள் தொழிலை நடத்திக் கொண்டிருக்கும் போது அவர்களது "சாதி சனங்களையும்" வரவழைத்து அவர்களுக்குத் தொழில்முறை பயிற்சி அளித்து அவர்களும் தொழில் செய்வது என்பது போன்ற பல செய்திகள் இந்த நாவலில் இடம்பெறுகின்றன.

அப்படி வயிரவன் பிள்ளையால் கொண்டுவரப்படுபவன் தான் செல்லையா. வயிரவன் பிள்ளைக்கு வடிவேல் என்று ஒரு மகன். அவனைப் படிக்க வைக்க வேண்டும் என மலாயா கொண்டு வருகின்றார். படித்துக் கொண்டிருக்கும் பிள்ளை ஜப்பான் பிரிட்டிஷ்

போரின் போது கொல்லப்படுகின்றான். எஞ்சி இருப்பவள் மரகதம் என்ற ஒரு பெண் மகள். தன் மகள் மரகதத்தை செல்லையாவுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும்.. தன் தொழிலையும் வழங்க வேண்டும் என வயிரவன் பிள்ளை கற்பனைக் கோட்டையில் இருக்கின்றார்.

ஆனால் செல்லையா இந்தக் காலகட்டத்தில் இந்தியாவிற்கும் ஒட்டு மொத்தத் தமிழினத்திற்கும் விடுதலை வேண்டும் என நினைத்து சுபாஷ் சந்திரபோஸ் அமைக்கின்ற இந்தியப் படையில் இணைகின்றான். படிப்படியாக வளர்ந்து அந்த ராணுவ அமைப்பில் பெரிய பதவிக்கு ஓராண்டிற்குள் வந்து விடுகின்றான். இது வயிரவன் பிள்ளைக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

1945ஆம் ஆண்டு சுபாஷ் சந்திர போஸ் விமான விபத்தில் கொல்லப்படுவது.. அதற்குப் பிறகு ஜப்பானியப் படைகள் வீழ்ச்சி என படிப்படியாக செல்லையா இந்திய ராணுவத்திலிருந்து வெளிவந்து இயல்பான குடும்பம், தொழில் எனத் தனது வாழ்க்கையை மாற்றி பயணத்தைத் தொடர நினைக்கின்றான். ஆனால் வயிரவன் பிள்ளைக்கு செல்லையாவிற்கு மரகதத்தைத் திருமணம் செய்து வைக்கத் துளியும் விருப்பமில்லை.

மரகதமும் செல்லையாவும் காதலிக்கின்றார்கள். ஆனால் வயிரவன் பிள்ளை செல்லையாவிற்குப் பெண்ணை கொடுப்பதில்லை என உறுதியாக முடிவு செய்து தனது கடையிலேயே வேலை செய்யும் இன்னொரு ஆளுக்குத் திருமணம் செய்து வைக்க முடிவு செய்து விடுகிறார். பக்குவமாக செல்லையாவிற்கு இந்தச் செய்தியைச் சொன்னாலும் இறுதியில் செல்லையா எதிர்த்து குரல் கொடுக்கின்றான். ஆனால் மரகதத்தின் கண்ணீரும் காமாட்சியம்மாள் கண்ணீரும் செல்லையாவின் உறுதியும் வயிரவன் பிள்ளை முன்னால் எடுபடவில்லை.

குடும்பத்தாரையும் தனது கடையிலேயே வேலை செய்யும் மாப்பிள்ளையும் அழைத்துக் கொண்டு இந்தியாவுக்குச் செல்ல ஆயத்தமாகிறார் வயிரவன் பிள்ளை. செல்லையா சிங்கப்பூருக்குப் புறப்படுகிறான். இதுதான் கதையின் சாரம்.

நாவலில் ஆங்காங்கே மலாய் சொற்கள் இடம்பெறுகின்றன. பினாங்கில் எனக்கு நன்கு பரிச்சயமான டத்தோ கிராமட் சாலையில் அவர்களது வீடு இருப்பது போன்று நூலாசிரியர் குறிப்பிடுவதும் ரிக்க்ஷாகாரர்களிடம் மலாய் மொழியில் பேசுவது போன்று சொல்லாடல் உரையாடல்கள் இடம் பெறுவதும் எனக்கு மலேசியாவில் இருந்து கொண்டு ஒரு காட்சியை

நேரில் பார்ப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தியது.

செட்டி ஸ்ட்ரீட் என்று சொல்லப்படுகின்ற மார்க்கெட் ஸ்ட்ரீட், சூலியா ஸ்ட்ரீட் போன்ற சாலைகளில் செட்டியார்களின் கடைகள் பற்றிய விவரங்கள்... பணம் வட்டிக்குக் கொடுக்கும் தொழில் பற்றிய விரிவான விளக்கங்கள் போன்றவை இன்றும் அங்குள்ள லிட்டில் இந்தியாவைக் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றன.

இரண்டாம் உலகப் போர் என்றால் ஜெர்மானியர்களும் பிரிட்டிஷ் அமெரிக்கா ஃபிரான்ஸ் கூட்டுப் படைகளும் தான் என நினைக்கும் நமக்கு மீண்டும் ஒருமுறை ஜப்பானியர்களின் இரண்டாம் உலகப் போர் அட்டூழியங்கள் இந்த நாவலின் வழி வரலாற்றுப் பதிவாகவும் அமைகின்றது.

எழுத்தாளர் ப. சிங்காரம் இதே காலகட்டத்தில் இந்தோனேசியாவின் மேடான் நகருக்குத் துணி வணிகம் செய்வதற்காகச் சென்றவர். அங்கே பெண் பார்த்து திருமணம் செய்து கொண்டு குடும்பம் நடத்தி வந்தவர். பிரசவ நேரத்தில் குழந்தையும் மனைவியும் இறந்து போகவே அதற்குப் பின்னர் இரண்டாம் உலகப் போர் முடிந்து தமிழ்நாடு திரும்பினார். ஆனால் அவர் பலமுறை முயற்சி செய்தும் மீண்டும் மலாயா செல்ல முடியாத சூழல் நிகழ்ந்தது. இந்தியச்

சுதந்திரத்திற்கு முன்னர் மிக இயல்பாகத் தமிழ்நாட்டிலிருந்து மலாயா சென்று வந்து கொண்டிருந்தனர் பல தமிழ் வணிகர்கள். அந்தச் சூழல் சுதந்திரத்திற்குப் பின் மாறியது. பல அரசாங்க ரீதியான கட்டுப்பாடுகள் இந்தப் பயணத்திற்கு முட்டுக்கட்டையாக மாறின. நூலாசிரியர் பின்னர் தமிழ்நாட்டில் உள்ளூர் பத்திரிக்கையில் பணியாற்றி ஓய்வு பெற்றுக் காலமானார்.

இரண்டு நாவல்களை மட்டுமே எழுதி இருந்தாலும் ப. சிங்காரத்தின் இரண்டு நாவல்களுமே வரலாற்றுப் பொக்கிஷங்கள். அன்றைய மலாயாவின் வரலாற்றை அறிந்து கொள்ள இந்த நூல்கள் வாசகர்களுக்கு மிகச்சிறந்த ஆவணங்களாகவும் திகழ்கின்றன. வாங்கி வாசிக்கத் தவறாதீர்கள்.

இந்த நூல் காலச்சுவடு பதிப்பக வெளியீடாக வந்துள்ளது.

# 19. வாழ்ந்தவர்களுக்குப் பூவுண்டு நீருண்டு

— முனைவர். அரங்கமல்லிகா

நீர்வழிப்படூஉம் – தேவிபாரதி - நூல் மதிப்புரை

2023 ஆம் ஆண்டு சாகித்திய அகாடமி விருது பெற்ற "நீர்வழிப்படூஉம்" பிரதியை வாசிக்க வேண்டும் என்ற முனைப்பில் வாங்கினேன். சாகித்திய அகாடமி அறிவிப்பிற்கு முன்பாகவே அந்தப் பிரதியின் ஆசிரியர் தேவிபாரதிக்கு வாழ்த்துகள் முகநூலில் வந்து குவிந்தன. மருத்துவரைப் பார்க்க மகிழுந்தில் பயணித்த போது, அதை வாசிக்கத் தொடங்கினேன். 20 பக்கம் படித்திருப்பேன், மருத்துவமனை வந்துவிட்டது.



மருத்துவரைப் பார்த்து நலம் விசாரித்தேன். அவர்கள் நேரிடையாக, ”மல்லிகா! நீர்வழிப்படூஉம் நாவல் படிச்சிங்களா? அவரைப் பற்றிய பதிவுகள் வருகின்றனவே! எனக் கேட்டார். இப்போதுதான் படிக்கத்தொடங்கினேன். உங்களுக்குப் பிரதி வேண்டுமென்றால் நான் தருகிறேன், படியுங்கள்” எனச்சொல்லி நூலைக் கொடுத்துவிட்டு வந்துவிட்டேன்.

ஆனால் காருமாமாவின் மரணத்தில் தொடங்கிய அந்தக் கதையை என்னால் வாசிக்காமல் இருக்கமுடியாது என உணர்ந்தேன். மீண்டும் புத்தகத் திருவிழாவில் உதயகண்ணனிடமிருந்து நூலைப் பெற்றேன். ஆனாலும் பணிச்சூழல் நெருக்கடி.நேற்றுதான் எடுத்தேன். இன்று அந்தப் பிரதியைப் படித்து முடித்ததும் மனசு கனத்தது.

இந்தச் சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட நாவிதர் சமூகம் கடையனுக்கும் கடையனாய் வாழும் அவலம் வரிக்கு வரி, காட்சிக்குக் காட்சிப் பதிவு செய்திருக்கும் எழுத்தாளர் தேவிபாரதிக்கு எப்படி வாழ்த்து சொல்வது என்று தெரியவில்லை. ஏனென்றால் வாழ்த்துகள் என்ற சொல்லில் அவர் எழுதிய நாவிதர் வாழ்வைக் கடந்து விடமுடியாது.

கதாபாத்திரங்களின் எண்ணிக்கையே அந்தச் சமூகத்தின் தொகுப்பாகப் பார்க்கிறேன். ஒரு

கதாபாத்திரமாவது கொஞ்சம் வளமைக் குறியீட்டோடு படைக்கப்பட்டிருக்கும் என்று பார்த்தால் எங்கும் அது பதிவாகவில்லை. இந்த அவலம், மனதைப் பிசைகிறது.

சத்யஜித் ரே வின் "பதேர் பாஞ்சாலி" படக்காட்சிபோல வறுமை படம் பிடிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சமுதாயமும் சில உலகளாவிய விழுமியங்களால் மனித வாழ்வு நெறிப்படுத்தப்படுகின்றது. சில சூழல்கள் விவரிக்க முடியாத அளவிற்கு ஆழமான வாழ்வியல் அனுபவங்களால் பின்னப்பட்டது. முறையாகக் கல்வி பயின்று பெரும் அறிவைக் காட்டிலும் அன்றாட நடைமுறை வாழ்விலும், சிக்கல்களிலும், மனிதர்களைப் புரிந்துகொள்வதிலும், விட்டு விலகுவதிலும், அறியாமையில் வாழ்வதிலும், அனுபவங்களே வெற்றியடைகின்றன. அந்த வகையில் பிரதியின் ஆசிரியர் தன் வாழ்வினூடான படிமங்களைப் பல்வேறு மாந்தர்களின் பண்புகளிடையே அந்த அந்தச் சூழலின் வட்டார மொழிக்குள் இணைத்து இந்தப் பிரதியை ஒரு பண்பாட்டுச் சேலையின் நூலாகத் தருகிறார்.

நாவிதரின் முந்தைய தலைமுறைக்கும் இன்றைய தலைமுறைக்குமிடையே எவ்வித முன்னேற்றமும் இல்லை. ஆனால், பண்ணைக்காரர்களுக்கு அடிப்படை வேலைகள் அனைத்தும் நாவிதர் உதவியின்றி

நடக்கவாய்ப்பில்லை என்பதைப் பிரதி பல இடங்களில் பதிவுசெய்திருக்கிறது.

கி.ராவைப் போல, தேவிபாரதி கொங்கு வட்டார வழக்குச் சொற்களை மிகக் கவனமாகவும் கலைத்துவம் சிதறாமலும் கதையினூடே சொல்வதன் மூலமாக அவர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

கதை சொல்லி, ‘காருமாமா’ அதாவது பிரதியின் கதாநாயகனின் தங்கை மகன் ராசா. காருமாமாவின் மனைவி ராசம்மா தன் குழந்தைகளுடன் அவ்வூரில் வாழ்ந்து வந்த செட்டி ஒருவரோடு சென்றுவிடுகிறார். காருமாமாவின் மனதை இந்தச் சம்பவம் செல்லரிப்பது போல அரிக்கத் தொடங்கியது. காக்கைவலிப்பு நோய்க்கு ஆட்பட்டதும் அவர் மனத்துயரின் வெளிப்பாடாகப் பார்க்க வேண்டியிருக்கிறது.

நாவிதர் தொழிலை மிக நேர்த்தியான முறையில் காருமாமா செய்வதைப் பண்ணையாட்கள் பேசுவதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

அவருடைய இறப்பு, அவரைப் பிரிந்து சென்ற ராசம்மா, மகன், மகள் எல்லோரையும் சேர்த்துவிடுகிறது.

பெரியம்மா, காருமாமாவின் அக்கா, கதையின் சரடை இழுத்துச் செல்பவராக இருக்கிறார். ராசம்மா காருமாமாவை விட்டுப் பிரிந்துபோன கோபத்தை, எரிச்சலை, "தாலியறுக்க வந்துருக்கறாளாமா? தாலியறுக்க ஆரு கட்டுன தாலிய அறுக்கப்போறாளாமா அவொ? எம் பொறந்தவங்கட்டுன தாலியா, இல்ல அந்தச் செட்டி கட்டுன தாலியா? இருக்கட்டு நல்லாக் கேட்டுடறனா இல்லையானு பாரு" என்றவளின் விரிந்த கண்களில் சிலிர்த்து நின்ற மூர்க்கத்தைக் கண்டு நான் திகைத்துப்போனேன். என ராசா சொல்வதிலிருந்து உணரலாம்.

அதேபோல தான் இழந்த வாழ்வைத் தாயம் உருட்டுவதன் மூலம் மூர்க்கமாக உருட்டினாள் ராசம்மா அத்தை என்று சொல்லும் இடம் மிகுந்த கவனத்திற்குரியது.

நீர் எப்படித் தான் போகும் திசையில் போகிறதோ நாவிதர்கள் தங்கள் வாழ்வைத் தக்கவைத்துக்கொள்ள முயன்றிருக்கிறார்கள். ஆனால் எந்த இடத்திலும் நீரின் பாய்ச்சலால் செழிப்படையும் பயிரைப் போல நாவிதர் வாழ்வு இல்லை என்ற யதார்த்தம் கனமானது.

நாவலைப் படித்து முடித்ததும் உட்காரப் பிடிக்காமல் வீட்டிலிருந்து புறப்பட்டுச் சாலையில் நடக்கத் தொடங்கினேன். வாகனங்களின் இரைச்சலைப் போல

காருமாமாவின் வாழ்க்கை அவலம் பேரிரைச்சலாகத் தொடர்ந்தது.

வறுமையும், வறுமையினால் வாடிய வாழ்க்கையும், ஆரோக்கிய வாழ்வு இல்லாது நாற்றமடிக்கும் சூழலும் நாவிதர்களின் வாழ்க்கைக்குறியீடு.

ஓரிடத்தில் கூட, நாவலாசிரியர் கவனம் சிதறாமல் கதையை நகர்த்தியிருக்கிறார்.

வறுமை மிகுந்த காட்சிப் பதிவுகள் இரக்கத்தைத் தானாகப் பெருக்கெடுக்கச் செய்கின்றன.

என்ன வாழ்க்கை இது? என்ற துயரம் மிகு சலிப்பு ஊடுருவுகிறது.

வாழ்க்கையை வாழ்ந்துதான் தீர்க்கவேண்டும். வறுமையும், கனத்த இதயமும் கொண்ட காருமாமா, சில இடங்களில் மட்டுமே பேசியிருக்கிறார். ஆனால் கதைமுழுதும் பேசப்படுகிறார். புண்ணியம் செய்தவர்களுக்குப் பூவுண்டு, நீருண்டு என்ற பழமொழி நன்றாக வாழ்ந்தவர்கள் இறப்பில் மழை பெய்தலை நினைவுபடுத்துகிறது.

சிலரின் அமைதி, பல நேரங்களில் அழகான நினைவுகளைத் தந்துவிடும். சிலரின் இருப்பு வாழ்க்கையை வாழ்ந்து பார்க்கச்சொல்லும்.

எத்தகைய இடர் வந்தாலும் காருமாமா போலக் கடந்து போகக் கற்றுக்கொடுக்கும்.

அதைத்தான் நாவலாசிரியர் தேவிபாரதி சொல்கிறார். சாகித்திய அகாடமி தன் பழைய கரைகளை, தேவிபாரதிக்கு விருது தந்து கழுவிக்கொண்டிருக்கிறது.

முனைவர். அரங்கமல்லிகா,
பேராசிரியர் (ப.நி),
தமிழ்த்துறைத் தலைவர்,
எத்திராஜ் மகளிர் கல்லூரி,
சென்னை.

# 20. திணைக்கொள்கை உருவாக்கமும் சடங்கியல் தொன்மவியல் மூலங்களும் – நூல் அறிமுகம்

— நிகோலாய் கோர்டிச்சுக்

திணைக்கொள்கை உருவாக்கமும் சடங்கியல் தொன்மவியல் மூலங்களும்
(பண்டைத்தமிழ் இலக்கியங்களின் சடங்கியல், தொன்மவியல் மூலங்கள்)
Tamil Translation of Ritual and Mythological Source of Early Tamil Poetry

அலெக்சாந்தர் எம்.துபியான்ஸ்கி
(தமிழில் - பு.கமலக்கண்ணன்)
ISBN: 978-81-2344-599-1
விலை ₹ 400/-
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

Finally, my teacher late Prof. Alexander Dubiansky's opus magnum "Ritual and Mythological Sources of the Early Tamil Poetry" has been published in Tamil translation - 30+ years after its original publication in Russian, and 20+ years after its improved and expanded English edition appeared. It was a long-time dream of Alexander that his book would be translated into Tamil one day and would find its way to the Tamil-speaking audience in India and other countries. And finally this day has come - thanks to outstanding efforts of its Tamil translator P. Kamalakannan. The book is published with my short preface attempting to contextualize Prof. Dubiansky's scholarly work for its Indian readers.

— Nikolay Gordiychuk

# 21. தமிழர் புலப்பெயர்வு - நூல் மதிப்புரை

— அருள் மெர்வின்




சங்க காலத்திலிருந்தே தமிழர்கள் புலம் பெயர்ந்திருக்கிறார்கள். அதன்பின் புலத்திலிருந்து பெயர்த்தும் அனுப்பப் பட்டிருக்கிறார்கள். இந்த புலப்பெயர்வுகள் ஏன், எதனால், எதற்கு, எப்படி, எவ்வகைகளில், அதனால் என்ன ஆனது, அப்படி ஆனது இப்போது என்ன ஆனது என்று பேட்ஸ்மேன், பௌலர், ஃபீல்டர், விக்கட் கீப்பர், கோச், கமன்டேட்டர் என்று பல தளங்களில் நின்று முனைவர் க. சுபாஷிணி

இருபத்தைந்து வருடமாக ஆராய்ச்சி செய்து எழுதியிருக்கும் புத்தகம், 'தமிழர் புலப்பெயர்வு'. நான் முன்பே ஒருமுறை எழுதியிருந்தேன். யாராவது செவ்வாய்க் கிரகத்துக்குத் தமிழர்கள் சென்றிருக்கிறார்கள் என்று சொன்னால் ஒரு ராக்கெட்டைப் பிடித்துச் சென்று, அங்குள்ள

கல்வெட்டுகளை வாசித்து, செவ்வாய்க் கிரகவாசிகளைப் பேட்டி கண்டு, அவர்களுக்கு சட்னிக்குத் தேங்காய் எங்கிருந்து கிடைக்கிறது என்பது முதல் திருக்குறள் படித்திருக்கிறார்களா என்பது வரை எல்லாத் தகவல்களையும் திரட்டி ஆவணப்படுத்தி தமிழ்கூறும் நல்லுலகுக்குப் பரிசளித்துவிடுவார். தமிழர்கள் பற்றிய சிந்தனையைச் சிலிர்க்க வைக்கும் அவரது ஆராய்ச்சிகளின் முக்கியமான தொகுப்பு இந்தப் புத்தகம்.

ஒரு சிறிய தகவல் எத்தனை பரிமாணங்கள் இந்தப் புத்தகத்தில் கொண்டிருக்கிறது என்பதற்கு ஓர் உதாரணம். நியூஸிலாந்தில் பழங்காலத்தைச் சேர்ந்த ஒரு சிறிய வெண்கல மணி (பெல்) கண்டுபிடிக்கப்படுகிறது. எங்கிருந்து வந்த மணி? ஏதோ ஒரு கப்பலில் உபயோகிக்கப்பட்ட மணி. ஏன் இந்த மணியைப்பற்றிப் பேசுகிறோம்? அந்த மணியின் மேல் தமிழில் எழுதப்பட்டிருக்கிறது. எப்படி இந்த மணியைக் கண்டுபிடித்தார்கள்? நியூஸிலாந்திலுள்ள ஒரு பூர்வகுடி அம்மணி அந்த மணியைவைத்து உருளைக்கிழங்குகளை அவித்துக் கொண்டிருந்திருக்கிறார். 1896-இல் அங்கு சென்ற ஒரு மிஷனரி பாதிரியார் அந்த மணியைப் பற்றிய தகவலை உலகுக்கு வெளிப்படுத்தியிருக்கிறார். அந்த மணி கண்டுபிடிக்கப்பட்ட அந்த நியூஸிலாந்து ஊரின் பெயர் 'வாங்கறை'. தமிழ்ப்பெயர் போலவே உள்ளது. இப்படி ஒரு மணி கிடைத்ததால்

நியூஸிலாந்து வரை தமிழ் சென்றது தெரியவருகிறது. ஒருவேளை உருளைக்கிழங்குகளோடு அந்த மணியும் காணாமல் போயிருந்தால் இப்படி ஒரு தகவலே உலகத்துக்குத் தெரிந்திருக்காது. நியூஸிலாந்தின் மணி போல தமிழர்கள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எவ்வளவு இன்னும் தெரியாமல் உலகெங்கும் இருக்கலாம் என்ற சுயபரிதாபம் வருகிறது.

நியூஸிலாந்து மணியின் கதை அதோடு முடியவில்லை. அதில் எழுதப்பட்டிருந்த தமிழ் வார்த்தைகள், 'முகைய்யதின் வக்குசு உடைய கப்பல் உடைய மணி'. இந்த ஒரு வரி தமிழக இஸ்லாமியர்களின் கடல்வாணிகம் பற்றிய வரலாற்றுப் பக்கங்களுக்குள் நம்மைக் கொண்டுசெல்கிறது. பாட்ஷா பாய் போல இந்த முகைய்யதின் பாயிடம் நீங்கள் தமிழ்நாட்டில் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்று கேட்க வைக்கிறது.

இந்தப் புத்தகத்தின் பலமும், பலவீனமும் ஒன்றுதான். என்சைக்ளோபீடியா போல வரிக்கு வரி ஏதாவது ஒரு தகவல். அதுவும் அதிகம் பேசப்படாத தமிழர்களின் புலப்பெயர்வு பற்றிய அரிய, அறியத் தவறிய தகவல்கள். பல பாகங்களாக எழுதப்பட வேண்டிய விஷயங்கள் 350+ பக்கங்களுக்குள் மூச்சுத்திணற அடைத்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஏகப்பட்ட ஆராய்ச்சிப் புத்தகங்கள் மேற்கோள்

காட்டப்பட்டிருக்கின்றன. இப்படி ஆராய்ச்சிகளெல்லாம் ஏற்கனவே செய்து புத்தகங்கள் வந்திருக்கின்றனவா என்று இந்தப் புத்தகத்தின் மூலமாகத்தான் தெரியவருகிறது.

கிரேக்க, ரோமானிய, அரேபிய வியாபாரத் தொடர்புகள், ஓமான், எகிப்து நாடுகளில் கண்டெடுக்கப்பட்ட தமிழ் எழுத்து பொறிக்கப்பட்ட பானைகள், சீனா, தாய்லாந்து, இந்தோனேசியா என்று தெற்காசியாவெங்கும் உள்ள தமிழ்க் கல்வெட்டுகள், பண்டைய துறைமுகங்கள், தமிழகப் பௌத்தப் பயணங்கள், தமிழ் மன்னர்களின் கடல்கடந்த படையெடுப்புகள், தமிழர்களின் கடல் வியாபார மேலாண்மை, உலகெங்கும் சென்ற தமிழ் இலக்கியங்கள் என்று அமர்க்களமாகப் பெருமை பொங்க ஆரம்பித்துப் பயணிக்கும் நம் புலப்பெயர் வரலாறு இடைவேளைக்குப்பின் அடிமை வியாபாரம், ஒப்பந்தக்கூலிகள், அதில் தரகர் வேலை செய்த நம் சுரண்டல் முதலாளிகள், இலங்கைப்போர், அகதிகள், பர்மா பிரச்சனை என்று சிக்கிச் சின்னாபின்னமாகிறது. காற்றில் விதிக்குரங்கு கிழித்தெறிந்த பஞ்சுத் தலையணை போல (ஜெயபாலன் கவிதை வரி) இன்று உலகெங்கும் சிதறிக்கிடக்கிறார்கள் தமிழர்கள்.

புலப்பெயர்வு என்பது வீட்டிலிருந்து காரை எடுத்துக் கொண்டு இளையராஜா பாட்டு கேட்டுக்கொண்டு அலுவலகம் செல்வதல்ல.

மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் செல்வது. அது மகத்துவமும் அவலமும் கலந்த நிகழ்வு. தமிழர்கள் புலப்பெயர்வு என்றால் அவர்களுக்கான புலம் எது போன்ற கேள்விகள் தவிர்க்க முடியாதவை.

கடந்த ஐம்பது, நூறு ஆண்டுகளில் தமிழர்களின் புலப்பெயர் வரலாற்றை ஓரளவு மீட்டெடுத்து, தமிழ்கூறும் உலகத்தைத் தட்டுத்தடுமாறி ஒருங்கிணைத்து, உலகத்தமிழ் மாநாடுகள் நடத்தி, தமிழ்ச்சங்கங்கள், அறக்கட்டளைகள் நிறுவி, திருவள்ளுவருக்குச் சிலைகள் வைத்து ஆற்றாமை அகற்றி வருகிறோம். இப்படித் தமிழர்களின் வரலாற்றை மீட்டெடுப்பவர்கள், ஒருங்கிணைப்பவர்கள் ஒன்று உலகெங்கும் உள்ள தமிழர்களாக இருக்கிறார்கள் அல்லது வெளிநாட்டவர்களாக இருக்கிறார்கள். தமிழ்நாட்டுக்கு வடக்கே வாழும் யாரிடமும் இந்த அக்கறை பெரிதாகத் தென்படவில்லை.

தமிழர்களின் வரலாற்றில் ஆர்வமுள்ள எல்லோரும் வாசிக்கவேண்டிய புத்தகம் ‘தமிழர் புலப்பெயர்வு’. வாசிக்காதவர்கள் தமிழர்களின் வரலாற்றைப் பற்றிப் பேசாமல் இருப்பது நலம். ஏனென்றால் நீங்கள் எப்பேர்ப்பட்ட அப்பாடக்கராக இருந்தாலும் உங்களுக்குத் தெரியாத ஒருசில முக்கிய விஷயங்களாவது இந்தப் புத்தகத்தில் உண்டு. அவற்றை

விட்டுவிட்டு தமிழர்களின் வரலாற்றைப்பற்றிப் பேசி அரத்தமில்லை.

தமிழர் புலப்பெயர்வு:
உலகளாவிய பயணங்கள், குடியேற்றங்கள், வரலாறு
ஆசிரியர்: க. சுபாஷிணி
பதிப்பகம்: தமிழ் மரபு அறக்கட்டளை, சென்னை
பக்கம்: 370
நூலைப் பெற :
https://www.commonfolks.in/books/d/tamizhar-pulappeyarvu

# 22. தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

— ஜனவரி 1, 2024 — மார்ச் 31, 2024 நிகழ்வுகள் —

## சிறப்பு நிகழ்ச்சிகள்

பேராசிரியர் பாண்டியராஜா அவர்களுக்கு சங்கச்செம்மல் விருது




சங்கத் தமிழ்ப் பாடல்களை எளிய முறையில் மக்களிடம் கொண்டு சேர்ப்பிப்பதைத் தனது வாழ்நாள் கடமையாகக் கொண்டு பேராசிரியர் முனைவர் ப. பாண்டியராஜா அவர்கள் அயராது உழைத்து சங்கத் தமிழ்ப் பாடல்களுக்குத் தொடரடைவுகளையும், அருஞ்சொற் களஞ்சியத்தையும், கட்டுரைகளையும்,

நூல்களையும் உருவாக்கி தமிழ் மக்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் உதவும் வகையில் வழங்கியுள்ளார்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு பேராசிரியர் பாண்டியராஜா அவர்களது சங்கத்தமிழ்ப் படைப்புகளை இணையம் வழி பாதுகாக்கும் ஒரு திட்டமாக “சங்கம்பீடியா” தளத்தை உருவாக்கியுள்ளதோடு தமிழுக்குப் பெரும் பங்காற்றி இருக்கும் பேராசிரியர் முனைவர் ப. பாண்டியராஜா அவர்களுக்கு ஜனவரி 22, 2024 அன்று நடைபெற்ற பாராட்டு விழாவில் “சங்கச்செம்மல்” விருது வழங்கி மதிப்பு செய்ததில் பெருமிதம் அடைகிறோம்.





# தமிழ் மரபு அறக்கட்டளை

பன்னாட்டு அமைப்பு



# ‘சங்கச் செம்மல்’

## பேராசிரியர் ப. பாண்டியராஜா

சங்கப் பாடல்களை எளிய முறையில் மக்களிடம் கொண்டு சேர்ப்பிப்பதைத் தமது வாழ்நாள் கடமையாகக் கொண்டு அயராது உழைத்து பேராசிரியர் ப. பாண்டியராஜா அவர்கள் சங்கப் பாடல்களுக்குத் தொடரடைவுகளையும் அருஞ்சொற்களஞ்சியத்தையும் கட்டுரைகளையும் நூல்களையும் உருவாக்கித் தமிழ் மக்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் வழங்கியுள்ளார்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு பேராசிரியரது படைப்புகளை இணையம்வழி பாதுகாக்கும் ஒரு திட்டமாகச் 'சங்கம்பீடியா' தளத்தை உருவாக்கியுள்ளதோடு தமிழுக்குப் பெரும் பங்காற்றியிருக்கும் பேராசிரியர் முனைவர் ப. பாண்டியராஜா அவர்களுக்கு ஜனவரி 22, 2024 அன்று நடைபெற்ற பாராட்டுவிழாவில் சங்கச் செம்மல் விருது வழங்கி மதிப்பு செய்வதில் பெருமை கொள்கிறது.



22 -01- 2024 | சென்னை

முனைவர் க.சுபாஷிணி
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை
பன்னாட்டு அமைப்பு, ஜெர்மனி



சங்கத்தமிழை எல்லோருக்கும் கொண்டு சேர்க்கும் தன் முயற்சியை இரவு பகலாக உழைத்து தமிழ்ச் சமூகத்துக்கு வழங்கிய பேராசிரியர் பாண்டியராஜா அவர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு "சங்கச்செம்மல்" விருது வழங்கி சிறப்பித்தோம். இந்தச் சிறப்பு வாய்ந்த விருதினை தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித்துறை மற்றும் செய்தித்துறை அமைச்சர் மு.பெ. சாமிநாதன் அவர்கள் வழங்க அவரோடு நாடாளுமன்ற உறுப்பினர் எம் எம் அப்துல்லா அவர்கள் நூல்களை வெளியிட்டு சிறப்புரை வழங்க அவர்களோடு தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ஔவை அருள் அவர்கள் வாழ்த்துரை வழங்க..
நேற்றைய நிகழ்ச்சி மனநிறைவளிக்கும் ஒரு நிகழ்ச்சியாக அமைந்தது.

நிகழ்ச்சியின் காணொளிகள்:

1. விருது வழங்கும் விழா [22 ஜனவரி 2024]:
https://youtu.be/Q0jB3hvtvII

2. விருது விழா: முழுநீள விழாக் காணொளி
https://youtu.be/Qpxy0VvOm2s

3. திரு ஆர் பாலகிருஷ்ணன் இஆப அவர்களின் வாழ்த்துரை
https://youtu.be/-zUxwM745ZM

4. அறிமுகவுரை முனைவர் தேமொழி
https://youtu.be/tFyubv0MeeE

5. ஊடக செய்தியில் விருதுவிழா செய்தி . . .
https://www.youtube.com/watch?v=H63qH0RI3Rg

பேராசிரியர் பாண்டியராஜா அவர்களின் 3 சங்கத் தமிழ் நூல்கள் வெளியீடு

களம் கண்ட மகளிர் — உலக மகளிர் நாள் சிறப்பு நிகழ்ச்சி

களம் கண்ட மகளிர்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு வையத் தலைமை கொள் பிரிவின் இணையவழி உலக மகளிர் நாள் சிறப்பு நிகழ்ச்சி
திசைக்கூடல் – 352 [மார்ச் 09, 2024]
https://youtu.be/q72sO-3Ki14

# சிறப்புக் கருத்தரங்க நிகழ்ச்சிகள், பயிலரங்கங்கள்



கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் பயிலரங்கம்
26.1. 2024 – வெள்ளிக்கிழமை, காலை 10 – 12 மணி
இடம்: தெ.மேட்டுப்பட்டி அரசு மேல்நிலைப் பள்ளி

தமிழ் மரபு அறக்கட்டளையின் மதுரைக் கிளையின் சார்பாகக் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் பயிலரங்கம் தெ.மேட்டுப்பட்டி அரசு மேல்நிலைப் பள்ளியில் நடைபெற்றது.
குந்தவை நாச்சியார் அரசு கலைக்கல்லூரி பேராசிரியர் முனைவர் ஜே .ஆர். சிவராமகிருஷ்ணன் மற்றும் தமிழ்ப் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் துளசேந்திரன் அவர்களும் ராஜராஜ சோழன் காலத்துக் கல்வெட்டுகள் மற்றும் தொல்லியல் குறித்த தகவல்களை மாணவர்களுக்கு வழங்கினார்கள். தொல்லியல் துறையில் காணப்படும் வேலைவாய்ப்புகள் பற்றிய தகவல்களையும் அதற்கான படிப்புகள்

என்னென்ன உள்ளன என்பதையும் மாணவர்களுக்கு எடுத்துக் கூறினார்கள் .
முன்னதாக நிகழ்ச்சியின் வரவேற்பினைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு மூ. சந்திரன் அவர்கள் வழங்க, பயிலரங்க நோக்க உரையை நல்லாசிரியை திருமதி சுலைகா பானு அவர்கள் ஆற்றினார்கள். திரு மு. சேகர் அவர்கள் நன்றியுரை அளிக்க விழா இனிதே நிறைவுற்றது.




கல்வெட்டுப் பயிலரங்கினை நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்த பள்ளியின் தலைமை ஆசிரியர் மற்றும் ஆசிரியர்கள் அலுவலகப் பணியாளர்கள் அனைவருக்கும் நன்றி. சோழ மண்ணிலிருந்து பாண்டிய மண்ணிற்குப் பயணம் செய்து இன்முகத்துடன் பயிற்சியளித்த பேராசிரியர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையின் நன்றி.

வீரமாமுனிவர் நினைவுநாள் சிறப்புக் கருத்தரங்க நிகழ்ச்சி

தமிழ் மரபு அறக்கட்டளையின் கடிகை இணையவழிக் கல்விக்கழகம் கடந்த பிப்ரவரி மூன்றாம் தேதி வீரமாமுனிவர் நினைவு நாளையொட்டி ஜூம் செயலி மூலம் இணைய வழியில் கருத்தரங்கை நடத்தியது.

வீரமாமுனிவர் தமிழுக்கு ஆற்றிய பங்களிப்பைப் போற்றும் விதமாக மேலும் அது தொடர்பான ஆய்வுகளைத் தொடரும் விதமாக இந்தக் கருத்தரங்கு செயற்குழு உறுப்பினர்களால் வடிவமைக்கப்பட்டு இருந்தது.

தமிழ் மரபு அறக்கட்டளையின் தோற்றுநர்களில் ஒருவரான முனைவர் நா. கண்ணன் அவர்களின் வாழ்த்துரையோடு நிகழ்ச்சி தொடங்கியது. அடுத்ததாக, தமிழ் மரபு அறக்கட்டளையின் தலைவர் முனைவர் சுபாஷிணி “திருக்குறள் மொழிபெயர்ப்பும் + சித்திரக்கதைகள்” என்ற தலைப்பில் பேசினார்கள்.

ஐரோப்பியக் கத்தோலிக்கக் கிறிஸ்தவ சமயப் பணியாளர்கள் இந்தியாவில் ஆற்றிய சமயப்பணிகள் குறித்துத் தொடர்ந்து ஆய்வு செய்துவரும் முனைவர் ஆனந்த் அமலதாஸ் “வீரமாமுனிவர் படைப்புகளில் வரலாற்றுத் தகவல்கள்” என்ற பொருண்மையில் சிறப்புரை

ஆற்றினார். வீரமாமுனிவர் சிறந்த மருத்துவர் மற்றும் மருத்துவ முறைகள் எவை என்பதை அவருடைய படைப்புகளின் வாயிலாக முனைவர் ஆ. நிர்மலா “வீரமாமுனிவரின் தமிழ் மருத்துவ நூல்கள்- அமைப்பும் பாடுபொருளும்” என்ற தலைப்பில் சிறப்புரையாக வழங்கினார்.




பல்வேறு இடங்களிலிருந்து இந்தக் கருத்தரங்கத்தில் சுமார் 139 நபர்கள் பதிவுசெய்து கொண்டார்கள். இதில் கல்லூரி மாணவர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், பள்ளி ஆசிரியர்கள், தன்னார்வலர்கள் அடங்குவர். இவர்கள் ஆர்வமாகப் பங்கேற்று நிறையத் தகவல்கள் உள்வாங்கிக் கொண்டார்கள் மற்றும் நிறையக் கேள்விகளைக் கேட்டார்கள்..

பங்கேற்பாளர்களுக்கு மின் சான்றிதழ் வழங்கப்பட்டது.



# தமிழ் மரபு அறக்கட்டளை
# பன்னாட்டு அமைப்பின்




கடிகை முதன்மைநிலை இணையவழிக் கல்விக்கழகம் நடத்தும்

# வீரமாமுனிவர் நினைவு நாள்

## இணையவழி கருத்தரங்கம்

### தலைமையுரை



**முனைவர் க. சுபாஷிணி,**
,தலைவர், (ம) தோற்றுநர்,
தமிழ் மரபு அறக்கட்டளை
பன்னாட்டு அமைப்பு
இயக்குநர், கடிகை
தலைப்பு: வீரமாமுனிவர் திருக்குறள் மொழிபெயர்ப்பு + சித்திரக்கதைகள்

### வாழ்த்துரை



**முனைவர் நா. கண்ணன்**
இணைத் தோற்றுநர் (ம)
துணைத் தலைவர்
தமிழ் மரபு அறக்கட்டளை
பன்னாட்டு அமைப்பு

### சிறப்புரை – I



**முனைவர் ஆனந்த் அமலதாஸ்,**
இயக்குநர் (ஓய்வு),
சத்திய நிலையம் ஆய்வு நிறுவனம்
தலைப்பு: வீரமாமுனிவர் பாடல்களில் வரலாற்றுத் தரவுகள்

### சிறப்புரை – II



**முனைவர் ஆ. நிர்மலா**
தமிழ்ப் பேராசிரியர்
(இணைய வழி), மதுரை
தலைப்பு: வீரமாமுனிவரின் தமிழ் மருத்துவ நூல்கள்– அமைப்பும் பாடுபொருளும்

நாள்; பிப்ரவரி 3, 2024
இந்திய நேரம் மாலை
3 – 5 மணி

பதிவு செய்து கொள்ள






- கட்டணம் இல்லை
- மின் சான்றிதழ் வழங்கப்படும்
- தொடர்புக்கு: 9487220301; mythforg@gmail.com

கடிகை செயற்குழு உறுப்பினர் மற்றும் வேலூர் ஆக்சில்லியம் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் இந்துமதி நிகழ்ச்சியைத் தொகுத்துத் திறம்பட வழங்கினார்.

கடிகை செயற்குழு உறுப்பினர் மற்றும் செய்யாறு அறிஞர் அண்ணா கல்லூரிப் பேராசிரியர் முனைவர் மதுரைவீரன் நிகழ்ச்சிக்கான ஏற்பாடுகளை முழு ஈடுபாட்டுடன் செய்து தந்தார்.

இவர்கள் இருவருக்கும் நன்றி..

நிகழ்ச்சிக்கான திட்டமிடல், ஏறப்பாடு என்று எல்லா நிலையிலும் எங்களை வழி நடத்திய தலைவர் முனைவர் சுபாஷிணி அவர்களுக்கும் நன்றி.

வீரமாமுனிவர் நினைவுநாள் சிறப்புக் கருத்தரங்க நிகழ்ச்சி
காணொளி:
https://www.youtube.com/watch?v=YkdAOYMHrug

நன்றி

முனைவர் பாமா
கடிகைப் பொறுப்பாளர்

பல்லடம் அரசுக் கல்லூரியில் பன்னாட்டுப் பயிலரங்கம்

பல்லடம் அரசு கலை, அறிவியல் கல்லூரி தமிழ்த்துறை சார்பில் வேர்களைத் தேடி எனும் தலைப்பில் பன்னாட்டு பயிலரங்கம் புதன்கிழமை பிப்ரவரி 21, 2024 அன்று நடைபெற்றது.

கல்லூரி முதல்வர் மணிமேகலை தலைமை தாங்கினார். தமிழ்த்துறைத் தலைவர் ஜெயச்சந்திரன் வரவேற்புரையாற்றினார். இதில், கொரிய நாட்டுத் தமிழ் ஆய்வாளர் நா.கண்ணன், ‘கொரியா வரை செல்லும் தமிழ் வேர்கள்’ என்ற தலைப்பில் உரையாற்றினார்.



தஞ்சாவூர் அரசு மகளிர் கலைக் கல்லூரி உதவிப் பேராசிரியரும், தமிழகத் தொல்லியல் ஆய்வாளருமான முனைவர் சிவராமகிருஷ்ணன், ‘தமிழக அகழாய்வுகள் உணர்த்தும் தமிழரின் வாழ்வியல்’ என்ற தலைப்பில் உரையாற்றினார்.

இந்த நிகழ்ச்சியில் பேராசிரியர்கள் நாகரத்தினம், ஜெய்சிங், தமிழ்த் துறை பேராசிரியர்கள், மாணவர்கள் கலந்து கொண்டனர்.

‘கடல் கடந்த தமிழ்’ என்ற தலைப்பில் ஜெர்மனியின் தொழில் நுட்ப நிறுவனம் ஒன்றில் தலைமைக் கணினிப் பொறியாளராகப் பணியாற்றும் முனைவர் சுபாஷிணி உரையாற்றினார்.

கடல் கடந்த தமிழ்
-முனைவர்.க.சுபாஷிணி
https://youtu.be/Zf4JpJRFjgY

# இணையவழி திசைக்கூடல் நேரலைகள்

வேலூர் மாவட்ட நினைவுச்சின்னங்களும் அரசு அருங்காட்சியகமும்
— திரு.க.சரவணன், அருங்காட்சியகக் காப்பாளர், வேலூர்
திசைக்கூடல் – 348 [ஜனவரி 13, 2024]
https://youtu.be/QJqWTpG4PaQ

---

மட்டக்களப்பில் தம் மூதாதையருடன் உரையாடும் மூத்த பழங்குடியினர்
— முனைவர் சி. மௌனகுரு
திசைக்கூடல் – 349 [ஜனவரி 27, 2024]
https://youtu.be/GouXZ_AvHbo

தென்னிலங்கையில் மொழிகளும் வட்டார மொழி வழக்குகளின் சிறப்பும்
— முனைவர் தம்மிக்க ஜயசிங்க
திசைக்கூடல் – 350 [பிப்ரவரி 11, 2024]
https://www.youtube.com/watch?v=_l9nOXtLh2w

---

சயாம் – பர்மா மரண இரயில்பாதை - மறக்கப்பட்ட உண்மைகள்
— திரு.சந்திரசேகரன் பொன்னுச்சாமி,
திசைக்கூடல் – 351 [பிப்ரவரி 24, 2024]
https://youtu.be/jRTUIL_FQsk

தமிழ் நாட்காட்டி சீரமைப்பு
— முனைவர் தேமொழி
திசைக்கூடல் – 353 [மார்ச் 16, 2024]
https://youtu.be/FtJbXxvI8CQ

---

பனை நமது மரம்
– தமிழ் மரபு அறக்கட்டளை
பன்னாட்டு அமைப்பின் சிறப்பு நிகழ்ச்சி
திசைக்கூடல் – 354 [மார்ச் 23, 2024]
https://youtu.be/gKZ3n97Rbes

# தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பக நூல் வெளியீடுகள்



பொருள்முதல் பார்வையில் ஆதிசங்கரரின் அத்வைதம்-நூல் வெளியீடு

தோழர் அ. கா. ஈஸ்வரன் அவர்களது ‘பொருள்முதல் பார்வையில் ஆதிசங்கரரின் அத்வைதம்’ என்ற தலைப்பிலான தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் வெளியீட்டை ஜனவரி 13, 2024 அன்று சென்னை புத்தகக் கண்காட்சி நிகழ்ச்சியில் கதவு பதிப்பக தோழர் மதிகண்ணன் அவர்கள் வெளியிட்டார். தோழர்கள் சுந்தரசோழன், ஜனார்த்தனன் ஆகியோர் மற்றும் ஏனைய தோழர்களும் வந்திருந்து நிகழ்ச்சியைச் சிறப்பித் தார்கள்.நூலின் ஆசிரியர் அ கா ஈஸ்வரன் அவர்கள் இறுதியில் ஏற்புரை வழங்கி நிறைவு செய்தார்.

"ராஜராஜனின் கொடை - ஆனைமங்கலம் செப்பேடுகள், சோழப் பேரரசுக்கும் ஸ்ரீவிஜயப் பேரரசுக்குமான வணிகத் தொடர்புகள், நாகப்பட்டின சூளாமணி விகாரை மற்றும் கடாரப் படையெடுப்பு" என்ற தலைப்பில் அமைந்த முனைவர் க. சுபாஷிணியின் நூல் சென்னை அனைத்துலக புத்தகக் கண்காட்சியில் அரபு மலாய் ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளில் மொழிபெயர்ப்பதற்குக் கையெழுத்திடப்பட்டுள்ளது.



## 47 ஆவது சென்னை புத்தகக் கண்காட்சியில் தமிழ் மரபு அறக்கட்டளை நூல்கள்

தமிழ் மரபு அறக்கட்டளை நூல்கள்

கீழ்க்காணும் புத்தகக் கடைகளில் கிடைக்கும்:

✓ ஆழி பதிப்பகம் அரங்க எண் 501-502

✓ ஜெய்பீம் ஃபவுண்டேஷன் அரங்க எண் 101

✓ எமரால்ட் & எழிலினி அரங்க எண் F58 & 459

CHENNAI BOOK FAIR

47 ஆவது சென்னைப் புத்தகக் காட்சி
நந்தனம் ஒய். எம். சி. ஏ மைதானம்
ஜனவரி 3 — ஜனவரி 21, 2024

## புதிய நூல்கள் வெளியீடு



# தமிழ் மரபு அறக்கட்டளை மரபுக் காணொளி வெளியீடு




கதிர்காமம் கோயிலுக்குத் தல வழிகாட்டியாக இயக்கர் குலப்பெண்கள்
https://youtu.be/3Ftr43BuPek

---




தமிழ் மரபு அறக்கட்டளையின் மண்ணின்குரல் மரபுக்காணொளி:
தேன் சேகரிக்கும் இயக்கர் குலப்பெண்கள் (திரிகோண மலை, இலங்கை)
நேர்காணல் முனைவர் க. சுபாஷிணி
https://youtu.be/R3i1iYfzrek




மட்டக்களப்பு தமிழர் தாய்வழிச் சமூகம், குடிமுறைப் பண்பாடும் வழிபாட்டு முறைகளும் – முனைவர் சிவரத்தினத்துடன் ஓர் நேர்காணல்
https://youtu.be/oKAS8Uu3_VI

---




மட்டக்களப்பு தமிழர்களின் கண்ணகி வழிபாடு – முனைவர் சிவரத்தினத்துடன் ஓர் நேர்காணல்
நேர்காணல் முனைவர் க. சுபாஷிணி
https://youtu.be/Pb3L4dmaGpw




மட்டக்களப்பு தமிழர்களின் பண்பாட்டுப் பதிவுகளாக ஓவியர் குலராஜ் அவர்களின் ஓவியங்கள்
https://youtu.be/5_qf-v6DyaM

---




தமிழர் மரபு விளையாட்டு: பெரிய தாயம்
https://youtu.be/JuiMWChdzfQ

# சுவலி — ஒலிநூல்கள்




தமிழறிஞர் மா. இராசமாணிக்கனார் – எழுதிய "புதிய தமிழகம்" நூலைக் கேட்டு மகிழலாம்.
நூலை வாசித்து உதவியவர் – ஸ்ரீதேவி
https://suvali.tamilheritage.org/புதிய-தமிழகம்/

---




தமிழறிஞர் ஏ.கே.வேலவன் – எழுதிய வரலாற்றுக்காப்பியம் சங்ககாலம் – முதல் பகுதி நூலைக் கேட்டு மகிழலாம்.
நூலை வாசித்து உதவியவர் சரோஜா இளங்கோவன்.
https://suvali.tamilheritage.org/வரலாற்றுக்காப்பியம்-சங்/

## நூல் அறிமுகம் நிகழ்ச்சிகள்




நூல் அறிமுகம் நிகழ்ச்சிகள்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு மதுரைக்கிளை வழங்கும் . . . ஜனவரி மாத நூல் அறிமுகம்
கல்வெட்டு ஆய்வாளர் துரை சுந்தரம்
அவர்களின் . . .
கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள்
நூல் அறிமுகம், கலந்துரையாடல்
நூலறிமுகம் செய்பவர்
திருமிகு அ. ஷீலா
ஆசிரியை கூடக்கோயில் நாடார்கள் மேல் நிலைப் பள்ளி
காணொளி:
https://www.facebook.com/TamilHeritageFoundation/videos/1976484769413462

தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும் நூல் அறிமுகம்

நூல் அறிமுகம் நிகழ்ச்சிகள்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு மதுரைக்கிளை வழங்கும் . . . பிப்ரவரி மாத நூல் அறிமுகம்
[24-2-24 – மாலை 5:30 மணிக்கு]




முனைவர் கோ.சசிகலா அவர்களின் . . .
தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும்
நூல் அறிமுகம், கலந்துரையாடல்
நூலறிமுக உரை: திருமிகு நித்யா சுப்ரமணியன்
காணொளி:
https://www.facebook.com/TamilHeritageFoundation/videos/1466056284007254

கல்விக் கொடை கள்



தமிழர் புலப்பெயர்வு உலகளாவிய பயணங்கள் குடியேற்றங்கள் வரலாறு என்ற தலைப்பில் வெளிவந்திருக்கும் முனைவர் க. சுபாஷிணியின் நூலின் ஒரு பிரதி யாழ்ப்பாணம் நூலகத்தில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதனை நேரில் சென்று தமிழ் மரபு அறக்கட்டளையின் செயற்குழு உறுப்பினர் கதிரவன் யாழ்ப்பாணம் நூலகத்தில் ஜனவரி 19, 2024 அன்று வழங்கினார். யாழ்ப்பாணத்தில் வசிக்கின்ற தமிழ் அலுவலர்கள் யாழ்ப்பாண நூலகத்திலிருந்து இந்த நூலை பெற்று வாசிக்கலாம்.



ஜெர்மனியில் உள்ள கெல்ன் பல்கலைக்கழகம் மிகப் பழமையான தமிழ் இருக்கை கொண்ட ஒரு பல்கலைக்கழகம் ஆகும். இதில் இயங்கும் தமிழ்த் துறைக்கு மார்ச் 28, 2024 அன்று தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் வெளியிட்ட நூல்கள் தமிழ்த் துறைக்கு நன்கொடையாக வழங்கப் பட்டது. தமிழ்த் துறை பொறுப்பாளர் முனைவர் ஸ்வென் பெற்றுக்கொண்டார்.





# ශ්‍රී ලංකා නැගෙනහිර විශ්වවිද්‍යාලය
# கிழக்குப் பல்கலைக்கழகம், இலங்கை
# EASTERN UNIVERSITY, SRI LANKA

මගේ අංකය / எமது இல. / My No. } EUSL/FGS/BOS/2.06

ඔබේ අංකය / உமது இல. / Your No. }

Faculty of Graduate Studies,
01/04/2024.

Dear Student ,

**Registration of candidature at the Faculty of Graduate Studies – Master of Philosophy Academic year 2023/2024**

I am glad to inform you that the Board of Graduate Studies at its 10th meeting held on 27/03/2024 recommended permission to register you at the Faculty of Graduate Studies under the Board of Study of Aesthetics Studies for Master of Philosophy Postgraduate Degree Programme, Faculty of Graduate Studies, Eastern University, Sri Lanka, subject to recommendation of the Senate of Eastern University, Sri Lanka

In this regard, you are therefore requested to register yourself with the University on 09/04/2024 and submit the following documents for registration to **Senior Assistant Registrar, Faculty of Graduate Studies, Eastern University, Sri Lanka.** The necessary forms are sent herewith.

1. Duly completed Registration Form.
2. Passport size photograph – 02 NOS
3. Paying-in-Voucher as proof of payment of fees prescribed by the University. Payment should be made to the credit of Bursar, Eastern University, Sri Lanka A/C No: 227-1001-90000-390, Peoples Bank, Chenkalady, payment may be made at any branch of the Peoples Bank. The necessary forms are sent herewith.

**Fees to be made are**

| | | |
|---|---|---|
| Registration fee | Rs. | 5,000.00 |
| Course Fees | Rs. | 190,000.00 |
| Non - Refundable Library Fee | Rs. | 5,000.00 |
| Others | Rs. | 3,000.00 |
| **Total** | **Rs.** | **203,000.00** |

**Note: The payment applicable should be paid as the first instalment of the total fee payable. [1st instalment Rs 103,000.00, 2nd instalment Rs 100,000.00]**

For further details, please contact **Senior Assistant Registrar/Faculty of Graduate Studies via 0652240972.**

Thank you,

Yours faithfully,

Senior Assistant Registrar
Faculty of Graduate Studies
Eastern University, Sri Lanka.

**A Sujendran**
**Actg. Snr. Asst. Registrar & Secretary to the Faculty of Graduate Studies**

Cc: Dean/ FGS
Director/ FGS
Chaiman/Board of Study of Aesthetics Studies


වන්තාරුමූලෙයි චෙන්කලඩි
ශ්‍රී ලංකා
வந்தாறுமூலை, செங்கலடி,
இலங்கை
Vantharumoolai, Chenkalady,
Sri Lanka

General: 0652240490/2240589/2240590
Fax: 0652240730
E-mail: reception@esn.ac.lk
Website: www.esn.ac.lk

Vice-Chancellor : 065-2240531
Fax : 065-2240549
Registrar : 065-2240533
Fax : 065-2240585
Bursar : 065-2240212
Fax : 065-2240974

இலங்கையின் பூர்வகுடி சமூகத்தைச் சார்ந்த மாணவர் ஆய்வாளர் பத்திநாதனின் உயர்கல்விக்கு நன்கொடை கேட்டு இவ்வாண்டின் தொடக்கத்தில் தகவல் பகிர்ந்திருந்தோம். அந்த வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் செயற்குழுவினரும் சில நண்பர்களும் வழங்கிய தொகையை அவருடைய கல்விக்கான நன்கொடையாக மாணவர் பத்திநாதன் அவர்களுக்கு அனுப்பியிருந்தோம்.

அவருக்கு இலங்கையில் சிறப்பு வாய்ந்த கிழக்கு பல்கலைக்கழகத்தில் எம்ஃபில் ஆய்வில் இணைய இடம் கிடைத்துள்ளது. இவர் சிறந்த ஆய்வாளர். பூர்வகுடி மக்களின் வரலாற்றையும் வாழ்வியலையும் ஆவணப்படுத்தும் பணியில் ஈடுபட்டிருப்பவர். அவர் உயர்கல்வியில் சிறந்து விளங்க வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம். இந்த மகிழ்ச்சியான செய்தியைப் பகிர்ந்து கொள்வதில் மகிழ்கின்றோம். இணைந்து உதவியர்களுக்கு மனமார்ந்த நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

## தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பக நூல்கள்



தமிழ் மரபு அறக்கட்டளையின் பதிப்பக நூல்களை சென்னையில். டிஸ்கவரி புக் பேலஸ்; ஆழி பதிப்பகம்; எமரால்ட் பதிப்பகம் ஆகிய இடங்களில் நேரில் வாங்கலாம்

நூல்களை இணையம் வழியாக கீழ்க்காணும் தளங்களில் பெறலாம்:
https://www.commonfolks.in/books/tamil-heritage-foundation

https://wisdomkart.in/books-publication/tamil-heritage-foundation/

## தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பக நூல்கள்

| எண் | தலைப்பு | ஆசிரியர் | வெளியீடு | விலை |
|---|---|---|---|---|
| 1 | திருவள்ளுவர் யார் ? | கௌதம சன்னா | 2021 | ரூ. 200 |
| 2 | நாகர் நிலச்சுவடுகள் - இலங்கையில் சில நாட்கள் | மலர்விழி பாஸ்கரன் | 2020 | ரூ. 100 |
| 3 | அறியப்பட வேண்டிய தமிழகம் | முனைவர் க. சுபாஷிணி | 2021 | ரூ. 80 |
| 4 | கீழக்கரை வரலாறு | எஸ். மஹ்மூது நெய்னா | 2021 | ரூ. 300 |
| 5 | கொங்குநாட்டுக் கல்வெட்டுகள் | துரை சுந்தரம் | 2021 | ரூ. 160 |
| 6 | கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள் | துரை சுந்தரம் | 2021 | ரூ. 140 |
| 7 | தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும் | முனைவர் கோ. சசிகலா | 2021 | ரூ. 180 |
| 8 | வரலாற்றில் பொய்கள் | முனைவர் தேமொழி | 2021 | ரூ. 100 |
| 9 | கல்வெட்டில் தேவதாசி | முனைவர் எஸ். சாந்தினிபீ | 2022 | ரூ. 150 |
| 10 | விளையாடிய தமிழ்ச்சமூகம் | முனைவர் ஆ. பாப்பா | 2022 | ரூ. 300 |
| 11 | ராஜராஜனின் கொடை | முனைவர் க. சுபாஷிணி | 2022 | ரூ. 180 |
| 12 | கணிதவியல் - பொதுக் கட்டுரைகள் | முனைவர் ப. பாண்டியராஜா | 2022 | ரூ. 180 |
| 13 | இலக்கிய மீளாய்வு | முனைவர் தேமொழி | 2023 | ரூ. 150 |
| 14 | வரலாற்று ஆய்வில் களப்பணிகள் | முனைவர் க. சுபாஷிணி | 2023 | ரூ. 120 |
| 15 | தமிழகத்தில் பௌத்தம் | முனைவர் தேமொழி | 2023 | ரூ. 120 |
| 16 | நிலவியல் நோக்கில் கங்கைகொண்ட சோழபுரம் வரலாறு | முனைவர் ஜெ.ஆர்.சிவராமகிருஷ்ணன் | 2023 | ரூ. 300 |
| 17 | இராஜேந்திர சோழனின் ஒட்ர நாடு வெற்றி | முனைவர் ஜெ.ஆர்.சிவராமகிருஷ்ணன் | 2023 | ரூ. 90 |
| 18 | நீலக்கடல் முழுவதும் கப்பல் விடுவோம் | நரசய்யா | 2023 | ரூ. 150 |
| 19 | பொருள்முதல்வாதப் பார்வையில் ஆதிசங்கரரின் அத்வைதம் | அ. கா. ஈஸ்வரன் | 2023 | ரூ. 180 |
| 20 | பத்துப்பாட்டில் சொல்லோவியங்கள் (தொகுதி 1) | முனைவர் ப. பாண்டியராஜா | 2023 | ரூ. 250 |
| 21 | பத்துப்பாட்டில் சொல்லோவியங்கள் (தொகுதி 2) | முனைவர் ப. பாண்டியராஜா | 2023 | ரூ. 250 |
| 22 | நக்கீரர் நடைப்பயணம் (நெடுநல்வாடை) | முனைவர் ப. பாண்டியராஜா | 2023 | ரூ. 180 |
| 23 | தமிழர் புலப்பெயர்வு | முனைவர் க. சுபாஷிணி | 2024 | ரூ. 500 |
| 24 | கொரியாவில் தமிழ்ச் சுவடுகள் | முனைவர் நா. கண்ணன் | 2024 | ரூ. 220 |

